
உங்களுக்கு
முற்றிலும் புது
மாதிரியான
இரு பவுடர்கள்
"GOKUL"
SANTOL
TOILET POWDER
GOKUL
SANDAL
TOILET POWDER






"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.



பின்னியின் **சில்க் புடவை** அணிந்து

**ராணி** போல் எழிலுடன் திகழுங்கள்



எங்களிடமிருந்து வாங்குங்கள்

# வெங்கடேஷ் வஸ்திராலயா

ரீடெய்ல் ஷோ ரூம்கள்

ஹைகோர்ட் எதிரில் & 2. தம்புசெட்டி தெரு. மதராஸ்–1.

**ஷோரூம் நெ. 1** இங்கு நாங்கள் பெங்களூர் உல்லன், காட்டன் & ஸில்க் மில்லில் உற்பத்தியான துணிகளை மட்டும் விற்கிறோம்.

**ஷோரூம் நெ. 2** இங்கு நாங்கள் பக்கிங்ஹாம் & கர்நாடிக் மில்லில் உற்பத்தியான துணிகளை மட்டும் விற்கிறோம்.

**ஷோரூம் நெ. 3** இங்கு நாங்கள் பின்னி மில்லில் உற்பத்தியான துணிகளையும் மற்றும் இதர உயர்ந்த ரக துணிகளையும் விற்கிறோம்.

VV 172



மலர் 17 | இதழ் 23

தமிழ்த்திரு நாடு தன்னைப்—பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா—பாரதியார்

ஹேவிளம்பி | மார்கழி 21

# இலங்கைக்கு உதவி புரியுங்கள்

இயற்கை செய்த கொடுமை காரணமாக அவதியுறும் இலங்கைச் சகோதரர்களுக்கு நமது ஆழ்ந்த அனுதாபங்களைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

உலகில் எந்த நாடு துயர் உற்றாலும் பாரத நாட்டில் இவ்வளவு அனுதாபம் காண்பது அரிது. இலங்கைக்குத் துயர் என்றால் பாரதத்துக்கே பெருந்துயர் நேர்ந்தாற் போன்ற உணர்ச்சி இந்த நாட்டில், முக்கியமாக, தமிழ் மக்களுக்கு ஏற்பட்டிருக்கிறது!

சென்ற ஐம்பது வருஷத்தில் கண்டறியாத பெருமழை இலங்கையில் பெய்திருக்கிறது. இலங்கைத் தீவு வெள்ளத்தில் அழுந்திக் கிடக்கிறது. தொண்ணூறு சதுர மைல் பரப்புள்ள பராக்கிரமசமுத்திரம் என்னும் செயற்கை ஏரி உடைப்பெடுத்துக் கொண்டிருக்கிறது என்றால் எவ்வளவு தொல்லைகள் விளைவித்திருக்கக்கூடும் என்பதை யாரும் ஊகிக்கலாம். சுமார் ஒரு லட்சம் வீடுகள் வெள்ளத்தினால் சேதமடைந்திருக்க வேண்டும் என்று இலங்கை அரசாங்கத்தார் கூறுகின்றனர். அப்படியானால் எத்தனை லட்சக் கணக்கான மக்கள் வீடு இழந்து, தங்க இடமின்றி, உண்ண உணவின்றி, உடுக்க உடையின்றித் தவித்துக் கொண்டிருக்கிறார்களோ!

இந்த மாபெரும் துர்ச்சம்பவத்தைச் சமாளிக்க இலங்கை சர்க்கார் இந்திய சர்க்காரை உதவி கேட்டதும், நமது ராணுவ விமானப்படை உணவுப் பொட்டலங்களுடனும், 'ஹெலிகாப்டர்' ஆகாய விமானங்களுடனும் இலங்கைக்கு விரைந்திருக்கிறது. இன்னும் உதவி தேவைப்பட்டால் உடனடியாக உதவியளிக்கப் பங்களூரிலும், பூனாவிலும் ஆகாய விமானங்களும், உணவுப் பொருள்களும் தயாராக வைத்துவிட்டுச் சென்றிருக்கிறது.

உடுக்கை இழந்தவன் கைபோல ஆங்கே
இடுக்கண் களைவதாம் நட்பு!

பாரத சர்க்கார் ஒரு கணமும் தாமதியாமல் இலங்கை மக்களுக்கு உதவுவதற்கு முன்வந்ததைப் பாராட்டுகிறோம். நண்பர்களின் தரத்தை அளந்துவிட ஒரு வாய்ப்பு கிடைத்தது.

தமிழ் மக்கள் தாராளமான குணம் படைத்தவர்கள். வாடிய பூங்கொடியைக் கண்டே உருகிய வள்ளல்களைப் பெற்றெடுத்த புண்ணிய பூமி தமிழ் பூமி. இலங்கை மக்களில் தமிழ் பேசும் மக்களை நம்முடைய மக்கள் என்று சொல்லி வந்தோமல்லவா? அவர்கள் வெள்ளத்தின் கொடுமையினால் கஷ்டப்படும்போது இரண்டு கைகளினாலும் வாரி வாரிக் கொடுத்தோமானால் அந்தத் தமிழ் உரிமை உறுதிப்படும். அதற்கு பட்சிராஜா ஸ்டுடியோ அதிபர் திரு எஸ். எஸ். ஸ்ரீராமுலு நாயுடு அவர்கள் இருபத்தையாயிரம் ரூபாய் நன்கொடை அனுப்பியிருக்கிறார். ஆபத்துக்கு உதவுதலே பணம்படைத்த பயன். அதைச் செய்துகாட்டிய திரு ஸ்ரீராமுலு நாயுடு அவர்களைப் பாராட்டுகிறோம். அவரைப் பின்பற்றிச் செல்வந்தர்கள் எல்லாம் இலங்கை மக்களுக்கு உதவிபுரிய முன்வர வேண்டும்.

# ஆட்சிமொழி விவகாரம்

## இந்திக்குத் தோல்வி

சென்ற ஒன்பது மாத காலமாகப் பஞ்சாப் ராஜ்யத்தில் பஞ்சாப் மொழிக்கும், இந்தியாளைக்கும் பலத்த போராட்டம் நடந்து வந்தது. இந்தியாளர்கள் மறியல்கள் செய்தும், குழப்பங்கள் நடத்தியும் சுமார் ஐயாயிரம் பேர்கள்வரை சிறை சென்றனர். முடிவில் அந்தப் போராட்டம் பயனில்லை என்று வாபஸ் பெறப்பட்டது! பஞ்சாபி மொழியே இருக்க வேண்டுமென்ற பஞ்சாபியர் சார்பில் நியாயம் இருந்தது.

நேர்மைக்கும் நியாயத்துக்கும் விரோதமான எந்தப் போராட்டமும் நீடிக்காது. இரு மொழிகளுக்கிடையிலுள்ள வித்தியாசம் சொற்பம். ஆயினும் பஞ்சாபி பேசும் சீக்கியர்கள் தங்கள் மொழியைக் காப்பாற்றிக் கொண்டனர். மத்திய சர்க்கார் மொழியென்று இந்தியை எத்திசையிலும் திணிக்கும் அடாத செய்கையும் நிச்சயம் படுதோல்வியடையும் என்பதில் நமக்குச் சிறிதும் சந்தேகமில்லை!

## ஆரம்பமாகி விட்டது!

தபால் கார்டுகளிலும், மணியார்டர் பாரங்களிலும்தான் இந்தி திணிக்கப்பட்டிருக்கிறது என்பதில்லை. ஓய்வு பெறாமல் 1965-க்குப் பிறகும் வேலை செய்யக்கூடிய உத்தியோகஸ்தர்களுக்கெல்லாம் இப்பொழுதிலிருந்தே மத்திய சர்க்கார் இந்தி வாத்தியார் வைத்து இந்தி கற்றுக்கொடுக்க முயற்சி செய்து வருகின்றனர்.

1965லிருந்துதான் இந்தி என்றில்லை. அது இப்போது பிடித்தே ஏன், ஒரு வருஷத்துக்கு முந்தியிருந்தே திணிக்க ஆரம்பித்து விட்டார்கள்! ராஜாஜி சொன்னதுபோல் ஒருவன் பதினெட்டு வயதில் மேஜராகிறான் என்றால், அது திடீரென்று பத்தொன்பதாவது ஆண்டு முதலில் வருவதில்லை. ஒவ்வொரு வருஷமாகக் கடந்துதான் பதினெட்டாவது வயதைப் பிடிக்கிறான். அதனால் 1965லிருந்துதான் இந்தி ஆரம்பிக்கப் போகிறார்கள் என்பதில்லை. இப்பொழுதே ஆரம்பமாகும்!

'புதிதாக இப்பொழுது இந்தியைக் கற்றுக்கொண்டு உத்தியோகம் நடத்தினால் சர்க்கார் உருப்பட்டாற் போலத்தான்' என்று இந்தி கற்றுக்கொண்டு வரும் உத்தியோகஸ்தர்களே சொல்லி வருகிறார்கள்!

## பாலுக்கும்காவல் பூனைக்கும் தோழன்

இந்தியும் ஆங்கிலமும் மத்திய ஆட்சி மொழியாக இருக்கலாம் என்று சென்னை சர்க்கார் செய்துள்ள தீர்மானம் பாலுக்கும் காவல், பூனைக்கும் தோழன் என்பதுபோல் இருக்கிறது! ஆனால் இந்த முடிவுக்குச் சென்னை சட்டசபையிலுள்ள எல்லாக் கட்சித் தலைவர்களும் உடன்பட்டிருப்பதாகச் சொல்வதுதான் நமக்கு விந்தையாக இருக்கிறது. தி.மு.க. தலைவர் அண்ணாதுரை, கா. சீ. க. தலைவர் ராமசாமி முதலியார் உள்பட இதற்கு ஒப்புக் கொண்டிருக்கிறார்கள் என்று சர்க்கார் தரப்பில் சொல்லப்படுகிறது. ஆனால் சென்ற வாரம் சென்னையில் நடைபெற்ற ஆட்சி மொழி மகாநாட்டில் திரு ராமசாமி முதலியாரும், திரு நெடுஞ்செழியனும் பேசியதிலிருந்து ஆங்கிலமே ஆட்சி மொழியாக இருக்க வேண்டும் என்ற முடிவுக்கு அவர்கள் வந்து விட்டார்கள் போல் காணப்படுகிறது. உண்மையை எதிர்க் கட்சித் தலைவர்களும் சர்க்காரும் ஐயந்திரிபறப் பொதுமக்களுக்கு விளக்க வேண்டும். 29-ம் தேதி ஞாயிற்றுக்கிழமை கா. சீ. க. அங்கத்தினர் திரு மாரிசாமி, "இந்தியைத் திணிப்பதை ஐம்பது வருஷங்களுக்கு ஒத்திப்போட வேண்டும் என்று எங்கள் கட்சி ஏற்கெனவே முடிவு செய்திருந்தது. ஆனால் நேருஜியின் பேச்சைக் கேட்ட பிறகு ஐம்பது வருஷம் இல்லை, ஐந்நூறு வருஷங்களுக்கு ஒத்திப் போடவேண்டும் என்று முடிவு கட்டி விட்டோம்" என்றார்.

## ஒரு நண்பர்

பாரதப் பிரதமர் பண்டித ஜவாஹர்லால் நேரு அவர்கள், ஆட்சிமொழி சம்பந்தமாகத் தென்னகத்தின் பெருந் தலைவர்கள் கூடியதையும், தீர்மானம் செய்ததையும், செயற் குழு அமைத்ததையும் கண்டு கோபமடைந்து பேசியிருக்கிறார்.

இது தென்னக மக்களுக்குப் பெருத்த கோபமும் ஆத்திரமும் மூட்டி யிருக்கிறது!

அதிலும் மொரார்ஜி தேசாயின் உளறல் சொல்லி முடியாத கோபத்தை வளர்த்திருக்கிறது.

இதோ ஒரு நண்பர் இந்தச் செய்தி பத்திரிகைகளில் வந்த அன்றே ராஜாஜிக்குத் தமது உணர்ச்சிகளைக் கொட்டி எழுதியிருக்கிறார். அதை அப்படியே கீழே தருகிறோம்.

அன்பார்ந்த தலைவர் அவர்களுக்கு

அநேக கோடி நமஸ்காரம். இன்று காலை செய்தித் தாள்களில் வெளியான ஸ்ரீ தேசாயின் பிரசங்கத்தையும் பண்டித நேரு அவர்களின் கண்டனப் பேச்சையும் படித்த பிறகு இந்தக் கடிதத்தைத் தங்களுக்கு எழுதலானேன். தங்களையும் தாங்கள் கூறும் விஷயங்களையும் புரிந்து கொள்ளாமல் பேசுபவர்கள் தங்களை எதிரியாக நினைப்பவர்கள் மட்டுமல்ல, தங்களோடு தோளோடு தோளாக, சுயராஜ்யத்துக்காக உழைத்தவர்களும் என்பது தெரியவரும் பொழுது மனத்தை மிகவும் சங்கடப்படுத்துகிறது. அதோடு இந்தத் தேசத்தின் எதிர்காலத்தைப்பற்றி நினைக்கவும் அச்சமேற்படுகிறது. ஸ்ரீ நேரு பிரசங்கத்தின் சாராம்சம் தம்மை அதாவது தாங்கள் கூறியவைகளைக் கண்களால் பார்க்கவும் இல்லை; அதைப்பற்றிச் சிந்திக்கவும் இல்லை என்பதுதான். ஸ்ரீ மொரார்ஜி தம்மை இரண்டாவது நேருவாக நினைத்துக் கொண்டு வருகிறார் என்பது வெள்ளிடைமலை. அறியாமையினுக் அனுபவமில்லாதவர்களும், சர்வாதிகாரத்தில் திளைத்திருப்பவர்களும் பேசும்படியான பேச்சு அது. ஆயினும் இதனாலெல்லாம் மனம் தளராது நாட்டு மக்க

ளுடைய தலைமையே பேணிப் பாடுபட்டு வரும் தங்களைப்பற்றி நினைக்கும்போதெல்லாம் மெய் சிலிர்க்கிறது. தன் காரியத்தில் புது ஊக்க மேற்படுகிறது. பாரத நாட்டின்மீது ஆண்ட வன் கருணையேகருணை. தாங்கள் நீடூழி வாழ்க.

## ஒரு வார்த்தை

இந்தி பிரசார சபையில் சத்தியநாராயணு அவர்கள் பேசிய பேச்சை யாரும் பொருட் படுத்த வேண்டியதில்லை. நிதிமந்திரி ஸி. சுப்பிரமணியம் அவர்கள் அந்தக் கூட்டத்தி லேயே நேர்மையாக இந்தி மொழிப் பிரச்னை யைப் பற்றிப் பேசியிருக்கிறார். இருபது முப்பது ஆண்டுகள் இடைவிடாமல் ராஜாஜி, ஸி. பி. ராமசுவாமி அய்யர் இந்தி பிரசாரம் செய்வதற்கு உதவி செய்து வந்திருக்கிறார்கள். இப்போதும் அவர்கள் விரோதிகள் அல்ல. இந்தி பிரசாரம் எவ்வளவு நடந்த போதிலும் மக்களுக்கு மற்றத் துறைகளில் எவ்வளவு உப யோகமான போதிலும் ஆட்சி மொழியாவ தற்கு இந்திக்குத் தகுதி இல்லை. அந்த மொழிக்கு அந்தப் பதவி தந்தால், தென்னக மக்கள் கஷ்டப்படுவார்கள். இது உண்மை என்பதை உணர்ந்து ஆட்சி மொழியாக இந்தி வேண்டாம் என்கிறார்கள். முப்பது வருஷ அனுபவத்திலிருந்து சொல்கிறார்கள். இந்தி ஆதரவாளரான தமிழ்த் தலை வர்கள் இந்தியையும் வடநாட்டாரையும் வெறுப்பவர்கள் அல்ல. தேச மக்களின் நல னில் அக்கறை கொண்டே இந்த முடிவுக்கு வந்திருக்கிறார்கள். அண்டை ராஜ்யங்களி லுள்ள மக்களின் மொழிகளைப் படிக்க வேண்டியது. மக்களின் முன்னேற்றத்துக்கு அவசியம். அதற்காக இந்திப் பிரசாரம் அவசி யம். ஆட்சி மொழி என்பது வேறு. நாற்பது ஆண்டுகளுக்கு முன் இந்திப் பிரசாரம் ஆரம் பித்த போது இந்தியே ஆட்சி மொழியாகப் படும் என்று யாராவது சொல்லியிருந்தால் வேண்டாம் என்று கூறியிருப்பேன் என்று ராஜாஜி விளக்கமாகச் சொல்லியிருக்கிறார்: ராஜாஜியோடு நெருங்கிப் பழகித் தொழிற் செய்து வந்த சத்யநாராயணு அவர்கள் நேர்மையற்ற முறையில் மட்டத்தனமாகப் பேசியிருக்கிறார்: தமிழ் மக்களுக்கு ஆத்திரம் ஊட்டும் வகையில் பேசி யிருக்கிறார்: ஸ்ரீ ஆர். வி. கிருஷ்ணய்யர் சொன்னது போல் ராஜாஜி போன்ற தலைவர்கள் இதில் ஈடுபட் டிருப்பதால் மக்கள் சண்டையிலும் கலவரத் திலும் இறங்காமல் இருக்கிறார்கள்:

சத்யநாராயணு அவர்கள் நம்முடைய பேச்சைக் கேட்பதாக இருந்தால் ஒன்று சொல்வோம். இந்தி பிரசார வேலையில் அர சாங்க மொழிப் பிரச்னை விஷயத்தைப் புகுத்த லாகாது. மொழிப் பிரச்னை ஒரு அரசியல் விவகாரம்! மொழியை மக்களுக்குச் சொல் லித் தருவதிலும் அதற்கு வேண்டிய பரீட்சை புஸ்தக வெளியீடு முதலிய காரியங்களில் மட் டும் இந்தி பிரசாரத் தொண்டர்கள் ஈடுபட வேண்டும். அரசியல் மொழி விவகாரத்தில் இறங்காமல் இருக்க வேண்டும். இறங்கினுல் இந்திப் பிரசாரத்துக்கு இடையூறு ஏற்படும்;

## வங்கத்தில் எதிரொலி

ஆட்சி மொழி விஷயத்தில் சென்னைத் தலைவர்களைப் பின்பற்றி வங்கத்திலும் முடிவு செய்திருக்கிறார்கள். மத்திய சர்க்காரின் ஆட்சிமொழி ஆங்கிலமாகவே இருக்க வேண் டும் என்று முடிவு செய்திருக்கிறார்கள். இதை வற்புறுத்த ஒரு செயற் குழு அமைத்திருக் கிறார்கள். இந்தக் குழுவினர் சென்னைக் குழு வுடன் இணைந்த முறையில் வேலை செய்யத் திட்டமிட்டிருக்கிறார்கள்!

# இந்தியன் பாங்கியின் பொன்விழா

தீமையிலிருந்து சில சமயம் நன்மை விளையக்கூடும் என்று யாராவது சொன்னுல் சாதாரணமாக யாரும் நம்ப மாட்டார்கள். ஆனுல் அப்படியொரு அதிசயம் ஐம்பதாண்டு களுக்கு முன் நிகழ்ந்திருக்கிறது.

அந்த நாட்களில் அர்பூத்நாட் பாங்க் என் பது மிகப் பிரசித்தி பெற்ற மேனுட்டு பாங்கி. அது சற்றும் எதிர்பாராத வகையில் மூழ்கி யது. பலர் பெரு நஷ்டமடைந்தார்கள்! பணம் படைத்தவர்கள் மனம் முறிந்திருந்தது.

அந்த நிலைமையில் மிகுந்த தைரியத்தோடு ஸ்ரீமான் வி. கிருஷ்ணஸ்வாமி அய்யர் தென் இந்தியப் பிரமுகர்களைக் கொண்டு ஒரு பாங்கி ஆரம்பிக்க வேண்டும் என்று தீர்மானித்தார். அந்த மகானுடைய முயற்சியில் ஏற்படுத்தப் பட்டதுதான் இந்தியன் பாங்கி. அதற்கு இப் பொழுது ஐம்பதாண்டுகள் ஆகிவிட்டன! அதன் பொன் விழாவைச் சென்ற வாரம் வெகு விமரிசையாகக் கொண்டாடினுர்கள்.

ஐம்பதாண்டுகளுக்கு முன் இந்த பாங்கியை ஆரம்பித்த முதல் டைரக்டர்களுள் ஒருவர் டாக்டர் ஸி. பி. ராமஸ்வாமி அய்யர். அவர் இந்தப் பொன் விழாவில் கலந்து கொண்டு சிறப்பித்தார். தாம் ஆரம்பித்த ஸ்தாபனம் இன்று நாடு முழுதும் பரவி, கடல் கடந்தும் சென்று நல்ல பணிபுரிந்து வருகிறது என்பதில் யார்தான் மகிழ்ச்சி கொள்ளமாட் டார்கள்? இன்று பாரத நாட்டில் 120 கிளைகள் இருக்கின்றன: மலேயா, சிங்கப்பூர், இலங்கை முதலிய கிழக்காசிய நாடுகளிலும் கிளைகள் இருக்கின்றன.

பாரத நாட்டின் பெரும் பாங்குகளாகக் கருதப்படும் ஒருசில பாங்கிகளில் இந்தியன் பாங்கியும் ஒன்று.

இந்தியன் பாங்கியின் புகழ் தென்னுட்டின் புகழ். அதற்காக உழைத்த பாங்கி டைரக் டர்களுக்கும், உத்தியோகஸ்தர்களுக்கும் சிப்பந்திகளுக்கும் நன்றி தெரிவிக்கிறோம். அவர்கள் தங்கள் வேலையில் இன்னும் ஊக்கம் கொண்டு வேலை செய்வார்கள் என்று நம்பு கிறோம். பொன் விழாவில் கலந்துகொண்ட சிலர்ய் பாங்கியின் கவர்னர் எச். வி. ஆர். அய்யங்கார் சொன்னதுபோல், இந்தியன் பாங்கி வடநாட்டுக்கும் படையெடுத்து இன் னும் பல ஊர்களில் கிளைகளைத் துவக்கு வதற்கு முன்வர வேண்டும்.

# அருள் வாக்கு

நாம் எல்லோரும் உண்மையான பரம்பொருளைப் பற்றிய ஞானத்தைப் பெற முயலவேண்டும். அப்போதுதான் நமக்குத் தோன்றும் கஷ்டங்களை நாம் சமாளிக்க முடியும். மனிதன், யாரும் ஏதாகிலும் ஒருவிதமான கஷ்டம் அனுபவியாமல் இருப்பதில்லை. ஏதோ டணக்காரன், பெரும் பதவியில் இருட்பவன், துக்கம் கவலை ஏதுமில்லாமல் இருப்பதாகப் பிறர் நினைக்கலாம். தம் தொல்லைகளைப் போக்கிக் கொள்ள அவர்களைட்போல் தனவானாகவும் பதவி பெற்றவர்களாகவும் ஆக வேண்டுமெனவும் பிறர் ஆசைப்படலாம். ஆனால் அத்தகையோரை நெருங்கிக் கேட்டால் அவர்களது துக்கம் கவலை எப்படிப்பட்டதென்பது தெரிய வரும். பார்க்கப் போனால், ஒவ்வொருவனும் தான்தான் அதிக புத்திசாலி, நேர்மையானவன் என்று நினைத்துக் கொண்டிருப்பது போல் அதிக துக்கமுள்ளவனும் தான்தான் என்றும் நினைக்கிறார்கள். நிதானித்துப் பார்த்தோமானால் துக்கமில்லாதவனே கிடையாது. துக்கம் என்பது நம் உடன் பிறந்ததாக இருப்பது தெரிய வரும். நம் பூர்வ கர்மவினையின் பயனாக நம் துக்கங்களுக்கு முன்னமேயே நாம் வித்திட்டிருக்கிறோம். இந்தத் துக்கத்தினின்று தப்பிக்க வழியில்லை.

ஆனால் துக்கத்தினால் ஏற்படும் கஷ்ட அனுபவங்களை நாம் குறைக்கலாம். ஒரு முட்டாள் அல்லது பைத்தியக்காரன் நம்மைப்போல் மனத்தில் கஷ்டப்படுவதில்லை. அவன் புத்தியுள்ள நிலையில் கஷ்டம் என்பதே அவனுக்குத் தெரிவதில்லை. ஆனால் அந்த முட்டாளுக்கே நிதானபுத்தி வந்தாலோ, பைத்தியத்துக்குப் பைத்தியம் தெளிந்தாலோ, நம்மைட்போல் அவர்களும் கஷ்டங்களைப் பார்த்துத் துக்கப் படுகிறார்கள். தூக்கம் நமது துக்கங்களை ஒருவாறு தணிக்கிறது. விழித்துக் கொண்டதும் எல்லாம் ஞாபகத்துக்கு வந்து மறுபடியும் கஷ்டப்பட ஆரம்பிக்கிறோம். ஆனால் ஞானியாக இருட்பவன் விழித்துக் கொண்டிருக்கும்போதே துக்கத்தைப் பற்றி நினைப்பதற்கில்லை. ஞானியின் தேகத்தில் சிரமங்கள் இராதென்பதில்லை. ஆனால். மனத்தில் கிலேசம் இராது. ஒரு பெரிய மரத்தைத் தூக்கிப் புரட்டுவது சிரமம். அதையே தண்ணீரில் போட்டால் ஒரு குழந்தைகூட அதைச் சுலபமாகப் புரட்டி விடலாம். அதேமாதிரி நமது துக்கங்களை ஞானமாகிற தண்ணீரில் அமுக்கிவிட வேண்டும். பிறகு அதுவே நமக்கு வெகு இலேசாக ஆகிவிடும். இந்த ஞானம் என்ன? உண்மை நிலையை அறிவதுதான்.

*ஸ்ரீ சங்கராச்சாரியார், காஞ்சி காமகோடி பீடம்*

# புது வருஷமே வருக!

நேயர்களுக்குப் புது வருஷ வாழ்த்துக்கள் கூறுகிறோம்:

பாரதநாட்டிலே எத்தனையோ புது வருஷங்கள். தமிழ் மக்கள் சித்திரை மாதம் முதல் தேதியைப் புது வருஷத் திருநாளாகக் கொண்டாடுகிறார்கள். வேறு சிலர் தீபாவளித் திருநாளைப் புத்தாண்டுகளாகக் கொண்டாடுகிறார்கள். மலையாளிகள் கொல்லம் ஆண்டு என்று கொண்டாடுகிறார்கள் முஸ்லிம்கள் வேறொரு நாளைப் புது வருஷத் திருநாளாகக் கொண்டாடுகிறார்கள். இவை போதாதென்று இந்திய சர்க்கார் ஒரு புது வருஷத்தை, சக சகாப்தத்தை அனுஷ்டிக்கத் தொடங்கியிருக்கிறார்கள். ஆனால் உலகமெல்லாம் ஜனவரி முதல் தேதியைப் புது வருஷமாகக் கொண்டாடுகிறார்கள். அவர்களோடு ஒட்டி நாமும் புது வருஷ வாழ்த்துக்களைக் கூறுகிறோம்.

புது வருஷத்தில் அடியெடுத்து வைக்கும் போது, பழைய வருஷத்தைப் பற்றியும் நினைக்கத் தோன்றுகிறது. சென்ற வருஷம் ருஷ்யா வான மண்டலத்தில் செயற்கைச் சந்திரனை அனுப்பிய செய்தி உலக சரித்திரத்தில் நிலைபெற்றுவிடும். விஞ்ஞான ஆராய்ச்சியில் இது ஒரு புது விந்தை. ஆனால் இந்த விந்தை உலக மக்களை இன்னும் பெரும் பீதியில்தான் ஆழ்த்தியது.

பாரத நாட்டிலே இரண்டாவது பெரும் தேர்தல்கள் சென்ற வருஷம் நடைபெற்றன. இத்தேர்தல்களில் மக்கள் மகிழ்ச்சியும் வருத்தமும் கலந்த முறையில் பங்கெடுத்துக் கொண்டனர்.

இவற்றையெல்லாம் நினைக்கும்போது புது வருஷத்திலாகிலும் அணுகுண்டு பீதியிலிருந்து விடுபட்டு நிம்மதியான வாழ்க்கை நடத்த வழி பிறக்குமா என்று உலகம் ஏங்குகிறது!

இந்த வருஷத்தில் நாட்டில் பஞ்சமும் பிணியும் ஒழிய வேண்டும் என்று இறைஞ்சுகிறது!

அன்பும் அறமும் பெருகவேண்டும். பண்பும் சீலமும் வளரவேண்டும்; இதுவே நமது பிரார்த்தனை நாம்மட்டுமல்ல உலக மக்கள் அனைவரின் பிரார்த்தனையும் கூட.

இவையெல்லாம் கை கூடும் நம்பிக்கையோடு, புது வருஷத்தை வரவேற்கிறோம்!

# அஜந்தா அணங்கு!

இவ்விதழ் அட்டையைத் தாளம் ஏந்திய அஜந்தா மங்கை அலங்கரிக்கிறாள்.

டிசம்பர் மாதம் முழுதும் நாடு சங்கீத மயமாக இருந்தது! அதற்கேற்ப இவ்விதழ் அட்டையும் சங்கீதக் கலையை நினைவுறுத்தும் வண்ணம் அஜந்தா ஓவியத்தைப் பெயர்த்தெழுதி வழங்கியிருக்கிறார் ஓவியர் மணியம்.

நேற்று புதிதாகக் கருதப்பட்ட விஞ்ஞானக் கலை இன்று பழையதாகி விடுகிறது! நேற்று மெய் சிலிர்க்க வைத்த விஞ்ஞான உண்மை இன்று சப்பென்று போய்விடுகிறது.

ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் கலைஞன் வண்ணத்தால் தீட்டிய இந்த ஓவியம், இன்று வரைந்தாற் போலிருக்கிறது! உள்ளத்துக்கு உற்சாகமும் ஊக்கமும் அளிக்கிறது!

ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் பச்சிலைச் சாற்றைக் கொண்டு தயாரித்த வண்ணக் கலவை இன்றைய விஞ்ஞானிகளைப் பார்த்துச் சிரித்துக் கொண்டிருப்பது போல் பளீர் என்று ஒளிவீசித் திகழுகிறது. பச்சையும் சிவப்புமாகப் பார்ப்பவர் கண்களைப் பறிக்கும்படி காட்சியளிக்கின்றன. இன்றைய 'நாகரிகம்' என்ற பெயரில் வரும் ஆடை ஆபரணங்கள் எல்லாம் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் கையாண்ட பழைய நாகரிகம்தான் என்பதை அஜந்தாச் சித்திரங்கள் நமக்குச் சொல்லிக் கொண்டிருக்கின்றன.

அஜந்தா ஓவியம் கால வெள்ளத்தைக் கடந்து என்றும் புதுமையாக விளங்குகிறது.

இதுதான் கலையின் சிறப்பு! ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பு கவிஞன் சகுந்தலையைப் பற்றி எழுதி வைத்த வர்ணனைகளைப் படிக்கும் போது இன்னும் புதுமையாக இருக்கிறது. கம்பனின் ராமாயணத்தைப் படிக்கும் போது மெய்சிலிர்க்கிறது.

இப்படி வற்றாத இன்பத்தை அளிக்கக் கலைகள் இருக்க, மக்கள்குலம் வேறு எதை எல்லாமோ இன்பம் தருவன என்று பிடித்துக் கொண்டு ஓடுவதை என்னவென்பது!

இந்தப் புது வருஷத்தில், மக்களுக்குச் சாந்தியும் சமாதானத்தையும் அளிப்பது 'வளர்கலை' என்ற உண்மையை மனத்தில் கொண்டால் எவ்வளவு சிறப்பாக இருக்கும்!

## சத்தியத்தில் முடிந்தது!

இலங்கையின் எழில்மிக்க கலைக் காட்சிகளைப் பின்னணியாகக் கொண்டு, இரு இளம் காதலர்களின் உணர்ச்சிப் போராட்டங்களைச் சித்திரிக்கும் ஸ்ரீரங்கம் நரசிம்மன் அவர்களின் நீண்ட கதை 12-1-58 கல்கி பொங்கல் இதழில் வெளியாகிறது.

அன்பிலார் எல்லாம்
தமக்குஉரியர் அன்புடையார்
என்பும் உரியர்
பிறர்க்கு.

மக்களுக்கு இருக்கவேண்டிய குணங்களுக்குள் அன்புக்கு வள்ளுவர் முதல் இடம் தருகிறார். அந்தக் குணம் இருந்தால் மனிதன் எத்தகையவன் ஆகிறான், அது இல்லாவிடில் எத்தகையவன் ஆகிறான் என்னும் இரண்டையும், இந்தப் பாட்டில் சொல்லுகிறார்.

அன்பு இல்லாதவர்களுடைய வாழ்க்கை முற்றிலும் சுயநல வழியில் தமக்கே செலவழிந்து பயனற்றுப் போகும். அன்பு என்னும் குணம் நிறைந்த உள்ளத்தைப் படைத்தவர்கள் உலகத்தின் செல்வம் ஆகிவிடுகிறார்கள். அவர்களுடைய எலும்பும் பிறருடைய சொத்து ஆகிவிடுகிறது என்கிறார். அதாவது தமக்கென்று ஒன்றும் வைத்துக் கொள்வதில்லை.

• • •

பிறவி எடுப்பது ஒரு துன்பம் என்றும் அதை நீத்தலே மேலான மோக்கம் என்றும் பாரத தேசத்தின் எல்லாச் சமயங்களும் கூறுகின்றன. இதை வைத்துக் குறளாசிரியர் அன்பின் சிறப்பை எடுத்துக் காட்டுகிறார். உயிரும் உடலும் சேர்ந்து ஜன்மம் எடுத்தால் அல்லவோ அன்பைக் காட்டமுடியும். ஆதலால் இந்தக் காரணத்தைக் கொண்டு பிறவி எடுப்பதையும் விரும்பலாம் என்கிறார். துயரமாகிய பிறவியைத் துயரம் நீக்கி மகிழ்ச்சியாகச் செய்வது அன்பு என்னும் குணம்.

அன்போடு இயைந்த
வழக்குஎன்ப ஆருயிர்க்கு
என்போடு இயைந்த
தொடர்பு.

['என்ப' என்றால், இது பெரியோர்களுடைய உறுதி என்று பொருள்.]

என்பு—எலும்பு, அதாவது உடல். ஜன்மம் எடுத்து உடலைத் தாங்கினால் ஆன்மாவுக்கு அன்பைக் காட்டுவதற்கு இடம் ஏற்படுகிறது. உயிருக்கும் எலும்புக்கும் எவ்வளவு நெருங்கிய தொடர்போ அவ்வளவு தொடர்பு வாழ்க்கைக்கும் அன்புக்கும் இருக்க வேண்டும். அன்பில்லையேல் உயிர் வாழ்க்கை சாதலுக்குச் சமமாகும்.

பிறந்தால் அன்பைக் காட்டலாம் என்கிற காரணத்தைக் கொண்டு ஆன்மா ஒரு உடலைத் தாங்கவும் ஆசைப்படும். பிறவித் துயரையும் பொருட்படுத்தாமல் விரும்பக் கூடும் என்கிறார்.

ராஜாஜி

# விவசாயமும் விவசாயியும்

க. சந்தானம்

மூப்பத்தாறு கோடி பாரத மக்களில், இருபத்தைந்து கோடி ஜனங்கள் விவசாயத்தின் மூலம் ஜீவிக்கின்றனர். இது ஏறக்குறைய நூற்றுக்கு 70 வீதம் ஆகின்றது. குழந்தைகளையும், வேலை செய்யாமல் இருக்கும் மற்றவர்களையும் விலக்கி விட்டால், இந்தியாவில் 855 லக்ஷம் புருஷர்களும் 163 லக்ஷம் பெண்களும் ஆக 1018 லக்ஷம் உழைப்பாளிகள் இருக்கின்றனர். அவர்களுள் 718 லக்ஷம் பேர்கள் விவசாயமே தமது தொழிலாகக் கொண்டவர்கள். மற்றும் சில நாடுகளுடன் ஒப்பிட்டுப் பார்த்தால் பாரதத்தில் மிதமிஞ்சிய மக்கள் விவசாயத்தை அண்டிப் பிழைக்கிறார்கள் என்பது தெளிவாகும்.

| தேசம் | உழைப்பாளிகள் லக்ஷம் | விவசாயிகள் லக்ஷம் | |
|---|---|---|---|
| அமெரிக்க ஐக்கியநாடு | 600 | 73 | 12 |
| பிரிட்டன் | 226 | 11 | 5 |
| பிரான்ஸ் | 205 | 24 | 11 |
| மேற்கு ஜெர்மனி | 221 | 51 | 23 |
| ஜப்பான் | 356 | 172 | 48 |
| பாரதம் | 1018 | 718 | 71 |

விவசாயம் மூலம் பிழைக்கும் குடும்பங்களின் 25 கோடி மக்களையும் பின் வரும் வகுப்புக்களாகப் பிரிக்கலாம்.

| | | |
|---|---|---|
| நிலச்சுவான்தார் வகுப்பு | 53 | லக்ஷம் |
| சொந்த நிலத்தைச் சாகுபடி செய்பவர் | 1673 | .. |
| பிறர் நில[illegible]தில் குடியானவர் | 316 | .. |
| விவசாயக் கூலிக்காரர் | 448 | .. |

இதிலிருந்து, நாட்டில் மூன்றில் இரண்டு பங்கு விவசாயிகள் சொந்த நிலத்தைச் சாகுபடி செய்தும், ஆறில் ஒரு பாகத்தார் கூலி வேலை செய்தும், 7-ல் ஒரு பாகத்தார் குடியானவர்களாகவும், நாற்பதில் ஒருவர் நிலத்திலிருந்து வரும் குத்தகையைக் கொண்டும் ஜீவித்து வருகின்றனர்.

1953-54 ல் பண்ணைகளின் விஸ்தீர்ணங்களைப் பற்றி நாடெங்கும் கணக்கு எடுக்கப் பட்டது. சில பிரதேசங்களின் விவரங்கள் பின் வருமாறு.

எண்ணிக்கை (1000) விஸ்தீரணம் (1000 ஏக்கராக்கள்)

| | 1-10 ஏக்கரா | | 11-30 ஏக்கரா | | 30-60 ஏக்கரா | | 60-க்கு மேல் | |
|---|---|---|---|---|---|---|---|---|
| | எண். | விஸ்தீ | எண். | விஸ்தீ | எண். | விஸ்தீ | எண். | விஸ்தீ |
| ஆந்திரப் பிரதேசம் | 2190 | 6256 | 359 | 4915 | 70 | 2809 | 26 | 3074 |
| பம்பாய் | 3407 | 12009 | 1051 | 17890 | 237 | 9585 | 69 | 7710 |
| மத்திய பிரதேசம் | 3490 | 11064 | 761 | 12557 | 147 | 5964 | 60 | 7617 |
| மதராஸ் | 4208 | 12598 | 609 | 9805 | 97 | 3952 | 44 | 6194 |

1947 ல் பாரதம் சுதந்திரம் பெற்ற பொழுது பல பிரதேசங்களில் ஜமீன்தாரி முறை வழக்கத்திலிருந்தது. அதன்படி ஆயிரக் கணக்கான ஏக்கர்கள் ஒரு ஜமீன்கீழ் சேர்க்கப் பட்டு, அதன் ஜமீன்தார்கள் வரி விதித்தும், வசூல் செய்தும் அதில் சிறு அம்சமான ஒரு நிரந்தரத் தொகையை அரசாங்கத்தாருக்குக் கப்பமாகக் கட்டி வந்தனர். பிரிட்டிஷ் அரசாங்கம் ஏற்பட்டபொழுது ஆங்கிலேய அதிகாரிகளுக்கு நேரில் விவசாயிகளுடன் தொடர்பு வைத்துக் கொள்ளுவது கஷ்டமென்று இவ்விதம் நிலங்களை



ஜமீன்களாகச் செய்து குத்தகைக்கு விடப்பட்டன. சென்னை, பஞ்சாப் முதலிய சில பாகங்களில் இம்முறை கையாளப்படாமல் ரயத்துவாரி முறைப்படி சாகுபடி செய்பவர்கள் நேரில் சர்க்காருக்கு நிலவரி கட்டுவதென்ற ஏற்பாடு செய்யப்பட்டது.

விடுதலைக்கு முன்னதாகவே ஜமீன்தாரி முறையை ஒழிப்பதாகக் காங்கிரஸ் மகாசபை திட்டம் போட்டிருந்தது. அப்படியே, சுதந்திர அரசாங்கம் ஏற்பட்டவுடனேயே ஜமீன்தாரி முறை யிருந்த மாகாணங்களில் அதற்கேற்ற சட்டம் இயற்றப்பட்டு, ஜமீன்தார்களுக்கு ஈடு கொடுக்கப்பட்டு, ரயத்வாரி முறை அமுலுக்குக் கொண்டு வரப்பட்டது. நாடுமுழுதுக்கும் மொத்த ஈட்டுத் தொகை சுமார் 400 கோடி. இதில் பெரும் பாகம் உத்தரப் பிரதேசம், பீகார் பிரதேசங்களில். வழங்கப்பட்டிருக்கிறது.

ரயத்வாரி முறையிலும் பல இடங்களில் பெரும் பண்ணைகள் ஏற்பட்டும், நகரத்தில் இருப்பவர்கள்நிலங்களைவாங்கி,குத்தகைக்குக் கொடுப்பதும் பழக்கமாகி வந்திருக்கின்றன. இத்தீமைகளையும் விலக்கித் தனிநபர்வைத்துக் கொள்ளக்கூடிய நிலத்துக்கு வரம்புகள் ஏற்படுத்தியும், குடியானவர்களின் வாரங்களையும் குத்தகைகளையும் கட்டுப்படுத்தி உழவோர்களின் வருமானத்தை அதிகரித்தும் ஆங்காங்கு சட்டம் இயற்றப்பட்டுச் சீர்திருத்தம் செய்யப்பட்டு வருகிறது. தேயிலை, காப்பித் தோட்டங்கள், தோப்புகள் முதலியவற்றைத் தவிர, சாதாரணமாக முப்பது ஏக்கராவுக்கு அதிகமாகத் தனி நபரிடம் நிலம் இருக்கக் கூடாதென்ற லட்சியம் மேற்கொள்ளப்பட்டு வருகிறது.

மேலே குறிப்பிட்ட புள்ளி விவரங்களிலிருந்து, தற்சமயம் விவசாயமாகும் நிலங்களில் மூன்றில் இரண்டு பாகத்துக்கு மேல் 30 ஏக்கராவுக்குக் குறைந்த பண்ணைகளாகவேயிருக்கின்றன. ஆதலால் மீதி மூன்றில் ஒரு பாக நிலங்களையும் சிறு பண்ணைகளாகச் செய்வதால் ஓரளவு விவசாயிகளின் நலம் பெருகுமாயினும், அதனால் நாட்டின் பொருளாதாரத்தில் புரட்சிகரமான மாறுதல் ஏற்படுமென்று எதிர்பார்க்க முடியாது. தவிர, பெரும் பண்ணைகளை ஒழிப்பதால், தற்காலம் விவசாயத்தில் போடப்படும் முதல் குறைந்து போகும். பெரிய பண்ணைகளில்தான் விஞ்ஞான முறையில் இயந்திரக் கலப்பைகள் முதலிய கருவிகள் உபயோகிக்கக் கூடும். அவ்வித சாதனங்களைச் சிறு பண்ணைக்காரர்கள் கூட்டுறவுச் சங்கங்கள் மூலம் பெறக்கூடுமென்றும், இந்திய விவசாயத்தைப் பெரும் கூட்டுறவு விவசாயப் பண்ணைகளாக்கத் தீவிர முயற்சிகள் செய்யப்படவேண்டுமென்றும் மத்திய சர்க்காரும், திட்டக் கமிஷனும் அபிப்பிராயப் படுகின்றனர். ஆனால் இது பலாத்காரமின்றி எளிதில் சாத்தியப்படாது என்று அனுபவமுள்ள பலர் நினைக்கின்றனர். நிலச் சீர்திருத்தங்களும், விவசாய உற்பத்திப் பெருக்கும் சேர்ந்தாற்போல் முன்னேற வேண்டுமென்று எல்லோரும் விரும்புகின்றனர். ஆனால் லட்சியம், முறை, பலன் மூன்றையும் முரண்பாடின்றிக் கோவையாக வகுப்பது மிகவும் சிரமசாத்தியமானது. ஆதலால் ஒவ்வொரு காரியத்தையும் தீர ஆலோசித்து, மக்களின் மனத்தைப் பக்குவம் செய்து சீர்திருத்தங்களை அமுல் செய்வது புத்திசாலித்தனமாகும்.



# சென்னைக்கு வந்த ஓர் அமெரிக்கர்

எஸ். ஜி. எஸ்.

பாரத தேசம் சுதந்திரம் பெற்றதி லிருந்து எத்தனையோ வெளிநாட்டினர் நம் நாட்டுக்கு வந்து போகிற வண்ணமாக இருக் கிறார்கள். இவர்களில் எல்லாரையுமே நாம் கவனத்தில் வைத்துக் கொள்வது என்பதும் சாத்தியமில்லை.

ஆனாலும் சென்ற வருஷ இறுதியில் சென் னைக்கு விஜயம்செய்த ஒருபிரமுகரை, அதிசய மனிதரைப் பற்றிக் குறிப்பிட வேண்டும்!

இவர்தான் அமெரிக்க சட்ட சபையின் அங்கத்தினர் வெயின் எல். மார்ஸ். இவர் புது தில்லியில் நடைபெற்ற காமன்வெல்த் நாடு களின் பார்லிமெண்டரி மகாநாட்டில் கலந்து கொள்வதற்காக இந்தியாவுக்கு வந்தார். அப்படியே சென்னைக்கும் விஜயம் செய்தார்.

வெயின் எல் மார்ஸ் அமெரிக்காவில் ஒரிகான் என்கிற ராஜ்யத்தின் பிரதிநிதியாக அமெரிக்க சட்டசபைக்குத் தேர்ந்தெடுக்கப் பட்டிருக்கிறார். அமெரிக்காவில் இரண்டு அர சியல் கட்சிகள். ரிபப்ளிக்கன் (குடியரசு)க் கட்சி டெமாக்ரடிக் (ஜனநாயக)க் கட்சி என இரண்டு கட்சிகள்! மார்ஸ் முதலில் ரிபப்ளிகன் கட்சியில் இருந்தார். அந்தக் கட்சியின் சார்பிலே இருமுறை அமெரிக்க சட்டசபைக்குத் தேர்ந்தெடுக்கப் பட்டார். பின்னர் அவர் ரிபப்ளிகன் கட்சியை விட்டு விலகினார். ஜனநாயகக் கட்சியினரின் வற் புறுத்தலின் பேரில் அந்தக் கட்சியில் சேர்ந் தார். அந்தக் கட்சியின் சார்பில் அவர் முன்பு நின்ற தொகுதியிலேயே சென்ற தேர்தலிலும் அபேட்சகராக நின்றார்.

அது மட்டுமல்ல. அமெ ரிக்கா அணுகுண்டுகளைச் சோதனை செய்வதோ, உற்பத்தி செய்வதோ அடி யோடு நிறுத்த வேண்டும்; அணுகுண்டு சோதனை களால் மனித குலத்துக்குப் பெரும் உற்பாதம் நேர் கிறது என்று தீவிரமாக உணர ஆரம்பித்தார். இதைத் தமது நண்பர்க ளிடம் தெரிவித்தார். நண் பர்கள் "இந்தக் கருத் துக்களை யெல்லாம் உங் கள் மனத்துக்குள் வைத் துக்கொள்ளுங்கள், வெளி யில் சொல்லாதீர்கள்! சொன்னால் உங்களுடைய தேர்தல் கோவிந்தா ஆகி விடும். மக்கள் உங்களை ஆதரிக்க மாட் டார்கள்!" என்று சொல்லி வந்தார்கள்.



தேர்தலில் தோற்றாலும் பரவாயில்லை என்று எண்ணினார். "அணுகுண்டு, ஹைட்ரஜன் குண்டு சோதனைகள் அடியோடு நிறுத்தப் பட வேண் டும். இந்தப் பயங்கர குண்டுகளை உற்பத்தி செய்வதும் அடியோடு நிறுத்தப் பட வேண் டும். இவற்றை நிறுத்தி உலகுக்கு அமெ ரிக்கா வழிகாட்ட வேண்டும்."—இதுவே அவர் தேர்தல் பிரகடனமாகக் கொண்டு தேர்தல் பிரசாரம் செய்தார்; அவர் நண்பர்கள் எதிர்பார்த்ததற்கு மாறாக, சாதா ரணமாகக் கிடைக்கும் வோட்டுகளைவிடப் பல மடங்கு அதிக வோட்டுக்கள் பெற்று அமோகமாக வெற்றி பெற்றார்;

அணுகுண்டு சோதனைகள் விஷயமாக ராஜாஜி செய்த பல பிரசங்கங்களில் அமெ ரிக்க மக்களைப் பற்றிப் பலமுறை வற்புறுத்தி யிருக்கிறார்! 'அமெரிக்க அரசியல் தலைவர்கள் தான் அணுகுண்டு சோதனைகளை நிறுத்தத் தயாராயில்லையே தவிர, அமெரிக்கப் பொது மக்கள், என் கட்சி!" என்று ராஜாஜி சொல்லி வந்தது எவ்வளவு உண்மை என்பது நிரூபணமாகிறதல்லவா? அமெரிக்க மக்க ளின் மன உணர்ச்சிகள் எப்படித்தான் ராஜாஜிக்குத் தெரிந்திருக்கிறதோ!

இவர் சென்னைக்கு வந்த போது, ரோட்டரி கிளப் ஆதரவில் ஒரு அரிய பிரசங்கம் புரிந் தார்: அமெரிக்க அரசாங்க முறை எப்படித் தொழிற் படுகிறது என்பதை விளக்கினார். அந்தக் கூட்டத்தில்தான் தாம் அணுகுண்டு பிரச்னையையே தேர்தல் பிரகடனமாகக் கொண்டு தாம் வெற்றி பெற்றதைப் பகி ரங்கமாகச் சொன்னார்.

பல உலக அரசியல் பிரச்னைகளில் மார்ஸ் பல முற்போக்கான அபிப்பிராயங்களைக் கொண் டிருக்கிறார். மொத்தத்தில் நல்ல சிந்தனையாளர்; உள்ளத் தில் படுவதைத் துணிந்து சொல்லக் கூடியவர்.

அவர் சென்னையை விட் டுப் புறப்பட்டுப் போன போது, அவர் கூறி விட் டுச் சென்ற வார்த்தை கள் இவைதாம்:

"கடைசியாக ஒரு விஷ யம் குறிப்பிட வேண்டும். பாரத நாட்டில், நான் பெருத்த உற்சாகமும் ஊக்கமும் அறிவுக் கிளர்ச் சியும் பெற்றது ராஜாஜி யைச் சந்தித்ததில்தான்.

"அவர் எந்த விஷயத்தை யும் விருப்பு வெறுப் பின்றிச் சீர்தூக்கிப் பார்க்கும் உணர்ச்சியை யும் அவர் அறிவையும் நேர்த்தையும் கண்டு அதிசயிக்கிறேன்; நான் சென்னைக்கு வந்ததை என் வாழ்வில் என்றென்றும் நினைவு வைத்துக் கொள்வேன். ஏனெனில் சென்னைக்கு வந்த தினால் அன்றோ அவர் திருவடிகளில் அமர்ந்து பல விஷயங்களைக் கேட்கும் பாக்கியம் எனக் குக் கிடைத்தது!"



# வெறும் பெண்

பௌர்ணமி நிலவு, இரவைப் பகலாக்கிக் கொண்டிருந்தது. நட்சத்திரங்கள், இதற்குப் போட்டியாகப் பிரகாசிக்க முடியாமல் மூலைக்கு ஒன்றாக மறைந்து கொண்டிருந்தன. உள்ளே ஒரே புழுக்கமாக இருந்தபடியால், காற்றுக்காக வெளி வராந்தா ஈஸிசேரில், இதுவரை சாய்ந்திருந்த நான், இரவு வெகு நேரமாகி விட்டதை உணர்ந்து, உள்ளே செல்வதற்கு எழுந்தேன்.

என் அறையில் நுழைந்ததும், அடுத்த அறையில் என் தம்பி விசுவும் அவன் மனைவி சந்திராவும் ஏதோ அந்தரங்கமாகப் பேசிச் சிரிப்பது என் காதில் விழுந்தது. ஆஹா...! தம்பதிகள் என்றால் இப்படி அல்லவோ அமைய வேண்டும்! விசு உண்மையில் அதிர்ஷ்டசாலிதான்!

சந்திரா பெயரைப் போலவே, அழகும், அறிவும் கொண்டவள். எல்லோரிடமும் கலகலப்பாகப் பழகுவாள்.

கட்டிலில் படுத்தேன். உறக்கம் வரவில்லை. சிந்தனைப் பறவை எங்கெங்கோ சிறகடித்துப் பறந்து கொண்டிருந்தது. என்னுடைய மனைவி சங்கரி ஊருக்குப் புறப்படும் போது, 'இரவு அதிக நேரம் கண் விழிக்காதீர்கள்; உடம்பை ஜாக்கிரதையாகப் பார்த்துக்கொள்ளுங்கள்' என்று என்னிடம் கூறிய அந்த வார்த்தைகள் நினைவுக்கு வந்தன. இப்போது நடப்பதையே அவள் எப்படித்தான் சொன்னாளோ?

இயற்கையிலேயே மிகவும் பயந்த சுபாவம் கொண்ட அவள் என்னிடத்தில் பேசவே ரொம்பவும் கூச்சப்படுவாள். அழகு என்று கவிஞனின் கற்பனையிலும், ஓவியனின் சித்திரங்களிலும் உள்ளபடி இல்லாவிட்டாலும், அவலட்சணம் என்று அவளை யாரும் ஒதுக்க முடியாது. ஏன், மாநிறம் தான் என்றாலும் மற்றவர்களிடம் மரியாதை தெரிந்து அவள் பழகும் விதமும், அதிர்ந்து பேசாத அடக்க சுபாவமும் கொண்ட அவளை, எங்கள் வட்டாரத்தில் உள்ள பழங்காலப் பாட்டிமார்கள் எல்லோரும், 'சேதுவின் மனைவி என்ன பதவிசு! லட்சுமீகரம் பொங்க என்ன அழகு!' என்று புகழ்வது என் காதிலும் விழத்தான் செய்தது.

ஆனால் மற்றப்படி கடற்கரையிலும், சினிமாவிலும், இன்னும் கதைப் புத்தகங்களிலும் நான் கண்டிருந்த ஒரு துடிப்பான மனைவியையே என் வாலிப உள்ளம் விரும்பியது. அந்த ஸ்தானத்துக்கு ஏற்றபடி, அவள் எப்படியெல்லாம் இருக்க வேண்டும் என்று, என் காளை நெஞ்சம் கற்பனை செய்து, கனவு கண்டுகொண்டிருந்ததோ, அந்தக் கற்பனையிலும், கனவிலும் தெரிந்த வர்ணங்கள் எல்லாமும் அவளிடம் பொலிந்தாலன்றி அந்த வெறும் பெண் எப்படி என் காதலியாகிவிட முடியும்?

எனவே, ஆரம்ப முதலே, அவளிடம் எனக்கு வெறுப்பு என்று ஏற்படாவிட்டாலும், அன்பு என்றும் ஏற்பட்டதில்லை.

நித்திரா தேவி என்னை அணுக மறுத்து, சிந்தனையைத் தூண்டிவிட்டு வேடிக்கை பார்த்தாள். இப்படி வெகு நேரம் கண் விழித்தால் நாளை ஆபீஸில் என்னத்தை வேலை செய்வது?

ஆம்; ஆபீஸின் நினைவிலிருந்து அதில் வேலை செய்யும் பெண் குமாஸ்தா பரிமளாவிடம் தாவி விட்டது சிந்தனைக் குரங்கு.

பரிமளா—அவள் பெயரை நினைத்தாலே நெஞ்சில் தேனாக—இல்லை—திரட்டுப் பாலாகத் தித்தித்தது. கொஞ்சும் விழிகளும், பிஞ்சு நாசியும், பஞ்சுக் கன்னங்களும், இவை எல்லாவற்றையும் மிஞ்சும் அதரங்களும், துடியான இடையும், துள்ளும் நடையும், துவளும் ஜடையும், நுண்ணியமான வெள்ளை உடையுமாக அவள் ஆபீசுக்கு வருவதே தனிக் கவர்ச்சியாக இருக்கும். வயது பத்தொன்பது இருக்கலாம். உயரத்துக்கேற்ற பருமன். ஒருமுறை பார்த்தால் மறுமுறை பார்க்கும்படி சுண்டி இழுக்கும் அழகு அவளிடம் மண்டிக் கிடந்தது. வெகுளிப் பெண். எல்லோரிடமும் களங்கமில்லாமல் ஒட்டிப் பழகுவாள்.

இந்தச் சந்தர்ப்பத்தில்தான் நான்கு தினங்களுக்கு முன் ஒரு நாள் பரிமளா மிகவும்



உற்சாகமாகக் காணப்பட்டாள். அன்று வழக்கத்தைக் காட்டிலும் சீக்கிரமாகவே ஆபீஸுக்கு வந்திருந்தாள். ஆபீஸ் இடைநேரத்தில் என்னை வந்து சந்தித்த அவள் என்னிடம், "இருபதாம் தேதி ஞாயிற்றுக் கிழமை எனக்குப் பிறந்த நாள். அதற்கு நீங்கள் கட்டாயம் வர வேண்டும். அப்பாவை உங்களுக்கு அறிமுகப்படுத்தி வைக்கிறேன். உங்களைப் பற்றி நிறையச் சொல்லி இருக்கிறேன். பார்த்தால் அவர் ரொம்பவும் சந்தோஷப்படுவார்" என்று கூறினாள்.

துள்ளியது என் உள்ளம். அவள் கவனத்தைக் கவருவதற்குச் சரியான சந்தர்ப்பம்! அவள் கொஞ்சமும் எதிர்பாராதபடி விலையுயர்ந்த பொருளாக எதையாவது வாங்கிப் பரிசாகக் கொடுத்து விடுவது என்று மனத்தில் தீர்மானித்துக் கொண்டேன்.

"என்ன சார், யோசனையில் 'ஆழ்ந்து விட்டீர்கள்? அன்று வேறு ஏதாவது முக்கிய அலுவல் இருக்கிறதோ? வரச் சௌகரியப்படாதோ? இந்த ஒரு மாதம் தான் நான் ஆபீஸுக்கு வருவதெல்லாம். பிறகு ஏது நம் சிநேக பாவமெல்லாம்! ஆபீஸில் சேர்ந்த புதிதில் வேலை எல்லாம் கற்றுக் கொடுத்து எவ்வளவோ உபகாரம் செய்திருக்கிறீர்கள். ஆகவே, என் பிறந்தநாளைக் காரணமாகக் கொண்டு, அழைக்கிறேன். மறுக்காமல் நீங்கள் அவசியம் வர வேண்டும்" என்று குரல் கொடுத்து என் சிந்தனையைக் கலைத்தாள் பரிமளா.

"ஏன், பரிமளா? இந்த ஒரு மாதம்தான் என்கிறாய்? பிறகு என்ன?" என்று ஆவலும், பரபரப்பும் உந்தக் கேட்டேன்.

"ஏன்,சார், இப்படிப் பதற்றப்படுகிறீர்கள்? அடுத்த மாதம் முதல் வேலையிலிருந்து விலகிக் கொள்ளலாம் என்று பார்க்கிறேன். எங்கள் வீட்டில் நான் சம்பாதித்துத் தான் குடும்பம் நடத்த வேண்டும் என்ற நிர்ப்பந்தம் ஏதும் இல்லை. கிராமத்திலுள்ள பூர்விக சொத்தும் அப்பாவுக்கு வரும் பென்ஷனுமே தாராளமாகக் குடும்பம் நடத்தப் போதுமானதாக இருக்கிறது. நான் என் பெற்றோர்களுக்கு நீண்ட நாட்களுக்குப்பின் பிறந்த ஒரே பெண். ஆதலால் என்னைப் படிக்க வைத்தார்கள். படித்ததும் கொஞ்ச காலமேனும் உத்தியோகம் பார்க்க வேண்டும் என்ற என் பிடிவாதமான ஆசையின் பேரில் தான் அப்பாவுக்கு இஷ்டமில்லாவிட்டாலும் வேலை பார்க்க அனுமதி யளித்தார். இப்பொழுது, 'உன் ஆசைக்கு ஒரு வருஷம் உத்தியோகம் பார்த்தாயிற்றே; போதுமம்மா, இப்போதாவது விலகிக் கொள்' என்கிறார் அவர். என் ஆசையும்தான்ஓரளவு பூர்த்தியாகி விட்டதே. இப்போதும் அவரை மறுத்துக் கூற எனக்கு விருப்பமில்லை. அதனால் அப்படியே செய்வதென்று தீர்மானித்து விட்டேன்!" என்றாள் அவள்.

ஆனால் கபடவாதியான எனக்கு இது மிக்க ஏமாற்றத்தை அளித்தது. ஒரே எரிச்சலாகக் கூட இருந்தது எனலாம். இருந்தும் உள்ளத்து உணர்ச்சிகளைச் சிரமப்பட்டு ஒருவாறு அடக்கிக் கொண்டு, "ஏன் பரிமளா, ஆசைப்பட்டு வேலையில் சேர்ந்ததுதான் சேர்ந்தாய்; அதற்குள் விலகுவானேன்? கல்யாணம் ஆன பிறகு விலகிக் கொள்வது இருக்கவே இருக்கிறது" என்று பாதி கேலியாகவும், பாதி அவளுடைய நன்மைக்குச் சொல்வது போலவும் சொல்லி அப்போதைக்கு அவள் மனத்தை மாற்றி அனுப்பி வைத்தேன்.

அன்று ஆபீஸுக்குக் கிளம்பும்போது ஞாபகமாகப் பரிமளாவுக்குப் பிறந்த நாள் பரிசளிப்பதற்கு எழுபத்தைந்து ரூபாயைப் பர்ஸில் எடுத்துவைத்துக் கொள்வதற்குத் தவறவில்லை.

பரிமளா ஆபீசுக்கு வரவில்லை. ஏனோ எனக்கு வேலை ஒன்றும் ஓடவில்லை. கடிகாரத்தை நோக்கிய வண்ணமே பெயருக்கு ஏதோ வேலை என்று செய்து காலத்தை ஓட்டிக் கொண்டிருந்தேன்.

ஒன்றரை மணிக்கு வேலையை முடித்துக் கொண்டு, டிபன் சாப்பிட்டு விட்டு ஆபீஸிலிருந்து புறப்பட்டேன். ஒரு ஜவுளிக் கடையினுள் நுழைந்தேன்.

என்னைக் கண்டதும் புடவைக்காரர் அதிக விலை உள்ளதாக அரை டஜன் புடவைகளை எடுத்து ஜமக்காளத்தில் பிரித்துப் போட்டார். அவற்றுள் கிளிப் பச்சை நிறத்தில் ஜரிகை வேலைப்பாடமைந்த மயில் பார்டருடன் கூடிய ஒரு புடவை என்னை மிகவும் கவர்ந்தது; அதற்குப் பொருத்தமாகப் பொடிக் கலரில் ஒரு சோளியும் எடுத்து இரண்டையும் விலை பேசி முடித்தேன். 'ஆ! அது யார்?'



அவ்வளவுதான்; அதே கணம் ஸ்தம்பித்து அசைவற்று நின்று விட்டேன்!

காரணம், எதிர் வரிசையில் இரண்டு மூன்று தோழிகளுடன் என் தம்பி மனைவி சந்திரா சிரித்துப் பேசிக்கொண்டே என்னை நோக்கி வந்து கொண்டிருந்தாள்! அருகில் வந்தவுடன் புன்சிரிப்பு தவழ, "அட, அபூர்வமாக இருக்கிறதே? கொல்லன் பட்டறையில் ஈக்கு என்ன வேலை? கையில் என்ன பொட்டலம்? புடவையா? கொடுங்கள், பார்க்கலாம்!" என்று என் பதிலையும் எதிர்பாராமல் கையை நீட்டினாள்.

மனம் குழம்பித் தவித்தது. இப்பொழுது நான் அவளை இங்கு எதிர்பார்க்கவே இல்லை. இந்த இக்கட்டான நிலையில் இவளிடம் என்ன சொல்லி மறைப்பது? ஏதோ இப்போதைக்கு இப்படிச் சொல்லி வைப்போம் என்று மனத்தைத் தேற்றிக்கொண்டு, "ஆமாம்; உன் மன்னிக்குத்தான் புடவை வாங்கினேன். நன்றாக இருக்கிறதா, பார்!" என்று மென்று விழுங்கியவாறு, அவளிடம் புடவையைக் கொடுத்தேன்.

அதைப் பிரித்துப் பார்த்த அவள் "பேஷ்! புடவையும் சோளியும் 'மாட்ச்' பொருத்தம் உண்டே ...... பிரமாதம்! என் மன்னியின் உடம்புக்கு எவ்வளவு எடுப்பாக இருக்கும்!" என்றாள். பொட்டலத்தைத் திருப்பிப் பெற்றுக் கொண்ட நான் கடையிலிருந்து இறங்கி வேகமாக வீட்டை அடைந்தேன்;

எப்படியோ ஒரு வழியாகப் பொழுதும் விடிந்து விட்டது. என் நண்பன் ஒருவன் பிறந்த நாளுக்குச் செல்வதாகவும் அங்கேயே சாப்பாட்டை முடித்துக் கொண்டு விடுவேன் என்று விமலாவிடம் கூறிவிட்டுக் குறித்த நேரத்துக்கு முன்பாகவே பரிமளாவின் வீட்டை அடைந்தேன்.

பரிமளா ஸ்நானம் செய்த சரத்தலையில் தளர்ந்த பின்னலுடன் கோடி உடையும் மென்முறுவலுமாகப் புத்தம் புது மலராக என்னை வரவேற்றாள்.

சம்பிரதாயப்படி அவள் தகப்பனுருக்கு என்னை அறிமுகப்படுத்தி வைத்தாள். சாப்பாடு ஆகித் தாம்பூலம் தரித்ததும் நான் வாங்கி வந்திருந்த பரிசைப் பெரியவரிடம் கொடுத்தேன். அதைப் பிரித்துப் பார்த்த அவர் பெண்ணையும் என்னையும் மாறி மாறிப் பார்த்தார்.

ஆனால் பரிமளாவோ, எப்போதும் வழக்கமாக இருப்பது போலவே இருந்தாள். முகம் மட்டும் சற்றுக் கடுமையாக மாறி இருந்தது. "என்ன சார், ஏதோ பழைய தோஷத்துக்காகக் கூப்பிட்டால் பரிசு என்று கூறி இப்படி விலையுயர்ந்த புடவையைப் போய் வாங்கி வந்திருக்கிறீர்களே? இப்படிச் செய்வீர்கள் என்று தெரிந்திருந்தால் உங்களைக் கூப்பிட்டே இருக்க மாட்டேனே...! இப்பொழுதும் தான் என்ன, உங்கள் மனைவியின் விலாசம் கொடுங்கள்: அவர்களுக்கு இதை அனுப்பி வைக்கிறேன். நான் நிச்சயமாக இதை ஏற்றுக் கொள்ளப் போவதில்லை" என்று பாதி விளையாட்டாகவும் பாதி வினையாகவும் கூறுவது போலவே சொன்னாள்.

நான் பதில் ஏதும் சொல்லாமல் இருக்கவே பெரியவரும் தொடர்ந்தார்: "ஆமாம், சார்!



வித்தியாசமாக நினைத்துக் கொள்ளாதீர்கள்! கல்யாணமாகாத ஒரு பெண்ணுக்கு இப்படியெல்லாம் பரிசு அளித்தால் ஊர் உலகத்தில் நாலு பேர்கள் நாலு சொல்வார்கள். அப்படி நடக்கும்படி நாம் விடக்கூடாது பாருங்கள். அதனால் அவள் சொல்வது போலவே செய்து விடலாம். அதுதான் சரி!" என்று அவள் சொல்வதை ஆமோதித்தார்.

ஆனால் நானோ "எனக்குக் கூடப்பிறந்த சகோதரி இல்லையே என்று நெடுநாட்களாகக் குறை. பரிமளாவை முதல் நாள் பார்த்ததிலிருந்தே அந்தக் குறை நீங்கிவிட்டதுபோல் தோன்றியது. அவளை என் சொந்தச் சகோதரி போலவே பாவிக்கத் தொடங்கி விட்டேன். இதில் தவறு ஒன்றும் இருப்பதாக எனக்குத் தோன்றவில்லை" என்று எப்படியோ திக்கித் திணறி மழுப்பி விட்டு விடைபெற்றுக் கொண்டேன்.

நாலைந்து நாட்களுக்குப் பின் அன்று எதையோ தேடிக் கொண்டு விகலின் அறைக்குள் நுழைந்த என் கண்களில் எதேச்சையாக மேஜையின் மேலிருந்த ஒரு கடிதம் தென்பட்டது. சந்திராதான் என் மனைவிக்கு எழுதி இருந்தாள். அதைப் பார்த்த பிறகுதான் நான் அன்று புடவைக் கடையில் அவளைச் சந்தித்ததும், அப்போதைக்குத் தப்பித்துக் கொள்ள ஏதோ உளறி வைத்ததும் நினைவுக்கு வந்தன. இந்த அசட்டுப் பெண் அதைப் பற்றி ஏதாவது எழுதி வைக்கப் போகிறாளே என்ற கவலையோடு அவசரம் அவசரமாகக் கடிதத்தைப் படித்தேன்.

"நீங்கள் அடிக்கடி என்னிடம் கூறுவீர்களே, 'உலகில் கணவனின் பரிபூரண அன்பை அடையக் கொடுத்து வைத்திருப்பவர்கள் உன்னைப் போன்ற மிகச் சிலர்தான் சந்திரா' என்று. அப்படி நீங்கள் கூறும்போதெல்லாம் ஒரு வேளை மைத்துனர், தன் அன்பு முழுவதையும் உங்களுக்கே அர்ப்பணிக்கவில்லையோ என்று இதுவரையில் நான் எண்ணிக்கொண்டிருந்தேன். ஆனால் என் எண்ணம் தவறானது என்பது ஒருநாள் தெரிய வந்தது.

"அன்று பாருங்கள்—போன சனிக்கிழமை தான் என்று நினைக்கிறேன். ஜவுளிக் கடையில் தற்செயலாக மைத்துனரைச் சந்திக்க நேர்ந்தது. கிளிப் பச்சையில் மயில் பார்டருடன் கூடிய புடவையை விலை பேசிக் கொண்டிருந்தார். உங்கள் பேரில் எவ்வளவு ஆழ்ந்த அன்பு இருக்குமானால் இவ்வளவு ரசிகத் தன்மையுடன் புடவை எடுத்திருப்பார் என்பதை என்னால் ஊகித்துக் கொள்ள முடிந்தது. அது சரி...இத்தனை நாள் புடவை உங்களுக்கு வந்து சேர்ந்திருக்க வேண்டுமே...?"

இதுவரை படித்துக் கொண்டிருந்த எனக்கு மேலே ஓடவில்லை. என் மனைவிக்கே அல்லவா எழுதி விட்டாள்? இப்போது என்ன செய்வது? அதேபோல் என் மனைவிக்கும் ஒரு புடவை வாங்கி அனுப்ப வேண்டியதுதான்.

சிறிது நேரத்தில் சட்டையை மாட்டிக் கொண்டு வெளிக் கிளம்பிய நான் முன்பு புடவை வாங்கிய அதே கடைக்குச் சென்று கடைக்காரரிடம் ஏற்கெனவே நான் வாங்கிய புடவை இன்னொன்று வேண்டும் என்றேன்.

அதற்குப் புடவைக்காரர், "அதுமாதி ரியா? இன்னொன்று கிடைக்காதே சார். அது வந்ததே ஒன்றுதான். மாதிரிக்காக அனுப்பி யிருந்தார்கள். வேறு கடைகளில் கூட அதுமாதிரி உங்களுக்குக் கிடைக்காது, சார்!" என்று கூறிவிட்டார்.

மிகுந்த ஏமாற்றத்துடன் மீண்ட எனக்குச் சந்திராவின் மேல் ஒரே கோபமாக வந்தது.

ஒரு வாரத்துக்குப் பின் ஒரு நாள் தபால் காரர் 'தபால்' என்று கூவியவாறு ஒரு கவரை விசிறி எறிந்து விட்டுச் சென்றார். சந்திராவின் பெயருக்குத்தான் வந்திருந்தது! கையெழுத்திலிருந்து என் மனைவி எழுதியிருக் கிறாள் என்பதும் தெரிந்துகொள்ள முடிந்தது.

ஆர்வ மிகுதியால் நெஞ்சு படபடக்கக் கடி தத்தைப் படித்தேன். அதில் எழுதி யிருந்தது.

அன்புள்ள சந்திரா,

உன் கடிதம் கிடைத்தது. நீ எழுதியிருந்த அதே கலரும் பார்டரும் கூடிய புடவை வந்து சேர்ந்தது. எல்லோரும் என் உடம் புக்கு மிகவும் நன்றாக இருக்கிறதாகச் சொல் கிறார்கள். உன் மைத்துனரைப் பற்றித் தவறாக இதுவரை எண்ணி விட்டதாகக் கூறி வருந்தி எழுதியிருக்கிறாய். இதில் உன் மேல் தவறு ஒன்றும் இல்லை. அவருக்கு என்மேல் நிரந் தரமாக ஏற்பட்டிருக்கும் ஆழ்ந்த அந்தரங்க மான அன்பைப் பற்றி எனக்கு மட்டும்தான் தெரியும். உன் மைத்துனரின் அன்பு கனவேக மாகப் பாய்ந்து கடைசியில் காய்ந்துவிடக் கூடிய காட்டாற்று வெள்ளம் போன்றதல்ல. மாறாக, அமரிக்கையாக அடக்கமாக ஆண்டு முழுதும் வற்றாமல் பெருகி ஓடும் வற்றாத ஜீவநதியே அவர் அன்பு. ஆகவே, நான் மிகுந்த பாக்கியசாலி என்ற பெருமைக்கு என்றும் பாத்திரமானவள்தான். — சங்கரி.

கடிதத்தைப் படித்து முடித்த எனக்கு ஆச்சரியம் தாளவில்லை. புடவை வந்து சேர்ந் ததாக எழுதியிருக்கிறாளே சங்கரி! அதை நான் பரிமளாவிடம் அல்லவோ சேர்ப்பித் தேன். அப்படியானால் பரிமளாதான் அதை அவளுக்கு அனுப்பியிருக்க வேண்டும்! ஆனால் பரிமளாவுக்கு எப்படி என் மனைவியின் விலா சம் தெரிந்தது? கடைசியில் அன்றைக்கு அவள் என்னிடம் சொன்னபடியே செய் திருக்கிறாளே இந்தப் பரிமளா!

ஓட்டமும் நடையுமாக ஆபீஸை அடைந் தேன். போனவுடன் முதல் காரியமாக ஆபீஸ் சேவகனை அழைத்து 'பரிமளாவை அழைத்து வா' என்று உத்தரவிட்டேன்.

அவளும் வந்தாள். ஆனால் இதென்ன? மற்றும் ஒரு அதிர்ச்சி! நான் வாங்கிக் கொடுத்த புடவை மாதிரியே அல்லவா கட்டிக் கொண்டிருந்தாள்?

பிரமிப்பில் சிலையாகி யிருந்த என்னிடம், "என்ன சார், வரச் சொல்லி அனுப்பி விட்டு, வந்தால் ஒன்றுமே பேசாமல் இருக் கிறீர்களே? என்ன அப்படிப் பார்க்கிறீர்கள்? அவ்வளவு தூரம் நீங்கள் ஆசைப்பட்டுப் பிடிவாதமாகக் கொடுத்திருக்கிறீர்கள். பிறகு எப்படி மறுப்பது? ஆகையால் உங்கள் திருப்திக்காகக் கட்டிக் கொண்டு விட்டேன். அப்பாவும் ஒன்றும் சொல்லவில்லை" என்றாள் பரிமளா. அவள் இன்னும் முடிக்கக் கூட வில்லை. ஆனால் இதுவரை அந்தகாரத்தில் அழுந்திக் கிடந்த என் மனத்தில் பளிச்சிட் டது ஒரு ஜோதி.

அந்த ஜோதியின் நடுவே புடம் வைத்த தங்கம் போல ஒளியோடு பிரகாசித்தாள் — என் மனைவி சங்கரி.

ஆம்; என் மனைவி என் கௌரவமே தன தாக எண்ணி என்னைக் காட்டிக் கொடுக்கா மல், புடவை வந்து சேர்ந்ததாகச் சந்திரா வுக்குச் சாமர்த்தியமாகப் பதில் எழுதி என் மானத்தைக் காப்பாற்ற முன்வந்திருக்கிறாள்!

அவள் விவேகத்தைக் கண்டு வியந்தேன்.

பரிமளா, மீண்டும் தொடர்ந்தாள்:

"என் தகப்பனார் இந்த மாதத்திலிருந்து கண்டிப்பாக வேலைக்குப் போகக் கூடா தென்று கட்டளையிட்டு விட்டார். அதனால் தயவுசெய்து இந்த ராஜினாமாவை ஏற்றுக் கொள்ள வேண்டும்."

இப்போது நான் ஒன்றும் மறுத்துக் கூற வில்லை. அவள் ராஜினாமாவை ஏற்றுக் கொண்டதாக ஒரு குறிப்பு எழுதி அதைப் பரிமளாவுக்குச் சேவகன் மூலமாக அந்தக் கணமே அனுப்பி வைத்தேன்.

என் மனம் நன்றாகத் தெளிவடைந்து விட்டது. ஏக்கம் நீங்கி இன்பம் குடிகொண்ட என் இதய வானத்திலே கிரகணம் விட்ட சந்திரனைப் போல் பிரகாசித்தாள் என் மனைவி சங்கரி—அந்த வெறும் பெண்!

# வட்ட மேஜை

## சிறுநிலச்சுவான்தார் படும் அவதி

சட்டசபையில் 1956-ம் வருஷம் "குடியானவர் பாதுகாப்பு மசோதா" "நியாய வார மசோதா" இவை சட்டமாக்கப்பட்டன. இவ்விரு சட்டங்களால் "சிறு நிலச்சுவான்கள்" (ஐந்து ஏக்கருக்குக் குறைவாக உள்ள நிலக்காரர்கள்) மிகவும் பாதிக்கப்பட்டனர். இவர்கள் நிலம் பூராவையும் சொந்தமாக உழுது பயிர் செய்ய முடியாத வகையில் இருக்கிறார்கள். காரணம் "குடியானவர் பாதுகாப்பு மசோதா"தான். நியாயவாரச் சட்டப்படி குத்தகைக்கு விட்டால் "சிறு நிலச்சுவான்கள்" இருக்கும் இடமே தெரியாமல் பூமியை விற்று விட்டு எங்கேயாவது செல்ல வேண்டியதுதான். அப்படி அவர்கள் பூமியை விற்றுவிடலாம் என்று யோசனை செய்தாலும் வாங்க வருபவர் பூமியைச் சுவாதீனம் கேட்கிறார். குத்தகைக்காரர் சுவாதீனத்துக்கு விட மறுக்கிறார்.

'சிறு நிலச்சுவான்தாரர்'களின் நிலைமை இப்படி இருக்கிறது. சில இடங்களில் குத்தகைக்காரர்கள் சட்டப்படி 40, 60 கூடக் கொடுக்காமல் மாசூலைத் தாங்களே அநுபவித்தும் வருகிறார்கள். இதற்குக் காரணம் சிறு நிலச்சுவான்தார்கள் கோர்ட்டுக்குப் போகவேண்டிய பண வசதி இல்லாமல் இருப்பதே. மேலே சொல்லப்பட்ட காரணங்களால் சிறு நிலச்சுவான்தார்கள் மிகவும் அவதியுற்றுத் தவிக்கிறார்கள். கேரள சட்டசபையில்கூட ஐந்து ஏக்கர்களும் அதற்குக் கீழும் உள்ளவர்களுக்குப் பூரண விலக்கு அளிக்க ஏற்பாடுகள் செய்து வருகின்றனர். கேரளத்தைப் பார்த்தாவது சென்னை சர்க்கார் சிறுநிலச்சுவான்தாரர்களுக்கு ஆவன செய்யும் என நினைக்கிறேன்.

கரூர்
12-12-57

ஏ. நாகராஜன்

## நன்றி!

வியாழன் உறங்கி வெள்ளி எழுந்ததும் கண்ணில் தென்படும் 'கல்கி' இதழைப் பற்றி ஒரு வார்த்தை. கஸ்தூரி பெட்டகத்தைத் திறந்ததும் நறுமணம் வீசும். கல்கி இதழைத் திறந்ததும் அறிவு மணம் வீசும். இதை வாசகர்கள் அறிவார்கள்.

உயர்ந்த கருத்துக்களையும் லட்சியங்களையும் மக்களுக்கு ஊட்டி வரும் கல்கி பத்திரிகைக்கு எனது மனமார்ந்த நன்றி:

காஞ்சீபுரம்
13-12-57

ஏ. டி. விஜயலக்ஷ்மி

★

## நாட்டுக்கு நல்ல பணி

"நாட்டு வைத்தியம்" என்ற பகுதியைக் 'கல்கி'யில் ஆவலுடன் தொடர்ந்து படித்து வரும் அன்பர்களில் நானும் ஒருவன்.

சித்தர்களின் நூல்களைக் கண்டு பிடித்தல் அரிது; அப்படியும் எல்லா நூல்களையும் ஒன்று சேர்த்தல் மிகவும் அரிது; அவர்களின் மொழியை நேரடியாக அறிந்து கொள்வதும் சாதாரணமாக எல்லோருக்கும் சாத்தியமில்லை. அந்த நூல்களில் உள்ள விஷயங்களை எங்களுக்கு விளக்கிக் கூறப் பல அறிஞர்கள் தேவை. இப்பணியைத் திரு ஸ்ரீஹரி ஏற்று வெற்றிகரமாகச் செய்து வருவது கண்டு மிக மகிழ்கிறேன். என்போல் ஆயிரக்கணக்கான பேர்கள் பலனும் மகிழ்வும் பெறுவர் என்று நம்புகிறேன்.

ஆங்கில வைத்திய முறை பயின்றவர்கள், முன்பு அரிசி உணவு, மது, ஆஸ்பிரின், காலராவுக்கு வாக்சின் ஊசிமூலம் குத்தும் முறை ஆகியவை பற்றிக் கூறின தீர்மானங்களை இப்போது மாற்றிக் கொண்டிருக்கிறார்கள். இவை தங்களுக்குத் தெரியும். மேலும், பெனிசிலினும், சல்பா மருந்துகளும் கண்டு பிடிக்கப்பட்டபின் ஆங்கில வைத்திய அமைப்பில் பெரும் மாறுதல் ஏற்பட்டிருக்கிறது: அதாவது ஆங்கில வைத்தியம் வளர்ந்து கொண்டு வருகிறது.

தமிழ் சித்தர்கள் முறையானது பல்லாயிரக் கணக்கான ஆண்டுகளாக அநுபவித்துக் கண்ட உண்மைகள் ஆகும். நம்மவர் 'நாகரிகம்' என்று மயங்கிய காரணத்தால் நாட்டு வைத்தியத்தை ஒதுக்கியும் மறந்தும் விட்டனர். வரவேற்பு இன்மையால் நாட்டு வைத்தியர்களும் மிக மிகக் குறைந்து விட்டனர். மேலும் ஆராய்ந்து தமிழ் மருந்துகளைக் கண்டு பிடிக்க வசதியில்லாமல் போய்விட்டது. இந்நிலை இப்போது மாற்றம் அடைந்து வருகிறது என்று நினைக்கிறேன்.

பட்டணத்திலே நாட்டு வைத்தியத்தைக் கவனிப்பார் மிகக் குறைவாக இருக்கலாம்; ஆனால் கிராமங்களின் நிலை வேறு. இங்கெல்லாம் ஆங்கில வைத்தியம் பரவவில்லை; பரவ முடியாது. நாட்டு வைத்தியமும் மங்கி வருகிறது. ஆங்கில வைத்தியம் செய்து கொள்ளப் பணம் இல்லை; நாட்டு வைத்திய முறையைத் தெளிவாகச் சொல்வாரில்லை. இவ்விரு முறையும் கிராமங்களுக்கு முழுப் பலன் அளிப்பதில்லை.—கிராமத்தில் ஒருவருக்கு ஏதேனும் ஓரிரு மருந்து முறைகள் தெரிந்திருந்தாலும் அவர்கள் அதை, 'அந்த ரகசியத்தை' வெளியிடுவதில்லை. அது அவர் சொந்தச் சொத்தாகி விடுகிறது. மேலும் அந்த நாட்டு வைத்திய மருந்து எண்ணிக்கையும் மிகச் சொற்பம்.

இவற்றை எண்ணும்போது "நாட்டு வைத்திய"ப் பகுதி கிராமங்களுக்கும், நகரத்தில் உள்ளோருக்கும் ஒரு வரப்பிரசாதம் ஆகும்.

துக்கநாய்க்கன்பாளையம்
22—11—57

என். வி. ஜகந்நாதன்

## பற்றுக்குறை ஏன்?

தேசிய வர்த்தக ஸ்தாபனம் (ஸ்டேட் டிரேடிங் கார்ப்பரேஷன்) என்றதும் பொது மக்களும், வியாபாரிகளும் சிமெண்ட் பற்றுக் குறை, விலை உயர்வு இவ்விரண்டையும் பற்றித்தான் முதலில் எண்ணுவார்கள். ஏனெனில் மேற்படி ஸ்தாபனம் ஏற்படுவதற்கு

# பஞ்சசிலம் பிழைக்குமா?




முன்னர் தமிழ் நாட்டில் ஒவ்வொரு ஊரிலும் அநேகமாக மூன்று வகை சிமெண்ட் உற்பத்தியாளர்களின் (நீலகிரி, டால்மியா, சங்கர்) விற்பனை ஏஜண்டுகள் பொதுமக்களுக்கு எப்போதும் பற்றுக்குறையின்றி விநியோகம் செய்தனர். அப்போது சிமெண்ட் விலை இப்போதுள்ள விலையை விடக் குறைவான விலையில் எல்லோருக்கும் தாராளமாகக் கிடைத்தது.

ஆனால் தேசிய வர்த்தக ஸ்தாபனம் இயங்க ஆரம்பித்த உடன் சிமெண்ட் விலையை உயர்த்தி. இந்த ஜில்லாவுக்கு இந்தக் கம்பெனி தான் எனக் குறிப்பிட்டு அந்தக் கம்பெனியே முழு விநியோகமும் செய்யவேண்டும் என ஏற்பாடு செய்தது. மேற்படி ஸ்தாபனம் இயங்குவதற்கு முன் கடந்த மூன்று ஆண்டுகளின் விற்பனையளவையே அடிப்படையாகக் கொண்டு ஒவ்வொரு வியாபாரிக்கும் அளவு நிர்ணயிக்கப்பட்டுள்ளது. அடிப்படை அளவுகோலாகவும் காலமாகவும் கொண்ட அந்த மூன்றாண்டுகள் சிமெண்ட் வியாபாரிகளின் மந்த வியாபார காலங்கள் ஆகும். இந்த அடிப்படை அளவுகோல் காரணமாகத்தான் தமிழ் நாட்டில் சிமெண்ட் பற்றுக்குறை இன்றும் நிலவி வருகிறது.

'சர்க்கார் நடத்தும் வர்த்தகம்' என்று 15-12-57 கல்கி இதழில் திரு எம். எஸ். சிவசாமி அவர்கள் எழுதிய கட்டுரையில் சிமெண்ட் விலை உயர்வுக்குக் காரணங்கள் அருமையாக விளக்கப்பட்டுள்ளன.

தேசிய வர்த்தக ஸ்தாபனம் சில பொருள்களின் வியாபாரத்தில்தான் ஈடுபட்டுள்ளது; என்றாலும் அநேக வர்த்தகர்களின் வேலையில்லாத் திண்டாட்டங்களுக்கு அது காரணமாக இருக்கிறது என்பதை அரசாங்கம் கவனிக்குமா?

அதிராம்பட்டணம்
16—12—57

அ. உலகநாதன்

## கைத்தறிக்குப் பாதுகாப்பு!

கைத்தறிகளில் கால் பங்குக்கும் குறைவான கூட்டுறவு சங்க நெசவாளர்களுக்கு மட்டும் விற்பனை 'ரிபேட்' வசதியளித்து வந்தது பாரபட்சமானது. இதனால் பெரும்பாலான நெசவாளர்கள் மில் துணிப் போட்டியுடன் 'ரிபேட்' கொடுக்கப் பெறும் கைத்தறித் துணியுடனும் போட்டியிட வேண்டியிருக்கிறது. இந்நிலையைத் தங்களுக்குச் சென்ற வருஷத்தில் விளக்கி எழுதி யிருந்ததும் தாங்கள் இதை ஆதரித்துத் தலையங்கத்தில் எழுதி யிருந்ததோடு 'மாற்றாந்தாய்' என்ற தலைப்பில் கார்ட்டூன் வெளியிட்டதும் போற்றத் தக்கவை.

மத்திய அரசாங்கம் இதை உணர்ந்து ரிபேட் முறையை ஒழித்து வருவது கண்டு உண்மையில் ஒவ்வொரு நெசவாளியும், குறிப்பாகக் கூட்டுறவு சங்கத்தில் சேராதவர்கள், மகிழ்ச்சி யடைவார்கள். ராஜாஜியின் திட்டமான கைத்தறிக்குப் புடவை வேஷ்டி ஒதுக்கித் தருவதை மத்திய சர்க்கார் அமுலாக்குவதே கைத்தறிக்குப் பாரபட்சமில்லாத, பணச் செலவில்லாத மாபெரும் உதவியாகும். அரசாங்கம் கவனிக்குமா?

ஈரோடு
13-12-57

ஈ. எஸ். அங்கமுத்து

✱

## புதிய தொடர்

'கல்கி' இதழில் 'கான்ஸ்டபிள் கந்தசாமி' என்ற புதிய தொடர்கதையின் ஆரம்பம் ரசமாக அமைந்திருக்கிறது. கந்தசாமி இளமையும் உற்சாகமும் நிறைந்த வெகு சுவாரஸ்யமான கதாபாத்திரம்.

சென்னை
23-12-57

ஆர். சூடாமணி

# பல்சுவை ததும்பும் நூல்கள்

**எரிமலை** - வீர சாவர்க்கர்

தமிழாக்கம்: ஜயமணி சுப்பிரமணியம்
1857-ம் ஆண்டு இந்தியாவில் நிகழ்ந்த முதல் சுதந்திரப் போராட்டத்தின் வரலாறு. ரூ. 6-00

**வாழ்வு எங்கே?** - அகிலன்

லட்சியத்துக்கும் காதலுக்கும் இடையே நடைபெறும் போராட்டத்தை எடுத்துச் சொல்லும் இனிய சமூக நாவல். ரூ. 5-00

**முள் வேலி** - பி. எம். கண்ணன்

பருவப்பெண் ஒருத்திக்கு, குடும்பத்துக்கு வெளியே நேரிடும் கஷ்டங்களையும் அவற்றை அவள் சமாளிப்பதையும் எடுத்துக் காட்டும் சமூக நாவல். ரூ. 4-00

**வாழ்க்கைப் பாதை** - எல். என். சியாமளா

தான் காதலித்த பெண்ணே தனக்குச் சித்தியாக அமைகிறாள். அந்த நிலையில் ரவீந்திரனின் உள்ளப் போராட்டத்தைச் சித்திரிக்கும் ஸ்ரீ நாராயணசாமி ஐயர் பரிசு பெற்ற நாவல். ரூ. 3-50

**காந்த மலர்** - பி. எம். கண்ணன்

வட இந்தியாவில் தோன்றிய இந்து - முஸ்லிம் கலகங்களைப் பின்னணியாகக் கொண்ட உள்ளம் உருக்கும் குறு நாவல். ரூ. 1-25

**பனித்திரை** - சிந்தர்க்கர் - நாகு

படிப்பில்லாத பட்டறைத் தொழிலாளி ஆனந்தனுக்கும் அவனுடைய படித்த மனைவி யசோதைக்கும் ஏற்படும் போராட்டத்தைச் சித்திரிக்கும் புதுமையான நாவல். ரூ. 2-00

**பாரதி பாடிய பாவலர்** - ஆர். ஸ்ரீநிவாசன்

வள்ளுவர், இளங்கோ, கம்பர் ஆகிய முப்பெரும் புலவர்களைப் பற்றிய இலக்கிய விமரிசனம். ரூ. 1-75

❋

**கலைமகள் காரியாலயம்**
மயிலாப்பூர் - - சென்னை-4

# ஆசியாவிலே ஒரு தொழிற்சாலை

கோயம்புத்தூரிலிருந்து இருபத்திரண்டு மைல் தூரத்தில் உள்ள மேட்டுப் பாளையத்தில் சென்ற வாரம் நிகழ்ந்த ஒரு முக்கிய சம்பவம், பாரத நாடு தொழில் துறையில் மற்றொரு படி முன்னேறியுள்ளது என்பதைப் பிரகடனப்படுத்தியது. இந்திய சர்க்கார் கனரகத் தொழில் மந்திரி ஸ்ரீ மனுபாய் எம். ஷா மேட்டுப்பாளையத்தில் அமைக்கப்பட்டுள்ள செயற்கை வைரத் தொழிற்சாலையைச் சென்ற டிசம்பர் மாதம் 20-ம் தேதி திறந்து வைத்தார். ஆசியாவிலேயே இது தான் முதன் முதலாக ஆரம்பிக்கப்பட்டுள்ள செயற்கை வைரத் தொழிற்சாலை என்பது இந்திய மக்கள் யாவரும் பெருமை அடைய வேண்டிய விஷயமாகும்.

இதைத் தவிர, ஸ்விட்ஜர்லாந்தில் ஐந்தும், பிரான்சில் ஒன்றும், அமெரிக்காவில் ஒன்றும், ஜெர்மனியில் ஒன்றுமாக உலகிலேயே செயற்கை வைரத் தொழிற்சாலைகள் ஒன்பது தான் இருக்கின்றன. நாற்பது ஏக்கர் நிலத்திலே இருபத்திரண்டு லட்சம் ரூபாய் செலவில் நிர்மாணிக்கப்பட்டுள்ள இந்தத் தொழிற்சாலை நீலகிரி மலை அடிவாரத்தில் பவானி நதியின் கரையில் இருக்கிறது. இத்தொழிற்சாலையிலிருந்து வருஷந்தோறும் சுமார் இருபத்தைந்து லட்சம் ரூபாய் மதிப்புள்ள செயற்கை வைரக் கற்கள் உற்பத்தி செய்யலாமென மதிப்பிட்டிருக்கிறார்கள். சில ஆண்டுகளில் இந்தியாவுக்குத் தேவையான சுமார் பதினைந்து டன் செயற்கை வைரங்கள் மேற்படி தொழிற்சாலையிலேயே உற்பத்தியாகும் என்று எதிர்பார்க்கிறார்கள். இது வரை இந்தியாவுக்குத் தேவையான செயற்கை வைரங்கள் பெரிதும் ஸ்விட்ஜர்லாந்திலிருந்து தான் இறக்குமதியாகி வந்துள்ளன.

செயற்கை வைர உற்பத்தி சம்பந்தமாக நம் நாட்டில் குடிசைத் தொழில் அடிப்படையில் சுமார் இரண்டாயிரம் சிறிய தொழிற்சாலைகளும் இருக்கின்றன. வைரங்களை அறுப்பது, பட்டை தேய்ப்பது, மெருகு கொடுப்பது முதலியன அத்தொழிற்சாலைகளின் அலுவலாகும். எனவே, மேற்படி குடிசைத் தொழில்களில் ஈடுபட்டுள்ள குடும்பங்கள்; இனி வெளிநாட்டு இறக்குமதிகளை எதிர்பார்த்துக் கொண்டிருக்க வேண்டிய அவசியமில்லை. அத்தொழிலில் திறமை வாய்ந்தவர்கள் திருச்சி, திருச்சூர் முதலிய இடங்களில் ஏராளமாக இருக்கிறார்கள். இதன் பயனாக, செயற்கை வைரங்களுக்காக லட்சக் கணக்கான தொகை வெளிநாடுகளுக்குச் செல்லும் விபரீதமும் நின்றுவிடும்.

செயற்கை வைர உற்பத்திக்கு அவசியமான அம்மோனியம் சல்பேட், அலுமினியம் சல்பேட் போன்ற மூலப்பொருள்கள் இந்தியாவிலேயே கிடைக்கின்றன. கையில் வெண்ணெயை வைத்துக் கொண்டு நெய்க்கு அலைவதுபோல, செயற்கை வைர உற்பத்திக்கு அவசியமான மூலப் பொருள்களையெல்லாம் இந்தியாவில் வைத்துக்கொண்டு, அவ்வைரங்களை வெளிநாடுகளிலிருந்து இறக்குமதி செய்வது அறிவீனமல்லவா?

* * *

கோவையில் ஏற்கெனவேயுள்ள தொழில் துறைகளுடன் போட்டி போடாமல், புதிதாக ஒரு தொழிலை ஆரம்பித்திருப்பது மிகவும் பாராட்டத் தக்க ஒரு சாதனையாகும். இதன் பயனாக, புதிதாக ஆயிரக் கணக்கானவர்களுக்கு வேலை கிடைக்கவும் வழி ஏற்பட்டிருக்கிறது. நவீன தொழில் துறைகளில் இந்தியா இன்னும் எவ்வளவோ படிகள் முன்னேற வேண்டியிருக்கிறது. எனவே, மேற்படி உதாரணத்தைப் பின்பற்றிப் பல இடங்களிலும் புதுத் தொழில்கள் ஆரம்பிக்கப் படுமென எதிர் பார்க்கலாம். இவ்விதமாக, மேட்டுப் பாளையத்தில் திறக்கப்பட்டுள்ள செயற்கை வைரத் தொழிற்சாலையின் பலனாகப் பல நன்மைகள் ஏற்படும் என்பதில் ஐயமில்லை.

பல ஆண்டுகளுக்கு முன் செயற்கை வைரங்கள் நகைகளுக்கு மாத்திரமே உபயோகிக்கப்பட்டு வந்தன. இப்போதோ, தொழிற்சாலைகளின் பல காரியங்களுக்கும் வைரக் கருவிகள் இன்றியமையாததாக இருக்கின்றன. எனவே, செயற்கை வைரத் தொழிற்சாலை வளர்ந்துவரும் இந்தியாவின் தொழில் துறை முன்னேற்றத்தின் ஒரு முக்கிய அம்சமாகத் திகழும் என்பது நிச்சயம்.

# கி. ரா. கோபாலன் குடும்ப உதவி நிதி

குமுதம் காரியாலயம், சென்னை-10. 50 00

திரு எஸ். பரமேஸ்வர ஐயர் சிங்கப்பூர். 50 00

திரு ஏ.இ. முனியாண்டி, உலுபர் ஸைம், எஸ். பெரா அவர்கள் மூலம்: (68 ஷில்லிங்) 45 05

பம்பாய் தமிழ் எழுத்தாளர் சங்கம் காரியதரிசி திரு காயாமி அவர்கள் மூலம் வசூல் 36 00

திருமதி செல்லம் நாராயணசாமி கும்பகோணம் மூலம் வசூல்: திருமதி சாவித்திரி ஆர். ராமமூர்த்தி ரூ. 10-00, திரு ஜி. நாராயணசாமி ரூ. 5-00, திரு ராஜா 5-00, திரு கிருஷ்ணமூர்த்தி ஐயர் ரூ. 2-00, திரு கே. சீனிவாச அய்யங்கார் ரூ. 2-00, ஒரு ரூபாய் அளித்த அன்பர்கள், திருவாளர்கள், டாக்டர் ராஜகோபால், டி. எஸ். சுப்பிரமணியன், பி. கிருஷ்ணமூர்த்தி ஐயர், எஸ். ராகவாச்சாரியார், வி. கணபதி. ஒரு ரூபாய்க்குக் குறைவாக வந்த தொகை உள்பட ரூ. 34 00

திருமதி இ. வி. ராமசந்திரன், குவைட். (40 ஷில்லிங்) 26 50

திரு வி. தாமஸ், குவைட் 25 31

பங்களூர் பாரதி தமிழ்ச் சங்கம் காரியதரிசி திரு கே. எம். சங்கர நாராயணன் மூலம் வசூல்: ஒரு ரூபாய் கொடுத்த அன்பர்கள், திருவாளர்கள்: கே. எம். சங்கர நாராயணன், கே. ஜி. சீனிவாசன், கே. ஆர். சீனிவாசன், எம். எஸ். சீனிவாசன், எம்.எஸ். ரெங்காச்சாரி, ஏ. எஸ். மணி, பி. கண்ணன், ஒரு அன்பர், எஸ். வி. சிவகுமார். ஒரு ரூபாய்க்குக் குறைவாக வந்த தொகை உள்பட ரூ. 24 04

திரு ஸ்ரீஹரி, செல்லக்கோடி, நுங்கம்பாக்கம், சென்னை - 6 ரூ. 20 00 (கடைசி தவணை: மொத்தம் ரூ. 50)

திருமதி எஸ். வி. ராமசாமி, பம்பாய் 20 00

தமிழ் இலக்கியச் சங்கம், ஜோத்பூர் ரூ. 20 00

திரு டி. ஏ. நீலகண்டன், வடக்கு போர்னியோ (30 ஷில்லிங்) ரூ. 19 88

திரு எம். ஏஎன். நாகப்பன், பங்களூர் ரூ. 10 00

திரு கே. என். கைலாசமய்யர், கொல்லங்கோடு ரூ. 10 00

திரு ஏ. எஸ். சிவராமகிருஷ்ணன், பம்பாய் - 26 ரூ. 10 00

திருமதி ராஜீ. எஸ். ஐயர், பம்பாய் 10 00

தாம்பரம் மாதர் சங்க அங்கத்தினர்கள்: தாம்பரம் 10 00

ரூபாய் ஐந்து கொடுத்த அன்பர்கள், திருவாளர்கள்: எஸ். கே. ரங்கராஜன், கிருஷ்ணா சிமெண்ட் ஒர்க்ஸ், ஆந்திரப் பிரதேசம்: சிவமயம், பதுளை, இலங்கை; என். சுப்பிரமணியம், பம்பாய்; ஆர். ராமகிருஷ்ணன், பங்களூர்; திருமதி பத்மா சர்மா, ரீவா; அரவரசன், ரீவா; ஏ. எஸ். ஐயங்கார், புது தில்லி; சி. கோவிந்தராஜுலு, பாப்பநாயக்கன் பாளையம், கோயமுத்தூர்; என். வி. கிருஷ்ணய்யர், திருப்பணித்துறை; ஜி. சந்திரசேகரன், ராணிப்பேட்டை; பி. ஆராவமுதன் பீஹார்; கலைமணி கழக அங்கத்தினர்கள், மங்களூர்; பி.எஸ். பி. நடேசன், செவ்வாய்ப்பேட்டை, சேலம்; திருமதி ஜி.வி. எஸ். ராவ், பரோடா; அ. வேதாசலம், அரந்தாங்கி; அ. பொன்னுத்துரை, இராஜகிரி, வி. எஸ். சேகரன், இராஜகிரி; இலங்கை: ஏ. கே. கிருஷ்ணசாமிராவ், திருச்சி. ஆக ரூ. 90 00

ரூபாய் மூன்று கொடுத்தவர்கள்: திரு ஆர். கோபாலன், தென்னூர், திருச்சி; திருமதி ஜானகி ஐயர், ரீவா. ஆக ரூ. 6 00

ரூபாய் இரண்டு கொடுத்த அன்பர்கள், திருவாளர்கள்: டி. ஏ. அப்பாசாமிப் பிள்ளை, ராயபுரம், சென்னை; எஸ். ராஜலக்ஷ்மி, துரைசாமிபுரம், கோவில்பட்டி; கே. ரங்கசாமி, பிலாஸ்பூர், மத்திய பிரதேசம்; எம். எஸ். டி. சாரி, தோர்நாக்கல்: கே. ஜே. வி. ராகவன், தோர்நாக்கல்; திருமதி மீனாட்சி, ரீவா; டி.டி.இ. ஐயர், ரீவா: ஆக ரூ. 14 00

ரூபாய் ஒன்று கொடுத்த அன்பர்கள், திருவாளர்கள்: க.க. கிருஷ்ணமூர்த்தி, தாம்பரம்; ஜயராஜ ராஜசேகரன், தாம்பரம்; அருணாசலம், தாம்பரம்; கோவிந்தராஜன், தாம்பரம்; சி. நடராஜன், தாம்பரம்: எஸ். நாராயணன், சென்னை; டி. சி. சுப்பிரமணியம், மைசூர்: என். சரோஜ் ஐயர், நாக்பூர்; என். சரோஜினி தேவி, தஞ்சாவூர்; ஆர். சங்கர நாராயணன், தானவாய்புரம்; திருமதி டி. சாவித்திரி, சென்னை; குமாரி எஸ். ஜயலக்ஷ்மி, பெரம்பூர், சென்னை: சி.எஸ். சேதுராமன், கரூர்; எம். துரைசாமி, சென்னை; கே. ரங்காச்சாரி, தோர்நாக்கல்; செல்லப்பன், ரீவா; எஸ். ஆர். விசுவநாதன், ரீவா; டி. எஸ். ராஜகோபாலன், ரீவா: டி. டி. வெங்கட்ராமன், ரீவா. ஆக ரூ. 19 00

ஒரு ரூபாய்க்குக் குறைவாக வந்த தொகை 00 75

முன் வசூல் 1473 73

ஆக ரூ. 2024 26

## பாலமந்திரின் தொண்டு

தேனாம்பேட்டையில் நடைபெறும் காங்கிரஸ் பொருட்காட்சியில் சிசு சம்ரக்ஷண இந்திய மகாசபை எழுபத்துமூன்றும் நம்பர் ஸ்டாலில் மாலை 5 மணியிலிருந்து 7 மணி வரையில் தினசரி நமது நாட்டு வைத்தியர் ஸ்ரீஹரி அவர்களிடம், வைத்திய சம்பந்தப்பட்ட ஆலோசனைகள் கேட்கலாம். சென்னை, பால மந்திர் இந்த ஏற்பாட்டைச் செய்திருக்கிறது. ஆலோசனைக் கட்டணமாக 25 நயா பைசா வசூலிக்கப்படும். மேற்படி தொகை பால மந்திரத்தின் நிதியில் சேர்க்கப்படும்.




மனிதனுக்கு அத்தியாவசியமான ஆரோக்கிய வாழ்வை விளையாட்டுக் கலையே அளிக்கிறது. சோர்ந்து கிடக்கும் மனிதனுக்குச் சுறுசுறுப்பை யூட்டிச் சோபை யளிக்கக் கூடியது விளையாட்டு. இந்த விளையாட்டுக் கலையிலே எத்தனையோவித ஆட்டங்கள் இருக்கின்றன. கால்பந்தாட்டம் தமிழ் நாட்டில் வானளாவும் தஞ்சைக் கோபுரம் போல் இன்று தலைசிறந்து விளங்குகிறது.

சென்னையில் நடக்கும் கால்பந்தாட்டப் போட்டிகளுக்கு மக்கள் ஆயிரக்கணக்கில் திரளாக வந்து ரஸிப்பதிலிருந்தே இந்த ஆட்டத்தின் மகிமையைத் தெரிந்துகொள்ளலாம்.

ஒரு பள்ளிக்கூடத்தின் சிறப்பை அந்தப் பள்ளியிலிருந்து கற்றுத் தேர்ந்த மாணவர்களின் கலைச் சிறப்பிலிருந்து தெரிந்து கொள்கிறோம். தஞ்சையிலுள்ள கல்யாணசுந்தரம் உயர்நிலைப்பள்ளி இணையற்ற கால்பந்தாட்டக்காரர் திரு கிட்டுவை இந்தியாவுக்கு வழங்கிப் பெருமையடைந்திருக்கிறது. கால் பந்து ஆட்டத்திலே இன்று தமிழ்நாட்டின் பெருமையை அவர் வடநாட்டில் நிலைநாட்டியிருக்கிறார்.

சோழ நாட்டில் வற்றாது பாயும்காவிரி யன்னையின் கருணைக்குப் பாத்திரமான தஞ்சையில் 5-6-1932-ல் பிறந்தார். விளையாட்டுக் கலையில் ஆர்வம் மிகுந்திருந்தாலும் படிப்பிலும் கவனம் செலுத்தி மெட்ரிகுலேஷன் படித்திருக்கிறார்.

'கற்றோர்க்குச் சென்ற விடமெல்லாம் சிறப்பு' என்பதுபோல் திரு கிட்டுவுக்கு விளையாட்டு அரங்கங்களிலெல்லாம் வரவேற்பு கிட்டியதில் வியப்பில்லை. கிழக்கு வங்காளக் கால் பந்தாட்டக் குழுவினர் அவரது ஆட்டத் திறமையைக் கண்டு தங்கள் கோஷ்டியில் சேர்த்துக்கொண்டனர். கிழக்கு வங்காளக் கால்பந்தாட்டக் குழுவினருக்கும் பல இடங்களில் வெற்றி பெறுவதற்கு அவர் காரணகர்த்தராக விளங்கினார். நம்பிக்கை உண்டானால் வெற்றியுண்டு. அந்த நம்பிக்கையின் முக்கிய இலட்சணம் விடாமுயற்சி. அந்த அருங்குணம் கலைஞர் கிட்டுவிடம் அபாரமாக இருக்கிறது.

1953 ம் வருஷம் ருமேனியா விளையாட்டுத் திருவிழாவிலும், 1954 ம் வருஷத்தில் ஹாங்காங்கிலும், மணிலாவிலும் 1955 ம் வருஷம் நிகழ்ந்த டாக்கா விளையாட்டுப் போட்டியிலும் 1956 ம் வருஷம் ஆஸ்திரேலியாவில் நடந்த ஒலிம்பிக் விளையாட்டுப் போட்டியிலும் அவர் கலந்து கொண்டார் என்று சொன்னாலே போதும்; அவரது விளையாட்டுத் திறமையை அந்த வெளிநாட்டுப் பிரயாணங்கள் நன்கு நிரூபித்து விடுகின்றன.

ரஷ்யாவில் புகழ்பெற்ற நெட்டோ என்ற கால்பந்தாட்ட வீரரைப் போல் இந்தியாவில் கலைஞர் கிட்டு இணையற்று விளங்குகிறார்.

ஆழ்கடல் பிரும்மாண்டமாக அலைகளை அள்ளித் தெளித்து உலகெங்கும் வியாபித்திருக்கிறது! ஆனால் அதன் தண்ணீர் உப்பு கரிக்கிறது. எங்கோ ஒரு மூலையிலுள்ள நீருற்று சிறிதாக இருந்தாலும் அதன் தண்ணீர் தேவாமிருதமாக விளங்கவில்லையா! பார்ப்பதற்குக் குள்ளமாகத் தோற்றமளித்தாலும் திரு கிட்டு ஆழ்கடலைவிட மேன்மையான நீருற்றைப் போன்றவர். அவரது குட்டையான உருவத்தைக் கண்டு அவரது ஆட்டத்தை எடை போட்டால் நிச்சயம் ஏமாந்து போவார்கள். 'விளையாட்டுக் குழுவின் குழந்தை' என்று செல்லமாக அழைக்கப்படுபவர் கால்பந்தாட்டக்காரர் கிட்டு. அவர் மூர்த்தி சிறிது! ஆனால் கீர்த்தி பெரிது. அவருக்கு இத்தனை திறமையும் பெருமையும் ஒரே நாளில் வந்துவிடவில்லை; நீண்ட நெடு நாட்கள் இடைவிடாத பயிற்சியினாலும் சலியா உழைப்பினாலுமே கிடைத்தன.

ஒருவருக்குக் கலைத் தேவியின் பூரண அருள் கிடைத்து விட்டதென்றால் உடனே துரதிர்ஷ்ட தேவதை சும்மா விருப்பதில்லை. அவளும் தனது விளையாட்டுத் திறமையைக் காட்டி விடுவது வழக்கம். கலைஞர்கிட்டுராஜுல் தான் கால்பந்துக் குழுவினருக்காக ஒரு போட்டியில் விளையாடிக் கொண்டிருந்த போது காலில் காயம் பட்டு அன்று முதல் விளையாட இயலாமல் போய் விட்டது.




இப்போது திரு கிட்டு டாக்டர் ¡போசலேயின் பேரில் தஞ்சையில் பூரண ஓய்வு பெற்று வருகிறார். கலைத்தேவியின் பரிபூரண அருளுக்குப் பாத்திரமான திரு கிட்டு விரைவில் குணம் பெற்று மறுபடியும் கால்பந்தாட்டத்தில் சிறந்துவிளங்கவேண்டும் எனப் பிரார்த்திக்கிறோம். —குண்டுமணி


திருவெம்பாவை
முன்னிக் கடலைச் சுருக்கி யெழுந்துடையாள்
என்னத் திகழ்ந்தெம்மை யாளுடையாள்
இட்டிடையின்
மின்னிப் பொலிந்தெம் பிராட்டி திருவடிமேற்
பொன்னஞ் சிலம்பிற் சிலம்பித் திருப்புருவம்
என்னச் சிலைகுலவி நந்தம்மை யாளுடையாள்
தன்னிற் பிரிவிலா எங்கோமான் அன்பர்க்கு
முன்னி யவணமக்கு முன்சுரக்கு இன்னருளே
என்னப் பொழியாய் மழையேலோ ரெம்பாவாய்


திருப்பாவை
மணியம்
உந்துமதகளிற்றன் ஓடா தோள்வலியன்
நந்தகோபாலன் மருமகளே ! நப்பின்னாய் !
கந்தம்கமழும்குழலீ ! கடைதிறவாய்
வந்துஎங்கும் கோழிஅழைத்தனகாண் மாதவிப்
பந்தல்மேல் பல்கால்குயிலினங்கள்கூவினகாண்
பந்தார்விரலி ! உன்மைத்துனன்பேர்பாட
செந்தாமரைக்கையால் சீரார்வளையொலிப்ப
வந்துதிறவாய் மகிழ்ந்தேலோரெம்பாவாய்.

அத்தியாயம் 4

# கௌரவத் திருட்டு



நாடு விடுதலை பெற்றுக் கொண்டிருந்த காலம் அது.

காடுகளிலே சிங்கம் தன் உணவுக்காக உயிர்ப் பிராணியை அடித்துக் கொன்று தின்று விட்டு, அலட்சியமாய் அந்த எலும்புக் கூட்டைத் தூக்கி எறிந்து போன பிறகு, அதைப் பகிர்ந்து கொள்வதற்காகச் சிறு பிராணிகளுக்குள் கடுமையானதொரு போராட்டம் நிகழ்வதுண்டு. பிணம் தின்னும்கழுகுகள் வானத்தில் வட்டமிட்டுக் கொத்தும், குள்ளநரிகள் ஊளை யிட்டுப் பிடுங்கும்; ஓநாய்கள் தங்களுக்குள் உறுமிக் கொண்டு வேகமாகப் பாய்ந்து வரும்.



# பாவை விளக்கு

வெள்ளைக்காரன் இந்த நாட்டின் சாற்றை உறிஞ்சிச் சக்கையைத் துப்பி விட்டுப்போன பிறகு, எஞ்சியிருந்த மிச்சத்தைப் பங்கு போட்டுக் கொள்ளுவதில் இந்த நாட்டில் அப்படியொரு பரபரப்பான சுயநலப் போராட்டம் எதிர்பாராமல் தொடங்கியது. சந்தர்ப்பவாதிகள் தலைநகரங்களில் வந்து கூடி, எரிந்து தணிந்த வீட்டில் பிடுங்கிய வரையில் ஆதாயம் என்று வாழ்க்கை வசதிகளைப்பிடுங்கப் பார்த்தார்கள். தொழில், வாணிபம், அரசியல் துறைகளில் திடீர் திடீரென்று சில ஏமாற்று வித்தை நாடகங்கள் நடக்கத் தொடங்கின. செல்வம் கை மாறியதே தவிரப் பெருகவோ பசித்தவனுக்குப் பகிர்ந்தமுறையில் பயன்படவோ இல்லை. இந்த நிலையைத் தமக்குச் சாதகமாக்கிக் கொள்ளப் பசுபதியும் கண்ணபுரத்திலிருந்து சென்னைக்கு வந்து சேர்ந்தார்.

தணிகாசலம் நாளாவட்டத்தில் பசுபதியைப் புரிந்து கொண்டான். பசுபதிக்கு எழுத்து ஒரு கருவி; வயிற்றுப் பிழைப்புக்கு வேறு வசதி கிடைத்து விட்டால் இதைக் கை நழுவ விடுவார். தணிகாசலத்துக்கோ அது உயிர்மூச்சு; அதனால் பிழைப்புக்கே முன்பு இடைஞ்சல் வந்து விட்டது; கடும் சோதனைகளும் தொடர்ந்தன.

ஒரு நாள் பசுபதி தணிகாசலத்தை அழைத்துக் கொண்டு பிரமுகர்கள் சிலரைப் பேட்டி காண்பதற்காக நகரத்துக்குள் கிளம்பினர். கிழட்டு ரிக்ஷாக்காரன் ஒருவனைத் தேடிப் பிடித்து, அவன்வயிற்றில் அடிப்பது போல் பேரம் பேசி, தாமும் உட்கார்ந்துகொண்டு அவனையும் ஏறிக் கொள்ளச் சொன்னார். தணிகாசலம் கிழவனின் உருவத்தையும் பசுபதியின் உருவத்தையும் பார்த்து விட்டுத் தயங்கினான்; பசுபதி அவனை அவசரப்படுத்தினார். சென்னை நகரத்தின் தெருக்களில் அவர் அவனை ஓட ஓட விரட்டிய போது தணிகாசலத்துக்கு






முள்ளின் மேல் உட்கார்ந்திருப்பது போல் தோன்றியது. இந்தச் சிறிய அநுபவத்துக்கு முன்பு தணிகாசலம் பேனுப் பிடித்தவர்கள் எல்லோரும் லட்சியவாதிகள் என்றும் பரந்த மனம் படைத்தவர்கள் என்றும் நினைத்துக் கொண்டிருந்தான்.

பசுபதி சந்தர்ப்பவாதி, சாமர்த்தியசாலி. ஈவு, இரக்கம் பச்சாத்தாபம் முதலிய உணர்ச்சிகளை வறுத்துத் தின்றுவிட்டு வாழக் கற்றுக் கொண்டவர். தம்மைவிடப் பணத்திலோ, பதவியிலோ பெரியவர்களிடம் பசப்புச் சிரிப்பு சிரித்துக் குழைந்து கொடுத்தார்: தம்மை ஒத்தவர்களிடமும் தம்மைத் தேடி வந்தவர்களிடமும் பராமுகமாக நடந்து பிரமுகர்த்தனம் பண்ணிக் கொண்டார். தணிகாசலத்திடம் மட்டிலும் அவருடைய நடிப்பு கொஞ்சம் குறைந்திருந்தது. அவனால் அவருக்குப் பல வேலைகள் ஆக வேண்டியிருந்தன வல்லவா?

பசுபதியின் தொழிலைப்பற்றி வெளியே விளக்கமாகச் சொல்லாமல் இருப்பது நல்லது. உண்மையில் அது தொழிலே இல்லை. ஆயிரம் பிரதிகளை அச்சடித்து வெளியில் அனுப்பி ஐந்நூறு பிரதிகளுக்கு மேல் அவர் திருப்பப் பெற்றார். அவருடைய சுய விளம்பரத்துக்காகவும், பிரமுகர்கள் தங்கள் படங்களைப் பார்த்து மகிழ்வதற்காகவும், விளம்பரக்காரர்களுக்காகவும் நடத்தப்பட்ட லட்சியப் பத்திரிகை அது. அங்கே தமிழும் இல்லை; இலக்கியமும் இல்லை; அதற்கான குறிக்கோளும் இல்லை.

தணிகாசலம் தான் சரியாக விவரம் தெரியாமல் வந்து அகப்பட்டுக்கொண்டு விட்டதற்காக விழித்தான். இனிமேல்

குற்றாலத்துக்குத் திரும்பிப் போவது முடியாத காரியம். முன்வைத்த காலைப் பின் வைக்கும் வழக்கம் மட்டிலும் அவனிடம் இல்லை. பல்லைக் கடித்துக் கொண்டு கூடியவரையில் அவருடன் உழைக்க விரும்பினான். சென்னை நகரம் இதற்குள் அவனுக்கு நன்றாகப் பழக்கமாகி விட்டது. நூல் நிலையம், கடற்கரை, கடைத் தெரு, குப்பங்கள், நடைபாதைகள் முதலிய இடங்கள் அவனுக்குப் பொழுதுபோக்காக அமைந்தன. எல்லாவற்றுக்கும் மேலாகச் சென்னையில் உமா இருந்தாள்.

'மலர்க்கொத்து' ஆசிரியர் கந்தசாமியை அவன் எப்போதாவது சந்தித்தான்; அவரிடம் தன் கஷ்டங்களைச் சொல்ல அவனுக்கு விருப்பமில்லை. அவனுடைய மதிப்புக்கு ஆளாகியிருந்த வேறு சில எழுத்தாளர்களையும் சென்று பார்த்தான். ஒரு சிலர் அவனிடம் நீண்ட சொற்பொழிவு நிகழ்த்தினார்கள். இன்னும் சிலர் திரும்பிப் பார்ப்பதற்கும் வாயைத் திறப்பதற்கும் பணம் கேட்டார்கள். நண்பர்களைத் தேடிப் பிடிப்பது அங்கே அருமையாக இருந்தது. யாரிடமும் அவனாகச் சென்று கலகலப்பாகப் பேசிப் பழகியதில்லை.

ஞாயிற்றுக்கிழமைகள் வராவிட்டால் அவன் என்றைக்கோ சென்னையை விட்டுத் திரும்பியிருப்பான். வாரத்தில் ஆறு நாட்களும் ஏமாற்றம், வறுமை, நம்பிக்கை வறட்சி, லட்சியச்சிதைவு, போலி வாழ்க்கை இவற்றுடன் போராடிக் களைத்த தணிகாசலத்துக்கு உமா தன் புன்முறுவலால் புதுவாழ்வளித்தாள். குற்றாலத்தில் இருந்தபோது தணிகாசலத்தைப் போற்றிப் புகழ்ந்த பசுபதி தம்மை எதிர்பார்க்கும் நிலைக்கு அவன் வந்தவுடன் அலட்சியம் செய்யத் தொடங்கினார்.

ஆனால் அவனை லட்சியம் செய்வதற்கும் மதிப்பதற்கும், பாராட்டுவதற்கும், அவனுக்கு விருந்தளித்து மகிழ்வதற்கும் எப்போதுமே காத்துக் கொண்டிருந்தாள் உமா.

அப்படி இருந்தும்கூட ஒரு ஞாயிற்றுக் கிழமை அவன் அவளைப் பார்ப்பதற்கு மாம்பலம் செல்லவில்லை. அலுவலகத்தில் நடந்த சிறு நிகழ்ச்சி ஒன்று அவன் மனத்தைத் துளைத்துக் கொண்டிருந்தது. மத்தியானம் கடையில் சாப்பிட்டு விட்டு வந்து சோம்பலுடன் அறையில் படுத்துக் கிடந்தான். எதிர்பார்த்து வந்த பலரை அந்த நகரம் வஞ்சித்து விரட்டியது போலவும், தன்னையும் அது வஞ்சித்து விட்டது போலவும், தன்னையும் அது வஞ்சித்து விரட்டக் கூடும் என்றும் அவனுக்கு பயம் வந்துவிட்டது. பசுபதியைப் போன்றவர்களால் தான் அங்கு வாழ முடியுமா?

பசுபதியின் செய்கை அவன் நெஞ்சை உறுத்தியது. அவர் திருட்டுத் தொழிலில் இறங்கியிருப்பதை அவன் கண்டு பிடித்து விட்டான். நூதனமான திருட்டு அது; திறமையுடன் செய்து விட்டால் வெளியுலகத்தில் அதனால் புகழையும் பொருளையும் தேடிக் கொண்டு விடலாம். அதனால் பாதிக்கப் படுபவர்கள் ஒருசில அப்பாவிகளே.



பத்திரிகைப் பொறுப்பு முழுவதும் பசுபதி தணிகாசலத்திடம் விட்டு விட்டு, வேறு லாபமுள்ள வேலைக்காக முயற்சி செய்து கொண்டிருந்தார். அடிக்கடி அவரைத் தேடிச் சில இளைஞர்கள் வந்தார்கள்; அடிக்கடி எங்கிருந்தோ கார்கள் வந்து அவரை அழைத்துச் சென்றன; திரும்பவும் கொண்டு வந்து விட்டன. தணிகாசலத்திடம் அவர் சரியாக ஒன்றையும் சொல்லவில்லை. "பத்திரிகை வளர்ச்சிக்காகப் பணம் தேடும் முயற்சியில் ஈடுபட்டுக் கொண்டிருக்கிறேன். ஆறு மாதங்களில் தமிழ்நாட்



டையே ஒரு கலக்குக் கலக்கி விடுவோம்" என்று அவனை உற்சாகப்படுத்தினார்.

அவனுடைய உற்சாகத்தை விரட்டி அடிப்பது போல் அந்த வாரத்தில் ஒரு சம்பவம் நடந்தது. பசுபதியைப் பார்ப்பதற்காக வந்த சிலர், "அவரிடம் இந்தக் கதைகளைக் கொடுத்து விடுங்கள்; எங்களிடம் நேரில் கண்டு கேட்டார்கள். நாலைந்து நாட்களில் திரும்பி வருகிறோம்" என்று சொல்லி விட்டுச் சென்றார்கள். அவர்கள் எல்லாம் வந்தபோது பசுபதி அலுவலகத்தில் இல்லை.

பத்திரிகைக்கு வந்த கதைகள் என்று நினைத்துக் கொண்டு தணிகாசலம் படித்துப் பார்த்தான். பத்திரிகைகளுக்காக எழுதப்பட்ட கதைகள் அல்ல அவை. பெரிய பெரிய கதைகளின் சுருக்கமாகவும், நிகழ்ச்சிக் கோவையாகவும் இருந்தன. வந்திருந்த நான்கு சுருக்கங்களில் இரண்டு குப்பைக்கூடைக்கு ஏற்றவை; ஒன்றில் சிற்சில பகுதிகள் மட்டும் கொஞ்சம் சுமாராக இருந்தன; மற்றொன்றில் நல்ல கதை அமைப்பும் கருத்துக்களும் காணப்பட்டது.

பசுபதி திரும்பி வந்தவுடன் விவரத்தைக்கூறி அவரிடம் கதைகளைக் கொடுத்தான் தணிகாசலம். அன்றைக்கு இரவு அவற்றைத் தம்முடைய வீட்டுக்குக் கொண்டு போய் வைத்திருந்து விட்டு, மறுநாள் அவனிடம் கொடுத்து, "தபாலில் திருப்பி அனுப்பி விடுங்கள், கதைகள் ஒன்றிலும் சாரமில்லை" என்று உதட்டைப் பிதுக்கினார்.

"நண்பர் குமாரசாமியும் நானும் திரைப்படத் தொழிலில் இறங்கப் போகிறோம். அதற்காக நல்ல கதைகள் அகப்படுமா என்று பார்த்தேன். மற்றவர்களைக் கேட்பதைவிட தானே எழுதி விடலாமென்று நினைக்கிறேன்."

குமாரசாமியைப் பற்றிக் குறிப்பிட்டவுடன் தணிகாசலத்துக்குக் குற்றாலத்துக் காட்சி நினைவுக்கு வந்தது. அந்த இளைஞருடனும் செங்கமலத்தோடும் அவன் பேசிப் பழகியதை எண்ணிப் பார்த்தான். இனிய சுபாவமுள்ள அந்த மிராசுதார் இப்போதைக்குப் பசுபதியின் நண்பர் என்பதையும் அவன் கண்டு கொண்டான். தனக்கும் அவரை நன்றாகத் தெரியும் என்று பசுபதியிடம் சொல்லிக் கொள்ளவில்லை.

இரவோடு இரவாக ஒரு குதம்பக் கதைச் சுருக்கம் எழுதிக் கொண்டு வந்து அதை மறுநாள் தணிகாசலத்திடம் படித்துக் காட்டினார் பசுபதி. அவர் படித்துக் காட்டியதற்கு முக்கியமான காரணம் ஒன்று இருந்தது. படிக்கும் போது அவனிடமிருந்து ஏதாவது இலவச யோசனைகள் புதிதாகக் கிடைக்காதா என்ற ஆவல். வக்கீல்களிடமோ டாக்டர்களிடமோ கணக்கர்களிடமோ யோசனை கேட்பதற்குப் பணம் கொடுக்க வேண்டும். உலகை உருவாக்கும் எழுத்தாளனுடைய யோசனைக்கு எதற்குப் பணம்?

பசுபதி பாதிக் கதையைப் படித்துக் கொண்டு வரும் போதே தணிகாசலத்துக்குப் பகீரென்றது. அவர் எந்தக் கதைகளைத் திருப்பி அனுப்பியிருந்தாரோ அவற்றின் பகுதிகளில் சில அவர் எழுதிய திரைக்கதைச் சுருக்கத்தில் இருந்தன. அத்துடன் அவர் நிற்கவில்லை. தணிகாசலம் எழுதி அவரே

தமது பத்திரிகையில் வெளியிட்ட கதையிலுள்ள ஒரிரு ரசமான காட்சிகளையும் தம்முடையதாக்கிக் கொண்டார். கதையைப் படித்து முடித்து விட்டு, ''நன்றாக இருக்கிறதா?'' என்று கேட்டார் பசுபதி. ''கதையை மாற்றி அமைப்பதற்கு உங்களுக்கு ஏதாவது கற்பனைகள் தோன்றினாலும் சொல்லுங்கள்'' என்றார்.

தணிகாசலத்தின் கற்பனையும் வயிறும் அப்போது ஒன்றாகப் பற்றிக் கொண்டு எரிந்தன. 'புலிக்குப் பசி எடுத்தால் அது மற்றொரு புலியை அடித்துத் தின்றது; மனிதனுக்குப் பசி எடுத்தால் அவன் மற்றொரு மனிதனை அடித்துத் தின்பான்' என்று ஒரு தமிழ் எழுத்தாளர் எங்கோ எழுதியிருந்தார். தணிகாசலத்துக்கு அந்த எழுத்துக்கள் இப்போது நினைவில் வந்தன. திருடிய மனிதர், திருடப்பட்ட பொருளை, திருட்டுக் கொடுத்தவரிடமே காண்பித்து விலை மதிப்புக் கேட்டால் எப்படி இருக்கும்? பசுபதி ஒன்றுமறியாதவர் போல் அவனிடமே கருத்தைக் கேட்டார்.

''எப்படியிருக்கிறது என் கதை? பிடித்துக் கொண்டால் இதன் மதிப்பு என்ன தெரியுமா? பத்தாயிரம் ரூபாய்!''

''நன்றாக இருக்கிறது உங்கள் கதை!'' என்று சொல்லி விட்டு, அப்படி ஒரு பொய் சொன்னதற்காக அடுத்தாற் போல் இருந்த குழாய்த் தண்ணீரில் வாயைச் சுத்தமாகக் கொப்பளித்துக் கொண்டான் தணிகாசலம்.

மனத்தில் பட்ட உண்மையைச் சொல்லிவிட வேண்டுமென்று தணிகாசலம் சில விநாடிகள் துடிதுடித்தான். 'நீங்கள் செய்திருப்பது கற்பனைத் திருட்டு; இப்படிச் செய்ததற்காக நீங்கள் வெட்கப்பட வேண்டும்' என்று அவருடைய முகத்துக்கு எதிரில் சொல்லத் தோன்றியது. தனக்குப் படி அளக்கும் பரமசிவம் அவர். ஏற்கனவே மனத்தில் பட்டதை வெளியில் சொல்லிச் சொல்லிப் பல துன்பங்களை அவன் அனுபவித்தாகி விட்டது. சென்னை நகரத்தில் அன்றைக்கு உமாவைத் தவிர அவனுக்கு அடுத்த வேளைக்குச் சோறு போட ஆள் இல்லை. தணிகாசலம் தன்னைக் கட்டுப்படுத்திக் கொண்டான்.

அடுத்த நாள் தொடங்கி அவனுக்கு அவருடன் ஒன்றாக இருந்து காலந்தள்ளுவது கடினமாகத் தோன்றியது. அந்த அலுவலகம் ஒரு சிறைச்சாலை போலவும், திருட்டுக் குற்றவாளி ஒருவரோடு தன்னையும் சேர்த்து அங்கே அடைத்துப் போட்டிருப்பது போலவும் அவன் கற்பனை செய்து கொண்டான். அவனுக்கு இந்த உலகத்தின் நடைமுறை உண்மைகள் இன்னும் ஏனோ புலப்படவில்லை. கல்யாணம் செய்து கொண்டு ஒரு குழந்தைக்குத் தந்தையாகும் நிலையில் கூடச் சென்னைப் பட்டணத்துக்கு வந்து ஓரளவு மனிதர் மத்தியில் அடிபட்ட பிறகும், அவன் வெகுளியாகவே இருந்தான்.

பசித்தவன் திருடினால் அவனுக்குச் சிறைச்சாலை; பசுபதி திருடினால் அவருக்குப் புகழ்மாலை. நாளைக்குப் பத்திரிகைகள் பல அவர் செய்யும் 'கலைப்பணி'யைப் பாராட்டி எழுதினாலும் அதில் ஆச்சரியப்படுவதற்கு ஒன்றுமில்லை! சட்டமும் போலீசும் சாமர்த்திய சாலிகளிடமும் செல்வாக்குள்ளவர்களிடமும் என்ன செய்ய முடியும்? பசுபதி அந்தக்



கதையை விரிவாக எழுதும்போது சட்டத்துக்குள் அகப்பட்டுக் கொள்ளும்படி ஏமாளித்தனமாகவா எழுதுவார்?

தணிகாசலம் தன் அறையில் படுத்தபடியே இந்தச் சிறிய விஷயத்தை நினைத்துக் குழம்பிக் கொண்டிருந்தான். கதை கொடுத்துவிட்டுப் பிறகு தபாலில் திரும்பப் பெற்றுக் கொண்டவர்களை அவனுக்குத் தனிப்பட்ட முறையில் தெரியாது. ஆனால் அவர்களும் எழுத்தாளர்களே. தணிகாசலத்துக்கு 'எழுதுகிறவர்கள் எல்லோரும் ஒரே குலம்' என்ற எண்ணம் உண்டு. அவர்களது சாதி, கட்சி, கொள்கை, எப்படி இருந்தாலும் அவர்கள் நாட்டுக்கு நல்லதைச்

சொன்னால் போதும். இதுவரையில் இல்லாத புதுமையைச் சொன்னால் போதும், அவர்கள் தன் உடன்பிறந்தார் என்று நம்பினான். அவனுக்குக் கோபம் வந்தது. பசுபதியின் செயல், மற்றவர்களையும் தீய வழியில் இழுத்துச் சென்று, ஏமாற்றுக்காரர்களின் கூட்டத்தைப் பெருக்க அடித்துவிடுமல்லவா? பிறர் எழுத்தைப் பிள்ளையில்லாச் சொத்து என்று மதித்தால் தன்னுடைய குறிப்புப் புத்தகத்தைத் தவிர அவனுக்கு ஆறுதல் தருவதற்கு வேறொன்றுமில்லை. நடந்ததைக் குறித்துக் கொண்டான் தணிகாசலம், 'பத்தாயிரம் பறிமுதல்' என்ற தலைப்பில்.

நாலு மணி அடித்தவுடன் வெளிக் கதவை யாரோ தட்டுவதுபோல் சத்தம் கேட்டது. வழக்கமாக ஞாயிற்றுக் கிழமைகளில் பசுபதியும் அங்கு வருவ



தில்லை; பையனும் வருவதில்லை. எழுந்து வந்து கதவைத் திறந்து விட்டான். உமா பிரமாதமான அலங்காரங்களுடன் கதவோரமாக ஒதுங்கி நின்றாள். "ஏன் நீங்கள் வரவில்லை? உடம்பு நன்றாக இருந்தால் வராமல் இருக்க மாட்டீர்களே என்று நினைத்தேன்; நினைத்தது சரிதான். உங்கள் முகத்தை இப்போது பார்க்கச் சகிக்கவில்லை! உடம்புக்கு என்ன?" என்று கேட்டாள்.

உடனே குழாயடிக்குப் போய் முகத்தைக் கழுவித் துடைத்துக் கொண்டு, 'பார்க்கச் சகிக்கக் கூடியதாய்' மாற்றிய வண்ணம் தணிகாசலம் அவளிடம் வந்தான். அவளை அதிகநேரம் அந்த இடத்தில் வைத்துக் கொண்டு பேசுவதற்கு அவனுக்குப் பிடிக்கவில்லை. 'நீ இங்கு வந்திருக்கவே வேண்டாம்' என்று சொல்ல நினைத்தவன், அதை மாற்றிக் கொண்டு, "வருகிறாயா, காதீருடப் பக்கத்துச் சாலையில் நடந்து வருவோம்?" என்று அழைத்தான்.

அவளைத் தேடிக் கொண்டு வந்த அவளுடைய நேர்மைத் துணிவு அவனுக்கு அச்சம் தந்தது. வீடும் அலுவலகமும் வேறு வேறு இடங்களல்லவா?

சிந்தாதிரிப் பேட்டைக்கும் மௌண்ட் ரோடுக்கும் மத்தியிலுள்ள சிறிய அடர்த்தியான மரங்கள் நிறைந்த அழகு நிழற் சோலை. பாதைக்கு அடுத்தாற்போலிருந்த பூங்காவில் குழந்தைகள் சிலர் ஓடிப் பிடித்து விளையாடிக் கொண்டிருந்தனர். சிமெண்டுப் பெஞ்சுகளில் ஒன்று காலியாகக் கிடந்தது; இருவரும் போய் அதில் உட்கார்ந்தார்கள்.

தணிகாசலம் நடந்த செய்திகளை அவளிடம் கூறாமல், "எனக்கு இனிமேல் இங்கு வேலை பார்க்கப் பிடிக்கவில்லை, உமா; எந்த ஆசைகளை வளர்த்துக் கொண்டு நான் சென்னை நகருக்கு வந்தேனோ அவை நிறைவேறுவதற்குரிய வழியைக் காணோம்" என்று கூறினான்.

உமா ஒருகணம் திடுக்கிட்டுத் தன் முகத்தை உயர்த்தினாள்.

"ஆமாம், உமா! பொன்வயலுக்கோ, கண்ணபுரத்துக்கோ நான் திரும்பப் போகிறேன். குற்றாலத்துக் குன்றைப் போல் உயர்ந்திருந்த என் பகற்கனவுகள் பட்டணத்து வாழ்க்கையில் படுசூரணமாகிக் கொண்டு வருகின்றன. உனக்குக் குற்றாலத்தின் தேனருவிக் கரை நினைவுக்கு வருகிறதா?" என்றான்.

"நன்றாக நினைவுக்கு வருகிறது!" என்று கேலியாகச் சிரித்தாள் உமா. "கௌரி இப்போது உங்கள் பக்கத்தில் இல்லையே என்ற உங்களுடைய ஏக்கமும் எனக்குத் தெரிகிறது. கௌரி வந்து விட்டால் உங்களுக்கு இந்த ஊர் பிடித்து விடும்" என்றாள் உமா.

உமாவின் குழந்தைத்தனமும் குறும்புத்தனமும் அவள் பேச்சில் போட்டியிட்டன. தேப்பியர் பூங்காவில் இருந்த தணிகாசலத்தை அவள் எங்கெல்லாமோ ஐந்தருவிக்கும், சிற்றருவிக்கும், அடர்ந்த பனிச் சோலைகளுக்கும் அழைத்துக் கொண்டு சென்றாள். கால் மணி நேரத்துக்கு முன்பு கசப்பாகவும், வெறுப்பாகவும் தோன்றிய அந்த நகரத்து வாழ்க்கை, அவளுடைய பேச்சுக்குப் பின்பு கனிவாகவும், சுவையாகவும் இன்பமாகவும் அவனுக்குள் மாறி விட்டது.

உமா கூறினாள்:

"மாமா! எல்லா ஊர்களிலும் வானத்துக் கூரை நேரத்துக்கொரு வண்ணம் காட்டுகிறது. எல்லா ஊர்களிலும் காற்று வீசுகிறது; கதிர் சிரிக்கிறது;



**ENICAR**
**ULTRASONIC**
*Seapearl*
**WATERPROOF**

- * 10½" ஸ்விஸ் லிவர் இயக்கம்
- * தட்டை வடிவம்
- * 21 ஜுவல்ஸ்
- * அதிர்ச்சியால் — பாதிக்கப்படாதது (INCABLOC)
- * உடையாத மெயின் ஸ்பிரிங்
- * காந்தத்தால் பாதிக்கப்படாதது
- * நவீன டயல்களுடன் பலரகங்கள்

**3 வருஷங்களுக்கு** எனிகார் அல்ட்ராஸோனிக் கடிகாரங்களுக்கு. எண்ணெய் போடவோ அல்லது சுத்தம் செய்யவோ வேண்டிய அவசியமே இல்லை.

* பிரபல கடிகாரக் கடைகளில் கிடைக்கும்

Exclusive Agents - **PHOENIX WATCH CO.**
( Branch: CALCUTTA-1 ) 169, Hornby Road, BOMBAY-1.

NAU - 1008

---

குழந்தைகளின் சுரம், குலைக்கட்டி வியாதிகளுக்கு

## ஜம்மியின் "லிவர்க்யூர்"

### மாதாந்திர விஜயம்

எமது வாடிக்கையாளர்களின் நலனையும், சௌகரியத்தையும் முன்னிட்டு எமது டாக்டர் கீழ்க்கண்ட இடங்களில் ஒவ்வொரு மாதமும் குறிப்பிட்ட தேதிகளில் விஜயம் செய்கிறார். அப்பொழுது அவரை நேரில் கலந்து ஆலோசிக்கலாம்.

ஆலோசனை நேரம்: குறிப்பு:—காலை 9 முதல் 11 மணி வரை; மாலை 3 முதல் 5 மணி வரை

| இடம் | தேதி | இடம் | தேதி |
|---|---|---|---|
| கரூர் | 1 காலை | விருதுநகர் | 9 காலை 8 to 9 |
| சேலம் | 2 காலை & மாலை | கோவில்பட்டி | 9 10-30 to 12; முற்பகல் |
| ஈரோடு | 3 காலை | தூத்துக்குடி | 9 மாலை |
| திருப்பூர் | 3 மாலை | திருநெல்வேலி | 10 காலை & மாலை 11 காலை |
| கோயமுத்தூர் | 4 காலை & மாலை | ஸ்ரீவைகுண்டம் | 11 மாலை |
| பாலக்காடு | 5 காலை | அம்பாசமுத்திரம் | 12 காலை |
| பொள்ளாச்சி | 5 2-30 to 3-30 மாலை | தென்காசி | 12 மாலை |
| உடுமலைப்பேட்டை | 5 4-30 to 5-30 மாலை | திருவனந்தபுரம் | 13 காலை & மாலை |
| பழனி | 5 6-30 to 7-30 மாலை | ராஜபாளையம் | 14 காலை |
| திண்டுக்கல் | 6 காலை | சிவகங்கை | 14 மாலை |
| பெரியகுளம் | 6 மாலை | காரைக்குடி | 15 காலை & மாலை |
| மதுரை | 7 & 8 காலை & மாலை | தேவகோட்டை | 16 காலை |
| | | புதுக்கோட்டை | 16 மாலை |

○●○

**ஜம்மி வெங்கடரமணய்யா & சன்ஸ்**
சென்னை — திருச்சிராப்பள்ளி — கும்பகோணம்

மலர் குலுங்குகிறது. இதில் எந்த ஊராக இருந்தால் என்ன? வேற்றுமை யெல்லாம் நம்முடைய மனத்தில் இருக்கிறதே தவிர வெளியில் இல்லை.''

''உமா! எனக்கு இந்த ஊர் இப்போது பிடித்திருக்கிறது'' என்று கூறினான் தணிகாசலம். கவிதைப் பெருக்கைப் போன்ற சொல்லழகை உமாவுக்குக் கொடுத்திருப்பது சென்னையில் வீசும் காற்றுத்தானே? அவளுடைய கவிதைகளை அவன் நினைத்துக் கொண்டான்.

உமா திடீரென்று இருக்கையிலிருந்து எழுந்து எதிரில் உள்ள செடிப் புதரைச் சுட்டிக் காட்டினாள். ''அதற்குப் பின்னால் நின்று யாரோ உங்களைப் பார்த்து விட்டு ஒதுங்கிக் கொண்டார்கள்; என்னைப் பார்த்த பார்வையில் சந்தேகம் தெரிந்தது. இப்போது கூட அங்கே தலை தெரிகிறது; எட்டிப் பாருங்கள்!''

தணிகாசலம் எழுந்து நின்று கவனித்தான்; உருவம் தெரிந்தது. யாரென்று விளங்கவில்லை. சந்தேகத்தைத் தீர்த்துக் கொள்வதற்காக அவனே புதரை நோக்கி வேகமாக நடந்தான். உமா அவனைப் பின்பற்றிச் செல்லாமல் தயங்கியபடியே ஒதுங்கி நின்றாள்.

## அத்தியாயம் 5
# குடிசையில் விருந்து

செடிகளுக்கப்பால் சென்று தணிகாசலம் எட்டிப் பார்த்தபோது அங்கு தலையைக் குனிந்தவண்ணம் தனியாகப் பசுபதி நின்று கொண்டிருந்தார். அவர் வீடு அருகில் இருந்ததால் தன்னைப் போலவே பொழுதைப் போக்குவதற்கு அங்கு வந்திருக்கக் கூடும் என்று நினைத்தான் தணிகாசலம். சற்று முன்பு இருந்த பரபரப்பு அவரைக் கண்டவுடன் ஓரளவு அடங்கியது: எதிரில் போய் நின்றான். உமா அவனோடு வராமல் சிமெண்டுப் பெஞ்சியில் திரும்பவும் உட்கார்ந்து கொண்டாள்.

பசுபதியின் நெற்றி சுருங்கியது; கண்கள் கேலிச் சிரிப்பு சிரித்தன; சந்தேகத்துடன் கேட்டார்: ''உங்களை இதுவரையில் நல்ல பிள்ளை என்றல்லவோ நினைத்தேன்? யார் அது?''

தணிகாசலம் விவரத்தைக் கூறினான். அவர் அதைக் காதில் போட்டுக்கொள்ளவில்லை. நம்பாத முறையில் சில வார்த்தைகளைச் சொன்னார். அவர் அப்படி நம்பாமலிருந்ததும் அவனுக்கு ஒரு வகையில் நல்லதாகப் போய் விட்டது. அது வரையில் அவன் குடும்பத்தை அழைத்து வரக் கூடாதென்று தடுத்தவர், அதற்கு மாறாக இன்று திரும்பி விட்டார்.

''சீக்கிரம் ஒரு வீடு பார்த்துக்கொண்டு குடும்பத்தை அழைத்து வந்து விடுங்கள். உங்கள் தாயார் வேறு இன்றைக்குக் கார்டு போட்டிருக்கிறார்கள்.''

ஞாயிற்றுக்கிழமை ஆதலால் தம் வீட்டுக்குக் கார்டு வந்திருப்பதாகவும் அடுத்த நாள் அதைக் கொண்டு வந்து கொடுப்பதாகவும் கூறினார் பசுபதி. பிறகு மேலும் சில புத்திமதிகளைக் கூறிவிட்டு அந்த இடத்தை விட்டுக் கிளம்பினார்.

தணிகாசலம் கவிழ்ந்த தலையோடு உமா இருந்த இடத்துக்குத் திரும்பி வந்தான். பசுபதியின் பேச்சுக்குப் பின்பு அவளுடன் அவனால் கலகலப்புடன் பேச முடியவில்லை. உமா காரணம் கேட்டு அவனை நச்சரித்தாள். அவன் ஏதோ சாக்குப் போக்கெல்லாம் சொல்ல வேண்டியிருந்தது. ஆனால் அவள் அதை ஒப்புக் கொள்ளவில்லை.

''என்னவோ மாமா. அவர் அப்படி நம்மை வெறித்துப் பார்த்தது எனக்குப் பிடிக்கவில்லை'' என்றாள் உமா.

''நீ எனக்கு என்ன உறவென்று தெரியாதல்லவா? அதனால் ஆச்சரியப் பட்டிருப்பார்.''

''என்ன உறவென்று சொன்னீர்கள்?''

''மருமகள் என்றேன்.''

''அதற்கு அவர் என்ன சொன்னார்?''

'''பார்த்தால் அப்படித் தெரியவில்லையே' என்றார்.''

உமாவுக்குக் கோபத்தால் மூக்கு சிவந்து விட்டது. பார்த்தவுடன் தெரிவதற்கு நெற்றியில் எழுதி வைத்துக் கொள்ள வேண்டுமா, என்ன? நீங்கள் ஏன் அவரைச் சும்மா விட்டு வந்தீர்கள்? என்னைக் கூப்பிட்டிருக்கக் கூடாது?''

தணிகாசலம் சிரித்தான்.

''உன்னை அங்கே கூப்பிட்டிருந்தால் என் பாடு இன்னும் ஆபத்தாகப் போய் விட்டிருக்கும். 'இவர் என்னுடைய அம்மா!' என்று நீ எதையாவது அவரிடம் உளறி வைப்பாய். பிறகு நம் இருவரையுமே கீழ்ப்பாக்கம் வைத்தியக் கார ஆஸ்பத்திரிக்கு அனுப்பி வைப்பதற்கு நினைப்பார், பசுபதி.''

''நான் ஒன்றும் நீங்கள் நினைப்பது போல் குழந்தையல்ல. எனக்கும் நாலு பேரிடம் நாகரிகமாகப் பேசிப் பழகத் தெரியும். நானும் எம். ஏ. படித்து முதல் வகுப்பில் தேறியவளாக்கும்!

உங்களைப் போல் படிக்கப் பயந்து கொண்டு பாதியில் நிறுத்த வில்லை.''

அந்த எம். ஏ. படித்த பெண் அதன் பிறகு தனக்குத் தெரிந்த ஊர்க் கதைகளை அவனிடம் சொல்லத் தொடங்கினாள். அண்டை அயல் வீட்டுக் கதைகள், கல்லூரிக் கதைகள், தோழிகளின் விசித்திரக் கதைகள்-இப்படி பலப் பல உண்மைக் கதைகள் வந்து குவிந்தன. தணிகாசலம் மிகவும் பொறுமையோடு கேட்டு வைத்துக்கொண்டான். கேள்விப்படுகிற செய்திகளில், உப்புச் சப்பில்லாத குப்பைகளை ஒதுக்கி விட்டுப் பார்த்தால் ஏதாவது உருப்படியான கதை வித்துக்களும் கிடைக்குமல்லவா?

தெரு விளக்குகள் 'குப்'பென்று பற்றிக் கொண்டு ஒளி சிதறின.

''நீ சொல்லும் கதைகளைக் கேட்டால் இன்பமாகவும், ஆபீஸ் பையன் சிங்



காரம் சொல்கிற கதைகளைக் கேட்டால் துன்பமாவும் இருக்கிறது. இங்கு நான் வந்த பிறகு நீங்கள் இரண்டு பேருமே கதை சொல்லுகிறீர்கள். இப்போது எனக்கு நாழிகையாகி விட்டது. முதல் முறையாக இன்றைக்கு இரவுச் சாப்பாட்டுக்கு அவன் வீட்டுக்கு வருவதாய் ஒப்புக் கொண்டிருக்கிறேன். நான் அவசியம் அவன்வீட்டுக்குப் போகவேண்டும்.''

உமா திடுக்கிட்டாள். பையனுடைய வருமானம், வாழ்க்கை நிலை, குடியிருக்கும் தெரு இவற்றைக் கேட்டவுடன் அவளுக்கு வெறுப்பு தட்டியது. அவ்வளவு 'தாழ்வான' இடத்தில் தணிகாசலத்தைப் போன்ற ஒருவன் சாப்பிட ஒப்புக் கொள்ளலாமா?

''இப்படி நீங்கள் கண்ட-கண்ட இடங்களில் பழகுவது நன்றாக இல்லை, மாமா! கௌரியும் அத்தையும் நாளைக்கு வந்து இதைக் கேள்விப்பட்டால் என்ன நினைப்பார்கள்?'' என்றாள் உமா.

தணிகாசலம் கைக் கடிகாரத்தைக் காட்டினான். ''வருவதாய்ச் சொன்ன நேரத்தில் நான் அங்கே இருக்க வேண்டும். மத்தியானம் உன்னைப் பார்ப்பதற்கு மாம்பலத்துக்கும், இரவில் இங்கு சாப்பாட்டுக்கும் போக நினைத்தேன். சமைத்து வைத்துக் கொண்டு அவர்கள் எனக்காகக் காத்திருப்பார்கள்.''

''அப்படியானால் என்னையும் அழைத்துக் கொண்டு போங்கள். நான் சாப்பிட வரவில்லை; அந்த இடத்தைப் பார்த்து விட்டுத் திரும்புகிறேன். இத்தனை நாட்களாக இந்த ஊரில் இருந்துங்கூட நான் அங்கெல்லாம் போனதில்லை.''

தணிகாசலம் அவள் வரவை மறுத்துப் பார்த்தான்; கேட்கவில்லை. அழைத்துக் கொண்டு நடந்தான். பல சந்து பொந்துகளைக் கடந்த பிறகு, ஓடாத வாய்க்காலின் உயரமில்லாக் கரையின்மேல் முப்பது நாற்பது குடிசைகள் தென்பட்டன. அந்தக் குடிசைகள் கூடக் கிடைக்காதவர்கள் நாலடி அகலமுள்ள நீண்ட நடுத் தெருவில் வாழ்ந்தார்கள். தணிகாசலம் ஓரளவு பழக்கப்பட்டவன் போல் அந்த இடத்தில் வேகமாக நடந்தான்; உமா அவனை வாய்விட்டுத் திட்டிக் கொண்டே பின்தொடர்ந்தாள். வானத்துக் கூரையின் கீழ் வெட்ட வெளியில் விகற்பமின்றி நடந்த சமையல்-சல்லாபம்-குழந்தை வளர்ப்பு-குடும்ப வைத்தியம் முதலிய காட்சிகள் எல்லாம் அவளுக்கு மிகவும் அருவருப்பைத் தந்தன.

பாதித் தெருவில் வந்து நின்று கொண்டு, ''மாமா! நான் திரும்பிப் போகிறேன்'' என்றாள்.

''போய் விடு'' என்று சொல்லி விட்டுத் தணிகாசலம் முன்போலவே வேகமாக நடந்தான். அவள் போகவில்லை; அவன் பின்னால்தான் வந்தாள்.

அவன் குனிந்து கொண்டு ஒரு குடிசையின் தாழ்ந்த திண்ணையில் போய் உட்கார்ந்து கொண்டான்; அவளும் அவன் அருகில் போய் அமர்ந்தாள்.

''ஐயா வந்துட்டாங்க!'' என்று கூவிக் கொண்டே ஆனந்தத்துடன் வெளியே ஓடி வந்தான் சிங்காரம். அவனைத் தொடர்ந்து அவன் விதவைத் தாயாரும் எட்டிப் பார்த்தாள். கோரைப் பாய் போல் சுருக்கம் விழுந்த அந்தக் கிழவியின் முகத்தில் புதுமையான மலர்ச்சி தெரிந்தது.

இருவரும் உமாவைக் கண்டு திடுக்கிட்டு உள்ளே சென்று தங்களுக்குள் ரகசியம் பேசிக் கொண்டார்கள். ஆனால் அது ரகசியமாக இல்லை. தணிகாசலமும் உமாவும் அதைக் கேட்டு விட்டு, ஒரு

வரை யொருவர் கோபமாக முறைத்துப் பார்த்துக் கொண்டார்கள்.

கிழவி கேட்டாள்: "சாமி மாத்திரம் வருகிறாருன்னு சொன்னியே? அம்மாவையுமில்ல இட்டுக்கினு வந்திருக்காரு?"

"அம்மா புறப்பட்டு ரயில்லே வந்துட்டாங்க போலேருக்கு! வரப்போகிறதா ஐயா சொல்லிக்கிட்டிருந்தாரு. திடுகுன்னு வந்து குதிச்சிட்டாங்க!...சரி, சரி, இரண்டு பேருக்கும், இலையைப் போட்டுப் பரிமாறு" என்றான் பையன்.

பம்பரமாய்ச் சுழன்று கொண்டு அவர்கள் உள்ளே ஏற்பாடுகளைச் செய்தார்கள். உமா தணிகாசலத்தை வெறித்துப் பார்த்து விட்டு, "உங்கள் பையனின் நாக்கைக் கொஞ்சம் அடக்கி வையுங்கள்; என்னைக் கௌரி யாக்கி விட்டான்" என்றாள்.

"அடக்கமாக நடந்து கொள்ள வேண்டியது பையனல்ல" என்றான் தணிகாசலம். "அவனுக்கு நீ கௌரியில்லை; உமாதேவி; அல்லி ராணியின் வாரிசு என்று தெரியுமா?"

தணிகாசலத்துக்கு அவள் தன்னோடு அங்கு வந்தது சிறிதும் பிடிக்கவில்லை. நேரடியாக அதைச் சொல்லவும் முடியாமல் தவியாய்த் தவித்தான்.

"நான் இங்கே சாப்பிட முடியாது; எழுந்து போகப் போகிறேன்" என்றாள் உமா. இப்படிச் சொன்னாளே தவிர, அவள் எழுந்து போகவில்லை.

கிழவி வந்து சாப்பிட அழைத்தபோது முதலில் உள்ளே நுழைந்தவள் உமா தான்! 'சொல்வது ஒன்று, செய்வது ஒன்று' என முணுமுணுத்துக் கொண்டு தணிகாசலமும் அவளுக்கு அருகில் இலைக்கு முன் போய் உட்கார்ந்தான்.

சாப்பிட அழைத்தவர்களுக்கு அது விருந்து; சாப்பிட்டவர்களுக்கோ மருந்து. மிளகாய்க் காரம் கண்களில் தண்ணீரையும் நாக்கில் ரத்தத்தையும் வரவழைத்து விடும் போலிருந்தது. தணிகாசலம் சாதுர்யமாய்த் தண்ணீரைக் கலந்து கொண்டு இலையில் உள்ளதை உள்ளே தள்ளப் பார்த்தான். உமாவுக்கு என்ன செய்வதென்று புரியவில்லை. கடைகளில் வழக்கமாய்க் கிடைக்கும் காய்கறிகளைத்தான் கிழவி சமைத்திருந்தாள். என்றாலும் அவர்களுக்குப் பழக்கமில்லாத வாசனைகள் அதில் பரிமளித்தன. உமா சாப்பிடுவது போல் பாவனை செய்தாள். மோரைப் போட்டுக் கொண்டு இரண்டு வாய் எடுத்து வைத்தாள்; அவள் கண்கள் அழப் போவதாகப் பயமுறுத்தின. "இப்படித் தெரிந்தால் இங்கு வந்திருக்க மாட்டேன்" என்று அவனிடம் முணுமுணுத்தாள்.

"நானா உன்னை வருந்தி அழைத்தேன்?" என்றான் அவன்.

தணிகாசலம் சாப்பிட்டுக் கொண்டே அந்தச் சிறு வீட்டைக் கண்ணோட்டம் விட்டான். சட்டி பானைகள், கிழிந்த சாக்கு, பழைய பாய்கள், ஈரம் காத்த தரை, உடைந்த அரிக்கன் விளக்கு, ஓட்டைக் கூரை இப்படிச் சில பொருள்கள் அங்கு தென்பட்டன. செங்கல், சுண்ணாம்பு, சிமெண்டு, கவர் முதலிய சாதனங்கள் கிடையாது.

சாப்பாடு முடிந்தவுடன் வெற்றிலை போட்டுக் கொண்டு இருவரும் கிளம்பினார்கள். தணிகாசலம் அந்தக் கிழவியிடமும் பையனிடமும் உமா தன் மனைவியல்ல என்பதை மெல்லத் தெரிவித்து விட்டு வந்தான். கூடிய வரையில் இனிமேல் வெளியே அவளுடன் வரக்கூடாது என்ற எண்ணம் அவனுக்கு உண்டாயிற்று. 'கௌரி வருகிற வரையில் கவனமாக இருக்க வேண்டும்; நாலு பேர்கள் தவறாக நினைத்துக் கொள்வதற்கு இடமளிக்கக் கூடாது; உமாவிடம் இதைச் சொல்லிவிட்டால் அவள் வீணாக வருத்தப்படுவாள்.'



அந்தத் தெருவை விட்டு வெளியே வந்தவுடன் ஒரு குழாயடியில் தன்னைப் பிடித்துக் கொண்டு உட்கார்ந்தான் உமா. சாப்பிட்ட சாப்பாடு ஏற்கனவே உள்ளே இருந்ததையும் சேர்த்துக் கொண்டு வெளியில் வந்தது. வாயைக் கொப்பளித்து விட்டு முகத்தைக் கழுவிக் கொண்டு தணிகாசலத்துடன் நடந்தாள்.

அவனுக்கு அவளிடம் இரக்கம் பிறந்தது. "இங்கெல்லாம் நீ வந்து சிரமப் பட்டிருக்க வேண்டியதில்லை" என்றான்.

"நீங்கள் வரும்போது நான் வந்தால் என்ன?" என்றாள் உமா.

தணிகாசலம் மெதுவாகச் சிரித்தான். "வாழ்க்கைப் பள்ளிக்கூடத்தில் நான் ஒரு மாணவன்: இதுதான் என் படிப்பு; நீ அப்படியில்லை."

"இதுதான் வாழ்க்கையா?" என்று வருத்தத்துடன் கேட்டாள் உமா.

"நல்ல இடங்களை விட்டு விட்டு இங்கே வந்து கால்களை அழுக்காக்கிக் கொள்ள வேண்டுமாக்கும்?"

"நல்ல இடங்களில் உள்ளவர்களின் கால்கள் அங்கே பட்டு அழுக்காகி யிருந்தால்தான் இதற்குள் இந்த இடங்களுக்கு விமோசனம் பிறந்திருக்குமே? அடுத்தவர் நிலையைத் திரும்பிப் பார்த்து இரங்கும் நல்ல மனம் இப்போது நமக்கு அருகி வருகிறது, உமா! இந்த நகரத்தின் சொத்து மதிப்பென்ன? தொழில் மதிப்பென்ன? உழைப்பு மதிப்பென்ன?... கணக்குப் போட்டுப் பார். இவ்வளவு கேவலமாகப் பல மனிதர்கள் இங்கு வாழ வேண்டியது அவசியம்தானா?"

தணிகாசலத்தின் மனப் போக்கை உமா ஓரளவு புரிந்து கொள்ள முயற்சி செய்தாள். எந்த இடத்தில் அவன் இருந்தாலும், அந்த அந்த இடத்துச் சூழ்நிலையில் அது அகப்பட்டுக்கொண்டு தவித்தது.

தணிகாசலம் நடந்து கொண்டே மேலே பேசினான்: "மனம் இருப்பவனிடம் பணம் இல்லை; பணம் இருப்பவனிடம் மனம் இல்லை. என்றால் இவர்களுக்கு ஒரு உதவியும் செய்ய முடியாது. சிறிது சிறிதாக விவரங்களைச் சேகரித்துக்கொண்டு, சீக்கிரம் இவர்களுக்கு ஒரு வழி பிறக்கவில்லையானால், இந்த வாழ்க்கையை வைத்து ஒரு பெருங் கதை எழுதுவேன். பயங்கரமான பல உண்மைத் தகவல்கள் கிடைத்திருக்கின்றன. அவற்றை வெளியிட்டால் நெஞ்சுள்ளவர்கள் நினைத்துப் பார்ப்பார்கள். அறிவு படைத்தவர்கள் ஆராய்ச்சி செய்வார்கள். வலிமையுள்ளவர்கள் உழைக்க முன் வருவார்கள்.

"உங்கள் போக்கே எனக்குப் பிடிக்கவில்லை, மாமா!" என்றாள் உமா. "உங்களுக்கு எதற்கு ஊர் வம்பு?"

"உனக்குப் பிடிக்காவிட்டால் என்ன? நீ ஒரு உல்லாசப் பிராணி. மனச்சாட்சி உள்ள மனிதர்கள் பலர் இந்த உலகில் இருக்கிறார்கள். அவர்கள் மனத்தை நான் அசைக்கப் பார்க்கிறேன்."

தணிகாசலம் உண்மையில் கோபமாகவே அவளிடம் பேசினான். அதைக் கண்டு நடுநடுங்கினாள் உமா. "ஏன் உங்களுக்கு இத்தனை கோபம்?"

"கோபமில்லை; வருத்தம்; பயம். இப்படி ஒரு இழிந்த நிலையை நாம் வைத்துக் கொண்டிருந்தால், நாளைக்கு யாருக்குமே இந்த நிலை வரக்கூடுமல்லவா? அதற்காகச் சொல்கிறேன். விஞ்ஞானம் வளர்வதாய்க் கூறுகிறீர்களே, அதனால் இவர்களுக்கு என்ன பலன்? ஆதி மனிதன் கண்டு பிடித்த ஓலைக் கூரையும் மூங்கிலும்தானே இவர்களை இன்றைக்கும் மூடி மறைக்கப் பார்க்கின்றன. மழை பெய்தால், புயலடித்தால், வெள்ளம் வந்தால் பாதிக்கப்படுகிறவர்கள் யார்? நகரத்தில் எங்கே நாகரிகம் பரவியிருக்கிறது? எங்கே விஞ்ஞானம் உதவுகிறது?"

பேசிக் கொண்டே அவர்கள் மவுண்ட் ரோடு வட்டத்துக்கு வந்து சேர்ந்தார்கள். தணிகாசலத்தின் மனக் கொதிப்பை உணர்ந்துகொண்ட உமா அவனை மெல்ல மெல்லத் தேற்றினாள்: "என்னை மன்னித்து விடுங்கள், மாமா! இந்த ஊருக்குள்ளேயே இருந்துகொண்டு ஒரு குறிப்பிட்ட செல்வந்தர் வீடுகளுக்குள் பழகி வருகிறேன் நான். எனக்கு இதெல்லாம் ஒன்றும் தெரியாது."

தணிகாசலம் அவளைத் திரும்பிப் பார்த்தான். அவள் களங்கமற்ற முகத்தில் கலக்கம் தெரிந்தது.

"உன்னைக் குறை சொல்ல வில்லை, உமா! நீ என்னைப் பழிக்காமல் இருந்தால் அதுவே போதும்" என்றான். "மேடு பள்ளங்களில் திரிந்து வாழ்க்கையில் நன்றாக அடிபட வேண்டும் என்று நினைக்கிறேன் நான்."

"நன்றாக அடிபடுங்கள்!" என்று சொல்லிச் சிரித்தாள் உமா.

---

கார் நிற்கும் இடத்தில் காத்து நின்று அவளை மாம்பலத்துக்கு அனுப்பிவிட்டு, தணிகாசலம் தன் அலுவலகத்து அறையில் உறங்கப் போனான். அன்றைக்கு உமாவோடு கழித்த சிறு பொழுது அவனுக்கு வேடிக்கை-வேதனை இரண்டையுமே தந்தது. காற்றுப் பட்டால் நடுங்கி உதிரும் சிறு மலரைப் போன்ற அவள், தன்னோடு அலைந்து திரிந்த காட்சியை ஒருகணம் நினைத்துப் பார்த்தான். அவனுக்கு ஒரே வியப்பாக இருந்தது.

(தொடரும்)



# உயர்நிலைப் பள்ளியின் சதாபிஷேகம்

என். ராமகிருஷ்ணு (பழைய மாணவன்)

தஞ்சை மாவட்டத்தில் சிறந்ததொரு பள்ளிக்கூடமாகக் கருதப்படுகிறது மாயூரம் நகராட்சி உயர்நிலைப் பள்ளி. வருடந்தோறும் எஸ். எஸ். எல். ஸி. பரீட்சையில் மாணவர்கள் சிறப்பாகத் தேறி மாகாணத்திலேயே முதல் மூன்று ஸ்தானங்களுக்குள்ளாக நிற்கிறது. 1958-ம் வருடம் ஜனவரி மாதம் இந்தப் பள்ளியின் 83-ம் ஆண்டு முடிவடைகிறது. அதை ''சதாபிஷேக''மாகக் கொண்டாடத் திட்டம் வகுத்திருக்கிறார்கள். பிப்ரவரி 8, 9, 10 தேதிகளில் சிறப்பாக விழாவை நடத்துவதற்கு மாயூரம் நகர மக்கள் ஒன்றுகூடி ஒருமுகமாக முடிவு செய்திருக்கிறார்கள்.

சிறிது சிறிதாகப் பலர் சேவையினாலும், உதவியினாலும், உயர்ந்த இப்பள்ளி இப்போது புகழின் சிகரத்தில் நிற்கிறது என்று கூறலாம். தஞ்சை மாவட்டத்தில் உள்ள மிகப் பழமையான பள்ளிகளில் இது ஒன்று. மாயூரம் நகராட்சி 1865-ல் ஆரம்பிக்கப்பட்டது. அப்போதிருந்தே இப்பள்ளி சிறப்பாக நடந்து வருகிறது. பள்ளிக்கூடத்தின் தலைவாயிலில் 1876 என்று பொறித்திருக்கிறது. பின்னர் கட்டப்பட்ட முன்வாசலில் 1892 என்று பொறிக்கப்பட்டிருக்கிறது. ஆதலால் 1876-ல் இருந்து 1892-க்குள் சுமார் பதினாறு ஆண்டுகளில் இந்தப் பள்ளி விஸ்தரிக்கப்பட்டுக் கட்டடங்களும் கட்டப்பட்டிருக்கின்றன என்று தெரிகிறது.

1894-ல் இருந்து 1903 வரை ஸ்ரீ டி. அழகப் பிள்ளை அவர்கள் நகரசபைத் தலைவராக இருந்து சிறந்த சேவை செய்தார். அவருடைய முயற்சி காரணமாக நகராட்சி உயர்நிலைப் பள்ளியில் பல முன்னேற்றங்கள் ஏற்பட்டன. அவருக்குப் பின் சிறந்த கல்விமானும், கவியுமான ஸ்ரீ வேதநாயகம் பிள்ளை அவர்கள் மாயூரத்தில் முன்சீப்பாக இருந்து, சர்க்காரால் நகரசபை உபதலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டுச் சிறப்பாக நகராட்சியை நடத்தியதோடு, பள்ளியின் முன்னேற்றத்திலும் அக்கறை காட்டினார். பிறகு ஸ்ரீ சுப்பிரமணிய அய்யர் 1910 வரை நகரசபைத் தலைவராக இருந்து பள்ளிக்கு வேண்டிய கட்டடங்களை ஏற்படுத்தினார். 1910ல் இருந்து 1917 வரையில் இப் பள்ளி தனது வளர்ச்சிக்கு மாத்தூர் ஸ்ரீ எம். எஸ். நடேச அய்யரது சேவையை அடையும் பாக்கியம் கிடைத்தது. அவர் நகரசபைத் தலைவராக இருந்த போது சர்க்காருடன் தீவிரக் கடிதப் போக்குவரத்து நடத்தி, பள்ளிக்கு 'ராஜாத் தோட்டம்' விளையாட்டு மைதானத்தையும், 'ஹார்டிஞ்ச' மாணவர் இல்லத்தையும் ஏற்படுத்தினார்; அப்போது பள்ளியின் தலைமை ஆசிரியராக இருந்தவர் ராவ்பகதூர் ஸ்ரீ கே. சேஷு அய்யர் அவர்கள். அவர் பள்ளியின் கட்டடங்களை விஸ்தரிக்கும் முயற்சியில் ஈடுபட்டார். தஞ்சை மாவட்டத்திலேயே சிறந்ததெனக் கூறப்பட்ட ஓர் ரசாயன சோதனைச் சாலையை நிறுவி அதற்குத் தேவையான கட்டடத்தையும் கட்டி, அதற்கு வேண்டிய உபகரணங்களையும் அவர் சேகரித்தார்.

ஸ்ரீ டேவிட் நாடார் அவர்கள் நகரசபைத் தலைவராக இருந்தபோது, கட்டாயக் கல்வித் திட்டம் கொண்டுவரப்பட்டு, குழந்தைகளைப் பள்ளிக்கு அனுப்ப ஏற்பாடு செய்யப்பட்டது; இதனால் நாளடைவில் உயர்நிலைப் பள்ளியில் மாணவர்களின் எண்ணிக்கை அதிகரித்தது. பிறகு வந்த நகரசபைத் தலைவர் ஒவ்வொரு

வரும் தங்களால் இயன்றவரை பள்ளியின் வளர்ச்சிக்குப் பாடுபட்டார்கள்.

" மேலும் பள்ளியின் வளர்ச்சிக்காகத் தலைமை ஆசிரியர்களும், உபாத்தியாயர்களும், சேவை செய்து உண்மையுடனும், ஊக்கத்துடனும் உழைத்தார்கள். ரைட் ஹானரபிள் வி.எஸ்.சீநிவாச சாஸ்திரிகள் இப்பள்ளியில் தான் முதன் முதலாக ரூபாய் ஐம்பது சம்பளத்தில் அமர்ந்தார் என்பதை நினைக்கும் போது தஞ்சை மாவட்ட மக்கள் பெருமை அடைகின்றார்கள். 1881-ம் ஆண்டிலிருந்து கல்வி இலாகாவின் அறிக்கைகளில் பள்ளியின் புகழைத் தவிர வேறெதுவும் காணப்படவில்லை. இந்தப் பெருமை பள்ளியின் வளர்ச்சிக்குப் பாடுபட்ட தலைமை ஆசிரியர்களையும், உபாத்தியாயர்களையும் சார்ந்தது.



ஸ்ரீ எஸ். நாராயணசாமி ஐயர்



ஸ்ரீ கே. சேஷ ஐயர்

பிரபல தலைமை ஆசிரியர்களான ஸ்ரீ எஸ். நாராயணசாமி அய்யர், ராவ்பகதூர் ஸ்ரீ கே. சேஷ அய்யர், ஸ்ரீ வி. ராகவ அய்யங்கார், ஸ்ரீ என். எஸ். கிருஷ்ணமூர்த்தி அய்யர் முதலியவர்களுடைய நிர்வாகத்தில் பள்ளியானது கல்வி கேள்விகளில் அபரிமிதமான முன்னேற்றம் அடைந்தது. தற்போது உள்ள தலைமை ஆசிரியர் ஸ்ரீ எஸ். சேஷகிரி அய்யர் அவர்கள் அவ்வழியிலேயே மிகச் சிறப்பாகப் பணியாற்றி வருகிறார்.

பள்ளியில் மட்டுமில்லாமல் நாட்டின் முன்னேற்றத்திலும், இப் பள்ளியில் படித்த மாணவர்கள் சிறப்பாக ஒளிவிட்டுப் பிரகாசித்திருக்கிறார்கள்; சேவை செய்து கொண்டு இருக்கிறார்கள். பிரபல வழக்கறிஞரும் சட்ட மேதையுமான காலஞ் சென்ற ஸ்ரீ டி. ஆர். வெங்கட்டராம சாஸ்திரிகள், தென்னாட்டின் கலாசாரத்தைத் தம் புஸ்தகங்களின் மூலம் வெளி நாடுகளில் பரவச் செய்த மேதை காவேரிப்பட்டினம் ஸ்ரீ எஸ். வெங்கட்டரமணி அய்யர் போன்ற அறிஞர்கள், பேராசிரியர் கல்கி அவர்கள், இன்றையதினம் புகழுடன் விளங்கும் பல வாலிப மணிகள் ஆகியவர்களை வளர்த்த தனிப் பெரும் பெருமை இந்தப் பள்ளிக்கு உண்டு.

தற்போது மலேயாவில், கோலாலம்பூரில் சிறந்த பாரிஸ்டராக விளங்கும் ஸ்ரீ ஆர். ரமணி அவர்களும், ஐ. சி. எஸ். வர்க்கத்தில் பணிபுரியும் ஸ்ரீ என். சுப்பிரமணியம் அவர்களும், ஓய்வெடுத்துக் கொண்டுள்ள சென்னை

ஸ்ரீ வி. ராகவ ஐயங்கார்



ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி ஐயர்



ஸ்ரீ எஸ். சேஷகிரி ஐயர்



அரசாங்கத்தின் முதல் இஞ்ஜினியர் எம். கே. ரங்கநாதம் அய்யர் அவர்களும், ஓய்வு பெற்றுள்ள தென் பிராந்திய ரயில்வே நிதி நிலைமை ஆலோசகரான ஸ்ரீ எம். ஆர். சாமிநாத அய்யர் அவர்களும் இப் பள்ளி கண்டெடுத்த ரத்தினங்கள் சில.

காவிரிப் பள்ளத்தாக்கின் பழக்கவழக்கத்தைப் பாரத நாடு முழுவதும் பரப்பிய சிறந்த அறிவாளிகளின் ஆரம்பப் பள்ளியாக விளங்கும், மாயூரம் நகராட்சி உயர்நிலைப் பள்ளி தன்னைப் பற்றித் தானே பெருமை கொள்வதில் அதிசயம் ஒன்றுமில்லை. மேலும் மேலும் இந்தப் பள்ளி முன்னுக்கு வந்து கொண்டிருக்கிறது என்பதையல்லாமல் நாம் வேறு என்ன நினைக்க முடியும்?

இப்பொழுது மாயூரம் நகரசபைத் தலைவராக இருக்கும் டாக்டர் வி. வரதாச்சாரியார் அவர்கள் பள்ளிக்காகப் பாடுபட்டுக் கட்டடங்களையும், புது படிப்புத் துறைகளையும், சேர்த்திருக்கிறார்கள். அரசாங்கத்துடன் கலந்து பண உதவியையும் கிடைக்கும்படி செய்துள்ளார்கள். புதுக் கட்டடங்கள் கட்டப்படுகின்றன. 'ஸ்ரீ ராகவையங்கார் திறந்த வெளி அரங்கு' கட்டப்பட்டுள்ளது. தண்ணீர் வசதி செய்யப்பட்டுள்ளது. மேலும் மேலும் மாணவர்களுக்கு வசதிகள் சேர்க்கப்பட்டு வருகின்றன. ஒவ்வொரு வகுப்புடனும் ஒலி பெருக்கி மூலம் தலைமை ஆசிரியர் நேரடியாகத் தொடர்பு கொள்ளும் நவீன விஞ்ஞான வசதிகள் அமைக்கப்பட்டிருக்கின்றன.

இவ்வளவு சீரும் சிறப்பும் வாய்ந்த மாயூரம் நகராட்சி உயர்நிலைப் பள்ளியின் சதாபிஷேக விழாவைக் கொண்டாட மாயூர நகரமக்களால் பல பிரமுகர்கள் அடங்கிய சதாபிஷேக விழா கமிட்டி நிறுவப்பட்டிருக்கிறது.

சதாபிஷேக விழாவை ஒட்டி ஏழை மாணவர்களுக்கு உபகாரச் சம்பளமும், வசதிகளும் செய்வதாக உத்தேசிக்கப்பட்டு அதற்கு மூலதனம் சேகரிக்கப்படுகிறது. இதற்காக சதாபிஷேக விழா உபகாரச் சம்பள நிதி என்று ஒரு நிதி திரட்டப்படுகிறது. இந்த நிதிக்கு நாட்டின் பல பாகங்களிலும் உள்ள பழைய மாணவர்கள் பண உதவி செய்யுமாறு கோரப்படுகிறார்கள். இவ் வேண்டுகோளை ஏற்று, மாயூரம் உயர்நிலைப் பள்ளி பழைய மாணவர்கள் எங்கிருப்பினும் தங்களால் இயன்ற பொருள் உதவியைச் செய்வார்கள் என்று நம்புகிறோம். அதுவே தங்கள் பள்ளிக்கு அவர்கள் செய்யும் சிறந்த சேவையாகும்.

சதாபிஷேக உபகாரச் சம்பள நிதிக்குப் பொருள் உதவி செய்ய விரும்புவோர் ஸ்ரீ வி. சாமி அய்யங்கார், பொக்கிஷதார், மாயூரம் நகராட்சி உயர்நிலைப் பள்ளி சதாபிஷேக கமிட்டி, ஸ்ரீ ராகவம், பட்டமங்கலத் தெரு, மாயூரம்; என்ற விலாசத்துக்கு அனுப்பி வைக்கலாம்.

'ஆயிரமானாலும் மாயூரம் ஆகாது' என்ற பழமொழியை இந்த சதாபிஷேக விழாக் கொண்டாட்டத்திலும் மாயூரம் மக்கள் காண்பிப்பார்கள் என்பதில் சந்தேகமில்லை.



பழத்திலே கலை பொதிந்த பான்மையை எழுத்திலே வடித்துக் காட்டுவது என்பது எளிதான காரியமா, என்ன?

"பண்ணில் ஓசை
பழத்தினில் இன்சுவை"

என்றார் நாவுக்கரசர்.

"பண்ணிடைத் தமிழ்ஒப்பாய்
பழத்தினில் சுவைஒப்பாய்"

என்று பாடி மகிழ்ந்தார் சுந்தரர்.

'பழத்தினில் சுவை' சேர்ந்த பொருத்தம் இயற்கை வளத்தின் இணையற்ற அற்புதம் என்பதைத் தவிர வேறு என்ன சொல்ல முடியும்? ஒவ்வொரு கனி வகையிலும் வெவ்வேறு சுவை நயம் மிளிர்வதைக் கண்டு நுகர்ந்து வருகிறோம்.

கனி வகைகளின் செழிப்பு மண் வளத்தைப் பொறுத்தது. மலேயாவின் மண்வளம் காரணமாக அங்கு பழ வகைகளும் செழிப்புற்று விளங்குகின்றன.

அன்னாசி, டொரியான், மங்குஸ்தான், ரம்புத்தான் முதலியன மலேயாவின் விசேஷமான பழவகைகள். அன்னாசிப் பழ உற்பத்தி மலேயாவிலேயே மூன்றாவது பெருந் தொழிலாகக் கருதப்படுகிறது. மற்ற இரண்டு தொழில்களான ரப்பரையும், ஈயத்தையும் பற்றிப் பின்னர் அறிவோம்.

மலேயாவில் கிடைக்கும் அன்னாசிப் பழத்தின் சுவையே தனி. துண்டுகளாகவும், கதுப்புகளாகவும், சதுரச் சுளைகளாகவும், வட்ட வெட்டுக்களாகவும் அன்னாசிப் பழத்தை வீதிகளிலே விற்பனை செய்யும் அழகைக் கண்டு ரசிக்க வேண்டும். அவற்றை வாங்கி உண்டு ரசிக்கவும் வேண்டும்.

தங்க ராணி, இன்பப் பழம் முதலிய சிறப்பு மொழிகளால் மலைநாட்டு மக்கள் அன்னாசிப் பழத்தைப் புகழ்கின்றனர். அன்னாசிச் சுளையின் தங்க நிறம் கவர்ச்சி வாய்ந்தது.

ஜோகூர் ராஜ்யப் புல்வெளி நிலங்களிலே அன்னாசிப் பழத் தோட்டங்கள் வளமாகக் காணப்படுகின்றன. சுமார் இருபதினாயிரம் ஏக்கரா நிலங்களில் அன்னாசி பயிராகிறது. காடுகளை அழித்து அன்னாசித் தோட்டங்களாக்கும் வேலை தொடர்ந்து நடைபெற்று வருகிறது.

அன்னாசிச் செடி பயிராகிச் சுமார் ஒரு வருடத்துக்குப் பின் பூப்பூக்கிறது. பூத்து ஒரு மாத காலத்தில் அன்னாசிக் காய் தலை நீட்டுகிறது. காய்த்து மூன்று மாதங்களில் கனியாகிறது. காய் பருத்துத் திரண்டுவருவதற்காகச் சுற்றிலும் உள்ள இலைகளையெல்லாம் நறுக்கி விடுவார்கள். காயின் தரத்தை ரசாயன நிபுணர்கள் சோதனை செய்வார்கள்.

காய்கள் பழுத்து முதிர்ந்து பக்குவப்பட்டவுடன் அவற்றை அறுவடை செய்யும் வேலை வெகு வேகமாக நடைபெறுகிறது. பழம் பழுத்த இருபத்து நான்கு மணி நேரத்துக்குள் டப்பிகளிலே அடைத்துவிட வேண்டும். பழத்தை அடைப்பதில் நொடிப் பொழுது தாமதித்தாலும் பழம் வீணாகி விடும்.

பழங்களைத் தொழிற்சாலைகளுக்குக் கொண்டு சென்றதும் அவற்றைத் தரவாரியாகப் பிரிக்கின்றனர். தட்டை, வட்டம், சதுரம் போன்ற பல வடிவங்களில் பழங்கள்

# இனிய கனிவளம்

டி.கே.சண்முகம்—
புத்தனேரி சுப்பிரமணியம்



மலாயாவில் செழித்து வளரும் அன்னாசிப் பழம்.

வெட்டப்படுகின்றன. பின்னர் டப்பிகளில் பக்குவமாக அடைக்கப்படுகின்றன. டப்பிகளில் அந்தந்தப் பழங்களின் அடையாளச் சின்னங்களை ஒட்டி வெளி நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யும் வேலை துரிதமாக நடைபெறுகிறது. அன்னாசிப் பழரச பானமும் தொழிற்சாலைகளில் தயாரிக்கப்படுகிறது.

யுத்தத்துக்கு முன்பு ஆண்டு ஒன்றுக்கு 25 லட்சம் பெட்டிகள் மேலை நாடுகளுக்கு ஏற்றுமதியாயிற்று. யுத்த காலத்தில் அன்னாசிப் பழத் தொழில் நசித்துப் போயிருந்தது. மீண்டும் இப்பொழுது புத்துயிர் பெற்று, ஆண்டு ஒன்றுக்கு இருபது லட்சம் பெட்டிகள் ஏற்றுமதியாகும் அளவுக்கு வளர்ந்துள்ளது.

இப்போது அன்னாசி ஓராண்டுக்கு இரண்டு போகங்கள் விளைகிறது. இடையில் நான்கு மாத ஓய்வு இருக்கிறது. பழம் அடைக்கும் தொழிலாளர்களுக்கு வருடம் முழுவதும் வேலை கொடுப்பதற்காக நான்கு மாத ஓய்வுக் காலத்தையும் குறைத்துப் பழ உற்பத்தியைப் பெருக்குவதற்கு முயற்சிகள் செய்யப்படுகின்றன. ஊட்ட மருந்து செலுத்திப் பழம் பழுக்கும் காலத்தை நீடிக்கச் செய்யும் வழிகள் ஆலோசிக்கப்படுகின்றன.

அன்னாசிப்பழத் தொழிற்சாலைகளில் பழங்களின் தரத்தைச் சோதித்தல், சுவையை ஆராய்தல் முதலிய பொறுப்புக்களைக் கவனிக்கச் சிறந்த நிபுணர்கள் உள்ளனர்.

## டொரியான் பழம்

''அப்பன் சொறியன்
ஆத்தாள் சடைச்சி,
அவர்கள் பிள்ளை
சர்க்கரைக் கட்டி!''

இந்த விடுகதைகளுக்கு விடை யென்னவென்று நமது நாட்டுக் குழந்தைகளைக் கேட்டுப் பாருங்கள்! ''பலாப்பழம்'' என்ற பதில் 'பளிச்' சென்று கிடைக்கும்.

ஆனால் மலேயாவில் உள்ள குழந்தைகளிடம் இந்த விடுகதைக்கு விடை கேட்டால் பதில் வேறுவிதமாகத்தான் இருக்கும்.

''டொரியான் பழம்'' என்றுதான் விடை சொல்வார்கள் அந்தக் குழந்தைகள்.

ஆமாம்; அசல் பலாப் பழம் போலவே—ஆனால் வடிவத்தில் சற்றுச் சிறியதாக—உள்ள பழம் டொரியான். டொரியான் பழத்தைப் போர்த்திக் கொண்டிருக்கும் முட்கள் பலாப்பழத்தை விடத் தடிப்பாகவும் கூர்மையாகவும் இருக்கும். நன்கு பழுத்த டொரியான் பழம் பசுமை கலந்த மஞ்சள் நிறமாக விளங்கும். டொரியான் பழுத்தவுடன் மரத்திலிருந்து தானாகவே கீழே விழும்.

டொரியான் பழத்துக்கே உரிய ஓர் அரிய குணாதிசயம் அதன் துர்நாற்றம்! சகிக்க முடியாத துர்நாற்றத்தின் எல்லை எதுவென்று காட்டுவது டொரியான் என்று கூடச் சொல்லலாம்.

நாங்கள் கோலாலம்பூரில் தங்கியிருந்த போதுதான் டொரியான் பழத்தின் பருவகாலம் தொடங்கியது. முதன் முதலாக ஒரு நாள் சிறந்த கலையன்பரான திரு வி. பி. லிங்கத் தேவர் நாங்கள் தங்கியிருந்த வீட்டுக்கு இரண்டு டொரியான் பழங்களைக் கொண்டு வந்து கொடுத்தார்.

மாடியில் ஒரு மூலையில் அந்தப் பழங்கள் வைக்கப்பட்டிருந்தன. அதன் நாற்றம் வீடு முழுதும் பரவி விட்டது.

'' பழங்களை அப்புறப்படுத்துகிறீர்களா? அல்லது நாங்கள் அறையை விட்டு வெளியே போகட்டுமா?'' என்று நடிக நடிகையர் அனைவரும் ஒருமுகமாக எதிர்ப்புக் குரல் எழுப்பினர். இந்த எதிர்ப்புக் குரலில் எங்கள் இருவருடைய குரலும் இழைந்திருந்தது என்பதையும் குறிப்பிட வேண்டும்.

ஆயினும் திரு முத்தண்ணாச்சி அவர்கள் எதிர்ப்புக் குரல் கொடுப்போருக்குப் பின்வருமாறு சமாதானம் கூறினார்:—

''வெளி நாற்றத்தைக் கொண்டு பழத்தை வெறுக்காதீர்கள்! நன்றாக எண்ணிப் பாருங்கள். டொரியான் மரம் ஆபாசமான இடத்தில் வளரவில்லை. சுத்தமான சாலை ஓரங்களிலேதான் அந்த மரங்கள் காணப்படுகின்றன. அவை மிக உயரமாகவும் வளர்ந்துள்ளன. உயரமான மரத்திலிருந்து தானாகப் பழுத்து விழும் பழத்திலே ஏதாவது ஆபாசம் இருக்க முடியுமா? எனவே, துர்நாற்றத்தைக் கண்டு மருளாதீர்கள்! பழத்தை உடைத்து உள்ளே இருக்கும் சுளைகளைத் தின்று பாருங்கள். என்ன இருந்தாலும் டொரியான் ஒரு பழம் என்பதை மட்டும் மறவாமல் அதன் சுவையை நுகருங்கள்!''

இவ்வாறு திரு முத்தண்ணாச்சி அவர்கள் கூறிய சமாதானம் சிவராம உள்ளத்தைக் கவர்ந்தது. அவர் பழத்தோடு போராடி, முட்போர்வையை உடைத்து உள் புகுந்து சுளையை எடுத்துச் சுவை பார்த்தார்.

''தெவிட்டாத ஒரு சுவை டொரியான்பழத்திலே இருக்கத்தான் செய்கிறது!'' என்ற உண்மையை அவர் கண்டறிந்தார்.

பின்னர், திரு சிவதாணுவும் டொரியான் சுவையில் மயங்கினர். இவர்கள் இருவரையும் போல் டொரியானை ரசித்து ருசித்து மகிழ்ந்தவர்கள் குழுவினரில் வேறு யாருமிலர் என்று சொல்லலாம்.

நாள்தோறும் டொரியான் பழங்களை ஏராளமாகக் கொண்டு வந்து வழங்க முற்பட்டார் நண்பர் திரு வி. பி. லிங்கத் தேவர். இவருடைய வள்ளன்மை காரணமாகத் திரு சிவதாணு வெளியே போய் விட்டுத் திரும்பும்




கலிங்கத்தின் தலைநகரான தந்தபுரம் அன்று திருவிழாக் கோலம் பூண்டிருந்தது. வண்ணமலர்ப் பந்தல்களும் விதம் விதமான தோரணங்களும் வீட்டுக்கு வீடு அலங்காரமாகக் காட்சியளித்தன. பழந்தமிழ்ப் பெண்மணிகளின் கலா மேதையைப் பிரதிபலிக்கும் சித்திரக் கோலங்களைத்தான் எத்தனை வகை? ராஜபவனிக்கு ரத்தினக் கம்பளம் விரித்தாற் போல் இருந்தது. ஒவ்வொரு இல்லங்களின் முன்பு தீட்டியிருந்த வர்ணக் கோலங்கள். சாரி சாரியாக, ஆயிரம் ஆயிரமாக ஆண்களும் பெண்களும் கிழவர்களும் குழந்தைகளும் வழிமேல் விழி வைத்து வீதியோரமாகக் காத்திருந்தனர்.

இடையிடையே குதிரைப் படையினரும் உருவிய வாளை உயர்த்திப் பிடித்துக்கொண்டு குறுக்கும் நெடுக்குமாகச் சென்று கொண்டிருந்தார்கள். ஆனால் அவர்களுக்கு மகாஜனங்கள் வேலை வைக்கவில்லை. ஆவலுடன் காத்திருந்தவர்கள் அமரிக்கையுடனும் இருந்தால் ராணுவத்துக்கு என்ன வேலை?

மகதப் பேரரசின் தலைநகருக்குச் சென்றிருந்த கலிங்க மன்னன் குஹசிவன் அன்று வெற்றி வாகை சூடித் தலைநகருக்குத் திரும்பி வந்து கொண்டிருந்தான்.

ஒரு மாவீரனுக்குரிய வரவேற்பைத் தங்கள் அன்புக்கும் பக்திக்கும் பாத்திரமான மன்னனுக்கு அளிக்கவே தந்தபுர மக்கள் அத்தனை உற்சாகத்தோடு இருந்தார்கள்.

குஹசிவன் யாரை வென்றான்? வடக்கே இமயத்திலிருந்து தெற்கே காஞ்சி வரையில் தோள் வலிமையால் ஏக சக்ராதிபத்யம் நடத்தி வந்த சமுத்திரகுப்தனையா சின்னஞ் சிறு குறுநில மன்னனான குஹசிவன் முறியடித்து வாகை சூடினான்? ஆம். இது சுலபமாக நம்ப முடியாத கதையைப் போல் இருந்த போதிலும் உண்மையை யார் எப்படி மறைக்க முடியும்? குஹசிவன் பெற்ற வெற்றி பாரதத்தின் பழஞ் சரித்திரத்திலே ஒரு அற்புதமான சாதனை.

கி. பி. இரண்டாம் நூற்றாண்டில் காரவேலன் என்ற கலிங்க நாட்டு ஒரு மாவீரன் மகதத்தைக் கத்தி முனையில் அடிபணியச் செய்து கட்டியாண்டான். குஹசிவனோ படைகளைத் திரட்டிக் கொண்டு பாடலிபுரத்துக்குப் போகவில்லை. படைக்கலன்களுக்குப் பதிலாக ஒரு பல்லை. புத்த பகவானின் ஒரு புனிதமான இடது கடவாய்ப் பல்லை மகத நாட்டு மாமன்னனிடம் அவன் எடுத்துச் சென்றான். அன்பும் அறமும் பக்கபலமாக அவனுக்குத் துணை சென்று சரித்திரம் அறிந்திராத ஒரு மகோன்னதமான வெற்றியை அவனுக்கு ஈட்டிக் கொடுத்தன. பல்லாயிரக்கணக்கான உயிர்களைப் போர்க்களத்தில் மாய்த்து ரத்தமும் கண்ணீரும் கலந்த வெற்றியைக் காட்டிலும் அன்பு, அறம் ஆகியவற்றின் உறுதுணையுடன் குஹசிவன் அடைந்த வெற்றி பன்மடங்கு பெருமை வாய்ந்தது.

சுமார் 2500 ஆண்டுகளுக்கு முன்னால் மகத நாட்டில் அஜாதசத்ரு ஆட்சி புரிந்த காலத்தில் குசிநகர் என்னுமிடத்தில் புத்தர் பரிநிர்வாணமடைந்தார்கள். அவரது அஸ்தியையும் எலும்புத் துண்டுகளையும் வைத்து அவரது சீடர்கள் வடபாரதத்திலே பிரும்மாண்டமான தாதுகோபுரங்களைக் கட்டினார்கள். புத்தரின் இடது கடவாய்ப்பல் கலிங்கத்துக்கு வந்து சேர்ந்தது. அப்பொழுது கலிங்கத்தில் அரசோச்சிய பிரம்மதத்தன் பௌத்த மதத்தைத் தழுவிப் புத்தரின் புனித தந்தத்துக்குக் கோயில் எடுத்தான். அன்று முதல் கலிங்கத் தலைநகரின் பெயரும் தந்தபுரம் என்று மாறியது. தென்புரத்தில் பௌத்தம் முதன் முதலாக இப்படிக் கால் ஊன்றியது.

அடுத்த சுமார் ஓராயிரம் ஆண்டுகள் வரை கலிங்கம் பௌத்தர்களின் கோட்டையாகவும் கேந்திர ஸ்தானமாகவும் விளங்கியது.

இதற்கிடையில் மகாவீரர் போதித்த ஜைன சமயமும் தெற்கு நோக்கிப் பரவ ஆரம்பிக்கவே பௌத்தத்துக்கும் ஜைனத்துக்கும் கடுமையான பலப் பரிசோதனை ஏற்பட வேண்டியதாயிற்று. இவ்விரண்டுக்கும் மத்தியில் அகப்பட்டுக் கொண்டு தவித்தது இந்து சமயம். இந்த நிலைமை நீடிக்கவில்லை. மகதப் பேரரசு குப்தர்களின் ஆளுகைக்கு வந்ததுதான் தாமதம், பழம்பெரும் இந்து சமயத்துக்குப் புத்துயிர் ஏற்பட்டது. இந்து சமயம் ஒருபுறமும் ஜைன சமயம் மற்றொருபுறமுமாக நசுக்க, இந்த இருமுனைத் தாக்குதலைச் சமாளிக்க முடியாமல் இந்தியாவெங்கிலும் பௌத்தத்தின் செல்வாக்கு க்ஷீணிக்கத் தொடங்கியது. இம்மாதிரியான சூழ்நிலையில்தான் கலிங்கத்தில் குஹசிவன் என்ற

குறுநில மன்னன் மகதத்துக்குக் கப்பம் கட்டும் சிற்றரசனாயிருந்தான். அங்கு மட்டும் பௌத்த மதம் பழைய செல்வாக்குடன் இருந்து வந்தது.

நாட்டின் இதர பகுதிகளிலிருந்து பௌத்தத்தை வெளியேற்றியவர்களுக்குக் கலிங்கத்தில் மாத்திரம் பௌத்த தர்மம் தழைப்பதைக் காண மனம் சகிக்கவில்லை. இதற்கு நடந்த சதிகளும் சூழ்ச்சிகளும் பல. அவை பலிக்காமற் போகவே புத்தரின் புனித தந்தத்தையே கடத்த முயற்சிகள் நடந்தன. அதன் பயனாகப் பல ஆயிரம் இந்துக்களும் ஜைனர்களும் தேசப்பிரஷ்டம் செய்யப்பட்டார்கள். அதன் பின்னரும் அவர்கள் சும்மாவிருக்கவில்லை. அவர்கள் பாடலிபுரத்துக்குப் படையெடுத்துப் போய் மகத மாமன்னன் சமுத்திரகுப்தனிடம் ஒன்றைப் பத்தாகத் திரித்துச் சொல்லிக் குஹசிவன் மீது குரோதத்தை வளர்த்தார்கள். இந்துக்கள் இம்சிக்கப்படுகிறார்கள் என்பதைக் கேட்டால் சமுத்திரகுப்தன் பொறுப்பானா? சின்னஞ்சிறு சுண்டைக்காய் ராஜ்யம் இந்துக்களைத் துன்புறுத்துவதன் மூலம் அந்த மதத்தைப் போற்றி வளர்க்கும் மகத சாம்ராஜ்யத்தையே அவமதித்து வலுச் சண்டைக்கு இழுப்பதாகக் கூறினான். "போ, கலிங்கத்தை இருந்த இடம் தெரியாமல் நிர்மூலம் செய்துவிட்டு அந்த வெற்றியின் சின்னமாகப் புனித தந்தத்தையும் பாடலிபுரத்துக்குக் கொண்டுவா" என்று உத்தரவிட்டுச் சித்ராயணன் என்ற ஒரு குறுநில மன்னனைப் பெரும் படையுடன் அனுப்பினான் குப்தன்.

சித்ராயணன் ஒரு பிரும்மாண்டமான சேனையுடன் வரும் தகவல் தெரிந்ததும் கலிங்க நாட்டு மக்கள் பதறிப் போனார்கள். என்ன என்ன விபரீதங்கள் நடக்கப் போகின்றனவோ என்று அவர்கள் கதிகலங்கினார்கள். குஹசிவனோ சிறிதும் கலவரமடையவில்லை. தந்தபுரத்தில் கோவில் கொண்டிருக்கும் புனித தந்தம் நாட்டையும் நாட்டு மக்களையும் காக்கும் என்ற திடநம்பிக்கை அவனிடம் குடிகொண்டிருந்தது. ஆக்ரமிக்க வந்த சித்ராயணனை வாள் முனையில் சந்திக்காமல் ராஜாங்க விருதுகளுடன் எல்லைக்குச் சென்று ஆடம்பரமாக அவனை அழைத்துச் சென்றான். பெரும் பொருளைச் செலவிட்டு ஒரு பெரிய விருந்து வைத்து எதிரியைக் கௌரவித்தான். அழுகுரல் கேட்க வேண்டியிருந்த இடத்தில் ஆடலும் பாடலும் கோலாகலமான கேளிக்கைகளும் நிறைந்திருந்தன. சித்ராயணனுக்கு ஒன்றுமே புரியவில்லை. குஹசிவன் காட்டிய அன்பு அவனைத் திக்குமுக்காடித் திணறச் செய்து விட்டது.

"குஹசிவா! இன்று உன் நண்பனாக விருந்து சாப்பிட நான் வரவில்லை என்பது



உனக்குத் தெரிந்திருக்க வேண்டுமே?" என்று கேட்டான் சித்ராயணன்.

"நீ வந்த நோக்கம் எதுவாயினும் என் எல்லைக்குள் வரும் பழைய நண்பர்களெல்லாம் எனது விருந்தாளிகள்! விருந்தில் குறை ஒன்றும் இல்லையே சித்ராயணா? மகதப் பேர் அரசனைப் போல் பிற நாட்டுச் செல்வம் வலுவில் வந்து குவியும் குபேர பூமியல்ல கலிங்கம். ஏழைக்கு உரியது என்று உருண்டையாக இருந்தாலும் அடுத்தவனுடன் அதைப் பகிர்ந்துகொள்ள எனது மக்கள் எப்பொழுதும் தயங்குகிறவர்கள் இல்லை" என்றான் குஹசிவன்.

சித்ராயணன் சற்று மௌனம் சாதித்தான். பிறகு "உன்னைத் தண்டிக்க மன்னர் அனுப்பி வந்திருக்கிறேன்" என்றான்.

"குற்றம் இழைத்தவர்கள் கட்டாயம் தண்டிக்கப்பட வேண்டியவர்கள், சித்ராயணா! தர்மத்தையும் நீதியையும் நிலைநிறுத்துவது தானே என்னையும் உன்னையும் மாமன்னரையும் போன்ற முடிதரித்தவர்களின் முதல் கடமை" என்றான் குஹசிவன்.



குஹசிவன் என்ன சொல்லுகிறான் என்பதையே சித்ராயணனால் புரிந்துகொள்ள முடியவில்லை. கலிங்க நாட்டிலிருந்து பாடலிபுரத்துக்கு வந்த இந்துக்கள் புகார் செய்ததைப்பற்றிச் சித்ராயணன் பிரஸ்தாபித்தான்.

"மாமன்னர் நினைப்பதைப் போல் இந்துக்களை நான் இம்சித்திருந்தால் உண்மையில் தண்டிக்கப்பட வேண்டியவன் தான் சித்ராயணா! ஆனால் இங்கு நடந்தது வேறு. மாமன்னர் செவிகளுக்கு எட்டியது முற்றிலும் வேறு" என்று ஆரம்பித்து, பௌத்தர்களை அழிக்கவும் புனித தந்தத்தை அழிக்கவும் சதி நடந்ததையும் சதியில் சம்பந்தப்பட்டவர்களைத் தேசபிரஷ்டம் செய்ததையும் குஹசிவன் விவரமாக எடுத்துச் சொன்னான்.

"பிரஜைகளில் ஒவ்வொருவருக்கும் அவரவருக்கு விருப்பமான சமய சித்தாந்தங்களைக் கடைப்பிடித்து ஒழுக உரிமை கிடையாதா? இந்துக்களும் பௌத்தர்களும் இந்நாட்டில் ஒற்றுமையாக வாழ வேண்டும் என்று கூறுவதும் அதற்குக் குந்தகம் விளைவிப்பவர்களைப் பிரஷ்டம் செய்வதும் குற்றமென்றால் நான் செய்தது மன்னிக்க முடியாத குற்றம் தான், சித்ராயணா!" என்றான் குஹசிவன்.

"உண்மை என்னவென்பது சக்கரவர்த்திக்குத் தெரியாது. குஹசிவா! மகதப் பேரரசின் ஆணைக்குக் கட்டுப்பட்டவர்கள் நாம். என் பேச்சைக் கேள். புத்தரின் புனித தந்தத்தை எடுத்துக் கொண்டு என்னுடன் பாடலிபுரத்துக்கு வா. தர்மமும் நேர்மையும் தவறாத மாமன்னரிடம் நடந்ததைச் சொன்னால் நிச்சயம் உனக்கு நியாயம் கிடைக்கும். என் கடமை நிறைவேறுவதோடு உன் மீதுள்ள குரோதமும் நீங்கும்!" என்று யோசனை கூறினான் சித்ராயணன்.

குஹசிவனுக்கும் இது நல்ல யோசனையாகவே பட்டது. அதோடு கடமை உணர்ச்சியும் தயங்காமல் 'பாடலிபுரத்துக்குப் போ' என்று அவனைத் தூண்டிப் பயணம் கட்டி வைத்தது. புத்தரின் புனித தந்தத்தை எடுத்துக் கொண்டு சித்ராயணனுடன் கைதியாக அல்ல, சமாதான தூதனாகக் குஹசிவன் மகத நாட்டுக்குச் சென்றான். அவன் எண்ணியதைப் போலவே அறமும் அன்பும் வெற்றி பெற்றன. பௌத்த தர்மத்திடம் கொண்ட துவேஷத்தினால் அமைதியான கலிங்க நாட்டிலே குழப்பத்தை விளைவிக்க முயன்றவர்களின் சதி அம்பலமாயிற்று. சர்வ மத சமரசத்தில் நாட்டம் கொண்ட சமுத்திரகுப்தன் குஹசிவனுக்கு நியாயம் வழங்கினான். அவனுடைய அன்பையும் ஆசியையும் பெற்றுப் புனித தந்தத்துடன் வெற்றி வீரனாகக் குஹசிவன் கலிங்கத்துக்குத் திரும்பினான். ஒரு சொட்டு ரத்தமும் சிந்தாமல் புனித தந்தத்தோடு பெருமிதத்துடன் வரும் காவலனைக் குதூகலத்துடன் வரவேற்று உபசரிக்கவே தந்தபுர வாசிகள் நகரை அலங்கரித்து வீதிகள்தோறும் ஆயிரம் ஆயிரமாகத் திரண்டு நின்று வழிமேல் விழி வைத்துக் காத்திருந்தார்கள்.

புனித தந்தம் அதற்குரிய திருக்கோயிலுக்குத் திரும்பி வருகிறதென்ற நற்செய்தி பௌத்த தர்மத்தில் திளைத்த அந்த மக்களுக்கு அளவிலா ஆனந்தத்தைக் கொடுத்திருந்தது. ஆனால் விதியின் விளையாட்டை அறிந்தவர் யார்? தங்களுடைய அன்றைய சந்தோஷம் அற்ப சந்தோஷமாக முடியப் போகிறது என்பதை அப்பொழுது அவர்கள் அறிந்திருக்கவில்லை. புத்தரின் புனித தந்தத்துக்கு உரிய இடம் இலங்கையாயிருக்கும் பொழுது கலிங்க நாட்டில் அந்தப் புனிதச் சின்னம் எப்படி நீடித்திருப்பது சாத்தியம்?

சில மாதங்களுக்குப் பிறகு ஒருநாள் கலிங்க மன்னன் குஹசிவன் கவலை தோய்ந்த முகத்துடன் அவைக்களத்திலிருந்து அந்தப்புரத்துக்கு வந்து கொண்டிருந்தான். என்றும் இல்லாத சோர்வு அவனிடம் அன்று குடிகொண்டிருந்தது. சரியாக நடப்பதற்குக்கூட அவனிடம் சக்தியில்லை போலிருந்தது. நடை

யில் வழக்கமான மிடுக்கில்லை; நேராக இளவரசி ஹேமமாலாவின் அந்தப்புரத்துக்குக் குஹசிவன் தட்டுத் தடுமாறிக் கொண்டு போய்ச் சேர்ந்தான்.

ஹேமமாலா குஹசிவனின் ஒரே பெண்; ஆண் வாரிசு இல்லாதபடியினால் வருங்கால ராணியான ஹேமாவுக்கு உஜ்ஜயினி இளவரசன் தந்தபுத்திரனை மணம் முடித்து வைத்து அவனுக்குப் பட்டத்து இளவரசு அந்தஸ்தையும் குஹசிவன் அளித்திருந்தான். ஹேமாவும் தந்தபுத்திரனும் அரியணையில் அமர்ந்து அரசு செலுத்துவதைக் கண்ட பிறகுதான் கண்ணை மூடவேண்டுமென்பது அவன் ஆசை. ஆட்சிப் பொறுப்பை அவர்களிடம் ஒப்படைத்து, பௌத்த சங்கத்துக்குத் தனது வாழ்நாளில் பாக்கிப் பகுதியை அர்ப்பணிக்க வேண்டுமென்று குஹசிவன் திட்டமிட்டுக் கொண்டிருக்கையில், அவனுடைய மனக்கோட்டையைத் தவிடுபொடியாக்கும் ஒரு பயங்கரமான செய்தி அவன் காதுக்கு எட்டியது. அச்செய்தி அவனை நடைப்பிணம் போல் ஆக்கிவிட்டது.

ஆனந்தமாகச் சொக்கட்டான் ஆடிக் கொண்டிருந்த ஹேமாவும் தந்தபுத்திரனும் அந்தப்புரக் கதவு திறக்கும் சத்தத்தைக் கேட்டதும் பளிச்சென்று திரும்பிப் பார்த்தார்கள். அரசர்கூட அறிவிப்பில்லாமல் அங்கு வருவதில்லை யாதலால் துணிவுடன் கதவைத் திறந்துகொண்டு திடும் பிரவேசமாக யார் நுழைய முடியுமென்பதை அவர்களால் ஊகிக்க முடியவில்லை. சோகமே உருவமாகக் குஹசிவன் தள்ளாடிக் கொண்டு வருவதைப் பார்த்ததும் இளவரச தம்பதிகள் திடுக்கிட்டுப் போய் விட்டார்கள்.

ஹேமா கையிலிருந்த காய்களை வீசி எறிந்து விட்டுத் தகப்பனிடம் ஓட்டமாக ஓடினாள். "உடம்புக்கு என்ன அப்பா!" என்று கவலையுடன் விசாரித்தாள்.

"என் உடம்புக்கு ஒன்றுமில்லை ஹேமா! பதற்றப்படாதே!" என்று சொல்லியவனாய் குஹசிவன் ஒரு ஆசனத்தில் அமர்ந்தான்.

"இப்படி என் அருகில் வந்து உட்காருங்கள், குழந்தைகளே!" என்றான். பிறகு அவன் கிணற்றுக்குள்ளேயிருந்து பேசுவதைப் போல் இருந்தது அவனுடைய தொனி. ஹேமாவும் தந்த புத்திரனும் மன்னனின் இருபுறமும் உட்கார்ந்து கொண்டார்கள்.

குஹசிவன் ஒரு சோகப் புன்னகையுடன், "நான் உங்களை விட்டுப் பிரிய வேண்டிய காலம் நெருங்கி விட்டது. நம்முடைய இந்தச் சந்திப்பே அனேகமாகக் கடைசிச் சந்திப்பாகவும் இருக்கலாம். உங்களை அரியாசனத்தில் அமர்த்திக் கண்குளிரப் பார்க்க வேண்டுமென்று மனக் கோட்டை கட்டிக் கொண்டிருந்தேன். ஆனால் புத்தர் பகவானின் சித்தம் வேறுவிதமாக இருக்கிறது" என்றான். அவன் இப்படிச் சொல்லிக் கொண்டிருக்கையில் அரண்மனைக்கு வெளியே போர்முரசுகள் திடீரென்று ஒலிக்க ஆரம்பித்தன.

"யுத்தம் நடக்கப் போகிறதா? யாருடன் யுத்தம்? விவரமாகச் சொல்லுங்கள் அப்பா!" என்று பரபரப்புடன் கேட்டாள் ஹேமா.

"ஆமாம், மகளே! இன்னும் சிறிது நேரத்தில் போர்முனைக்கு நான் புறப்பட்டுப் போகிறேன். அங்கிருந்து திரும்பி வருவேன் என்ற நம்பிக்கை எனக்கு இல்லை. ஆகையால்தான் கடைசி முறையாக உங்களைப் பார்த்து விட்டுப் போக வந்தேன்!" என்று குஹசிவன் சொல்லுகையில் தந்தபுத்திரன் சீறிக் கொண்டு எழுந்தான்.

"மாமா! நீங்களா இப்படிப் பேசுகிறீர்கள்? யுத்த காலத்தில் வைர நெஞ்சத்துடன் இருக்க வேண்டிய நீங்களே இப்படி மனம் இடிந்து போனால் நமது படைகளிடம் உறுதியையும் கட்டுப்பாட்டையும் எப்படிக் காண்பது? நான் இருக்கும்பொழுது போர்முனைக்கு நீங்கள் ஏன் போக வேண்டும்? ஆசி கூறி என்னை அனுப்பி வையுங்கள். வெற்றியுடன் திரும்பி வந்து எதிரிகளின் தலைகளை உங்கள் காலடியில் போடுகிறேன், மாமா!" என்று முழங்கினான் தந்தபுத்திரன்.

குஹசிவன் மீண்டும் ஒரு சோகப் புன்னகை செய்தான். "நீ போர்முனைக்குச் செல்லக்



கூடாது. இது புத்த பகவான் மீது ஆணை. போர்க்களத்தில் பலி கொடுப்பதற்காக உன்னை என் மகளுக்கு மணம் முடித்து வைக்கவில்லை. வாளேந்திப் போர் புரிவதைக் காட்டிலும் நீ செய்ய வேண்டிய அதி முக்கியமான கடமை ஒன்றிருக்கிறது. இந்த நெருக்கடியான தருணத்தில் பௌத்த சங்கம் உன்னிடம் ஒரு புனிதமான சேவையை எதிர்பார்க்கிறது. கலிங்கம் படை பலத்தில் பெருமை கொள்ள முடியாமல் இருக்கலாம். ஆனால் ஆத்மீக பலத்தில் நமக்கு மிஞ்சியவர்கள் யாருமில்லை யென்பதை எண்ணி எண்ணி நாம் பெருமைப்படலாம். இன்று நீ செய்யப் போகும் பவித்திரமான சேவை உன் பெயரையும் என் பெயரையும் இப் புண்ணிய பூமியின் பெயரையும் ஆயிரமாயிரம் ஆண்டுகளுக்கு மக்கள் மனத்தில் சிரஞ்சீவியாக வைத்திருக்கும் தன்மை வாய்ந்தது. நம் வசமிருக்கும் புத்த பகவானின் புனிதமான தந்தத்தைக் கைப்பற்றக் குறுநில மன்னனான க்ஷீரதன் பெரும் படைகளோடு வருகிறான். க்ஷீரதன் கொடியவன். மிலேச்ச

னமாகக் கலிங்கத்தைத் தாக்கிக் கைப்பற்ற அவன் நீண்ட காலமாகவே திட்டம் போட்டு வருவது எனக்குத் தெரியும். மகத நாட்டுக்குச் சென்று மித்திரபேதம் செய்த எதிரிகள் இப்பொழுது கவேதனைச் சரியாக முடுக்கி விட்டிருக்கிறார்கள். சனாதனிகளைக் காப்பாற்றும் புனிதப்போர் நடத்துவதைப் போல் கலிங்கத்தைக் கைப்பற்றும் திட்டத்தை நிறைவேற்றிக்கொள்ள இரண்டு லட்சம் வீரர்களுடன் நமது எல்லையை அவன் நெருங்கிக் கொண்டிருக்கிறான். அவனை எதிர்க்கும் அளவுக்கு நம்மிடம் படை பலமில்லை. மகத சாம்ராஜ்யத்திலிருந்து உதவி வருவதற்கும் அவகாசமில்லை. ஆகையால் போரின் முடிவு எப்படியிருக்குமென்பது தெரிந்த விஷயந்தான். இந்த நிலையில் நமது கடமை தெளிவானது. புத்தரின் புனித தந்தம் எப்படியும் எதிரிகள் வசமாகிவிடக் கூடாது. கலிங்கத்தின் இந்தப் புனிதமான பரிசை, காணிக்கையை ஈழத்தில் இருக்கும் பௌத்த மகா சங்கத்தின் பொறுப்பில் எப்படியும் ஒப்படைத்துவிட வேண்டும். இதை நீயும் ஹேமமாலாவுமாகச் சேர்ந்துதான் செய்ய வேண்டும். அரண்மனையின் உப்பரிகைமீது நின்று பாருங்கள். போர்க்களத்தில் சிவப்புக் கொடி உயர்த்தப்பட்டால் நாம் தோல்வியடைந்து விட்டோமென்று அர்த்தம். அதன் பிறகு ஒரு விநாடியும் தாமதியாமல் புனித தந்தத்துடன் சுரங்க வழியாகத் தலைநகரிலிருந்து நீங்கள் தப்பிப்போய்விட வேண்டும். நேராகத் தூத்துக்குடிக்குச் செல்லுங்கள். அங்கு மரக்கலம் ஏறினால் இரண்டு தினங்களில் ஈழத்துக்குப் போய்ச் சேர்ந்துவிடலாம். என் நண்பன் மகாசேனன் அங்கு நல்லாட்சி நடத்துகிறான். கலிங்கத்தின் விலைமதிக்க முடியாத பவித்திரமான பரிசை அவனிடம் ஒப்படைத்து விடுங்கள். புனித தந்தத்தை பக்தி சிரத்தையுடன் பாதுகாக்கக் கூடியவன் அவன் ஒருவன்தான். உயிரைக் கொடுத்தேனும் புனித தந்தத்தை ஈழம் கொண்டு போய்ச் சேர்ப்பது உங்கள் பொறுப்பு. போர் முனையில் எனக்கு என்ன ஆகுமோ என்று எண்ணிக் காரியத்தைக் கெடுத்து விடாதீர்கள். புத்தர் உங்களைக் காப்பாற்றுவாராக!"

இவ்விதம் சொல்லிய குஹசிவன் மனத்திலிருந்த ஒரு பெரும் சுமையைக் கீழே இறக்கி வைத்தவனைப் போல் ஒரு நெடுமூச்செறிந்தான். பிறகு, "நான் வருகிறேன்!" என்று சொல்லிவிட்டு மன்னன் எழுந்து போய் விட்டான். அதிர்ச்சியில் பிரமை பிடித்துப் போயிருந்த ஹேமமாலாவும் தந்தபுத்திரனும் மன்னன் போய் விட்டதை உணர்ந்துகொள்ளுவதின் முன்னால் குஹசிவனின் சங்கநாதம் அரண்மனை வாசலில் கணீரென்று ஒலித்தது.

"அப்பா ... அப்பா! சற்று நில்லுங்கள், அப்பா!" என்று அலறிக்கொண்டு அரண்மனை வாசலுக்கு ஓடிவந்தாள் ஹேமமாலா. ஆனால் அவள் வாசலை அடைவதற்குள் அரசனைத் தாங்கிக் கொண்டு வெண்புரவி மின்னல் வேகத்துடன் பாய்ந்து விட்டது. தந்தபுத்திரனுக்கு இளவரசியை என்ன சொல்லித் தேற்றுவதென்று புரியவில்லை.

"அரசர் வெற்றியோடு திரும்புவார், இளவரசி! அவர் போர்முனைக்குப் போகும் பொழுது அபசகுனம் மாதிரி இப்படி நீ அழலாமா? பகவான் புத்தர் நம்மை ஒரு போதும் கைவிடமாட்டார்" என்று சொல்லிச் சமாதானப்படுத்தினான் அவன்.

குஹசிவன் சொல்லிவிட்டுப் போனதைப் போலவே அன்று அந்தி மயங்குவதற்குள்ளாக யுத்தத்தின் முடிவு தெரிந்து விட்டது. யுத்தத்தை அறவே வெறுக்கும் அளவுக்கு ஒரு காலத்தில் மௌரியப் பேரரசனை அசோகனை பீதியுறச் செய்த கலிங்கவீரர் சேனைகள், இன்னொரு காலத்தில் பிரகஸ்பதி மித்திரனை அடிபணியச் செய்து மகத சாம்ராஜ்யத்தை வெற்றி கொண்ட அதே கலிங்க நாட்டு மாவீரர்கள், இன்று கவேதன் என்ற ஒரு குறுநில மன்னனிடம் படுதோல்வியடைந்து தலைதெறிக்கத் திரும்பி ஓடி வந்து கொண்டிருந்தார்கள். குஹசிவன் செய்த ஏற்பாட்டின்படி போர்க்களத்தில் செங்கொடி பறப்பதை ஹேமமாலாவும் தந்தபுத்திரனும் அரண்மனை உப்பரிகையிலிருந்து கண்டார்கள். அரசு அழிந்து போனதை அறிவிக்கும் அந்த அபாயக் கொடியைக் கண்டதுதான் தாமதம், ஹேமமாலாவுக்கு இதயமே நின்றுவிடும் போலிருந்தது. கண்ணீரை ஆறாகப் பெருக விட்டுக்கொண்டு அவள் கதறியழுதாள்.

இதற்கிடையில் ஓடிவரும் கலிங்கப்படைகளை விரட்டிக்கொண்டு கொள்ளிவாய்ப் பிசாசுகள்

பார்த்து வருவதைப்போல எதிரிகள் தீப் பந்தங்களோடு ஓடி வருவதைத் தந்தபுத்திரன் கண்டான். அரண்மனையில் தாமதிக்கும் ஒவ்வொரு விநாடியும் பேராபத்தானதென்பதை உணர அவனுக்கு அதிக நேரம் பிடிக்கவில்லை. ஹேமாவைத் தேற்றி அரண்மனையிலிருந்து காப்பாற்றிக் கொண்டு போய்விட அவன் அரும்பாடு பட்டான். தன்னை மறந்து புலம்பிய இளவரசிக்கோ கணவனின் ஆறுதல் மொழிகள் காதில் ஏறவேயில்லை. விநாடிக்கு விநாடி அபாயம் அவர்களை நெருங்கி வந்து கொண்டிருந்தது.

இளவரசியிடம் இனி நயமாகப் பேசுவதில் பயனில்லையென்று தீர்மானித்த தந்தபுத்திரன் சற்றுக் கடுமையான தொனியில் "ஹேமா! நீ அரண்மனையிலேயே இரு. நான் போகிறேன். தகப்பனுக்கு நீ துரோகம் செய்யலாம். ஆனால் மன்னருக்கு நான் துரோகம் செய்யத் தயாராயில்லை. அவருடைய இறுதி வேண்டுகோளின்படி புனித தந்தத்தை எடுத்துக்கொண்டு நான் ஈழத்துக்குப் போகிறேன். உயிர் கொடுத்தாயினும் புனித தந்தத்தைப் பௌத்த மாமன்னன் மகாசேனனிடம் ஒப்படைக்க வேண்டுமென்பது மன்னர் ஆணை. இனி உன் வழி வேறு, என் வழி வேறு. பௌத்த மகாசங்கம் என்னை ஈழத்துக்கு அழைக்கிறது. புத்தர் உன்னைக் காப்பாற்றுவாராக!" என்று மிடுக்காகச் சொல்லி, அவன் அங்கிருந்து கிளம்ப ஆயத்தமானான்.

கடமை உணர்ச்சியைத் தந்தபுத்திரன் குத்திக் காட்டிய பொழுதுதான் ஹேமமாலாவின் அழுகை நின்றது.

"எல்லோருமே என்னை விட்டுப் போவதென்று தீர்மானித்து விட்டீர்களா? இல்லை, நானும் உங்களோடு கூட வருகிறேன். எல்லாம் அழிந்து போன பிறகு, நீங்களும் போகும் பொழுது எனக்கு மாத்திரம் இங்கே என்ன வேலை? மன்னரின் ஆன்ம ஈடேற்றத்துக்கு அவர் இட்ட பணியை நிறைவேற்றி வைக்க இதோ நானும் வருகிறேன். புனித தந்தத்தை எப்படியும் ஈழம் கொண்டு சேர்ப்போம்" என்று சொல்லிக் கொண்டு இளவரசியும் எழுந்தாள்.

"ஒவ்வொரு விநாடி தாமதிப்பதும் ஆபத்து. ஹேமா! எதிரிகள் தலைநகரில் நுழைவதற்கு முன்னால் நாம் தந்த கோபுரத்தை அடைந்து விட வேண்டும். சுரங்கப்பாதை அங்குதான் இருக்கிறது" என்று கூறியவண்ணம் இளவரசியைத் தரதரவென்று இழுத்துக்கொண்டு ஓட்டமும் நடையுமாகச் சென்றான் தந்தபுத்திரன். பிரயாணத்துக்கு வேண்டிய பொருள்களையும் புத்தரின் புனிதத் தந்தத்தையும் எடுத்துக் கொண்டு சுரங்க வழியாக அவர்கள் தலைநகரை விட்டு வெளியேறினர்.

துறவிகளைப்போல மாறுவேடம் அணிந்து இரவு பகலென்று பாராமல் மேட்டிலும் காட்டிலும் முள்ளிலும் கல்லிலும் அவர்கள் பிரயாணம் செய்தார்கள். இடையில் எவ்வளவோ ஆபத்துகள்; கஷ்டங்கள்; இடையூறுகள் இவைகளோடு கொள்ளையர் பயம் வேறு. வழியில் எதை இழந்தாலும் புனித தந்தத்தைப் பறி கொடுத்துவிடக் கூடாதென்பதற்காக அதைக் கூந்தலுக்குள் மறைத்து வைத்துக் கொண்டு போனாள் இளவரசி. பல நாட்கள் பிரயாணத்துக்குப் பிறகு அவர்கள் கோதாவரி நதி தீரத்தை யடைந்தனர். இரு கரைகளையும் அணைத்துக்கொண்டு வெள்ளம் ஓடிக் கொண்டிருந்தது. புத்தர் அருளினால் ஒரு படகோட்டி உதவிக்கு வந்து சேர்ந்தான். நதியைத் தாண்டி ஆந்திர பாதத்தில் இறங்கியபொழுதுதான் இளவரசி தம்பதிகள் நிம்மதியாக மூச்சுவிட ஆரம்பித்தார்கள். பிறகு அங்கிருந்து தூத்துக்குடியை அடைந்து ஈழத்துக்கு மரக்கலம் ஏற அவர்கள் அதிகம் கஷ்டப்பட வேண்டியிருக்கவில்லை.

கலிங்க நாட்டு இளவரசி ஹேமமாலாவும் தந்தபுத்திரனும் புத்த பகவானின் புனித தந்தத்தோடு ஈழம் வந்தபொழுது மாமன்னன் மகாசேனன் காலமாகி விடவே, குல வம்ச முதல் மன்னனான கீர்த்திசிரீமேக வர்ணன் ஆட்சி நடந்து கொண்டிருந்தது. கலிங்க இளவரசி தம்பதிகள் திருகோண மலை எனப்படும் கோகர்ணத்தில்தான் வந்து இறங்கினர்.



இறங்கியதும் இறங்காததுமாகச் சிங்களத் தலைநகருக்குத் தூது அனுப்பினார்கள். ஆத்மீகத் துறையில் அரும்பெரும் சேவைகள் செய்து வந்த சிரீமேகவர்ணன் புத்த பெருமானின் புனித தந்தம் வந்திருக்கும் செய்தியைக் கேட்டவுடன் புளகாங்கிதம் அடைந்தான். ராஜ விருதுகளுடன் பல்லாயிரக்கணக்கான பிக்ஷுக்கள் புடைசூழக் கோகர்ணத்துக்கு விரைந்த மன்னன் ராஜாங்க மரியாதைகளுடன் புனித தந்தத்தை வரவேற்றான். தேவநம்பியதீசன் காலத்தில் அமைக்கப்பட்ட முதலாவது பௌத்த விஹாரையான மஹா விஹாரையில் ஒரு தலத மாளிகை,—புனித தந்தமிருக்கும் ஆலயம்,— எழுப்பி, அதில் புனிதச் சின்னத்தை பிரதிஷ்டை செய்தான்.

புனித தந்தத்தை இலங்கைக்குக் கொண்டு வந்த ஹேமமாலாவுக்கும் தந்த புத்திரனுக்கும் குறைவின்றிச் செல்வங்களை வாரி வழங்கி அவர்களை இலங்கையிலேயே நிரந்தரமாகக் குடியேற்றம் செய்தான்.

அன்றுமுதல் புனித தந்தம் பக்திக்கு உரிய புனிதச் சின்னமாக இருந்து வருகிறது.

கலிங்கம் தந்த இப்பரிசை ஈழம் இன்றும் போற்றி வழிபட்டு வருகிறது.



# நினைத்தது நடந்தது

"பாதுகா பட்டாபிஷேகம்" அமெச்சூர் நாடகம் நடந்தது. அதில் பரதனாக வந்தவர், தசரதன் மரணத்தையும் ஸ்ரீ ராமபிரான் கானகம் சென்றதையும் கேட்டு மிதமிஞ்சிய உணர்ச்சி வேகத்தில் தலைக் கிரீடத்தைப் பிடித்துப் பிய்த்துக் கொண்டு கதறினார். அவருடைய துக்கம் தாங்காமல் கிரீடமும் அதனுடன் பொய்க் கூந்தலும் கையோடு வந்து விட்டன! தாங்கொணாத் துக்கத்தில் ஆழவேண்டிய துர்ப்பாக்கிய கட்டத்தில் இருந்த நாடகத்தைப் பார்த்தவர்கள் 'ஹோ' என்று சிரித்துவிட்டனர். இந்த எதிர்பாராத ஹாஸ்யம் எல்லோரையும் திணற அடித்து விட்டது.

பொதுவாக நாடகத்திலும் சரி, சினிமாவிலும் சரி, ஹாஸ்யத்தைப் புகுத்துவது என்பது மிகவும் சிரமமான காரியம். அதைவிடச் சிரமம் நாடக ஆசிரியர் மிகவும் யோசித்துப் புகுத்திய ஹாஸ்யத்தை உணர்ந்து நாடகம் பார்ப்பவர்கள் சிரிப்பது. அதையும் விடச் சிரமமான காரியம், 'கொல்'லென்று ஜனங்கள் சிரிக்கும்படியான ஹாஸ்யத்தைப் புகுத்துவது. ராவ்பகதூர் ப. சம்பந்த முதலியார் எழுதிய "சபாபதி" நாடகம் முழுவதும் ஹாஸ்யரஸம் ததும்பும் நாடகம். ஒரு கற்கண்டுக் கட்டியில் எந்தப் பகுதியைச் சுவைத்தாலும் இனிப்பாயிருப்பதுபோல், அந்த நாடகத்தின் எல்லாக் காட்சிகளிலும் ஹாஸ்யம் நிறைந்திருந்தது. ("சபாபதி" சினிமாவாக எடுக்கப்பட்டபோது கூட ஹாஸ்ய ரஸம் குறையாமல் இருந்தது என்பதை என்னால் மறக்க முடியவில்லை!)

சென்னை தியாகராயர் கலைக் கலை மன்றத்தினர் 21-12-57 அன்று செயின்ட்மேரி மண்டபத்தில் நடத்திய "நினைத்தது நடந்தது" என்னும் நாடகத்துக்குப் போனபோது நாடகத்தில் குறைகள் இருந்தாலும் அவற்றையும் பார்த்து ரஸித்துவைப்போமே என்று நிர்மானித்துக் கொண்டுதான் போனேன்.

இந்த நாடகத்தில், கதாநாயகன் கதாநாயகியை மணந்து கொள்ள நினைத்தான்—அது நடந்தது. கதாநாயகியும் கதாநாயகனை மணந்து கொள்ள நினைத்தாள்—அதுவும் சம்பிரமமாக நடந்தது.

ஆனால் நான் எதிர்பார்த்தது நடக்கவில்லை; நாடகத்தில் நான் எதிர்பார்த்துப் போன குறைகளைச் சொல்லுகிறேன்.

பள்ளிக்கூடத்தில், மாணவர்கள் எல்லோரும் சரியாகப் பாடம் ஒப்பித்து விட்டால் உபாத்தியாயருக்கு மனசு அவ்வளவு நிம்மதியாயிராது. அந்த நிலைமை ஏற்பட்டுவிட்டால் பள்ளிக்கூடத்தில் உபாத்தியாயரே தேவையில்லையே!

'புரூப்' திருத்துவோருக்கு ஒரு பிழை கூடக் கிடைக்க வில்லையென்றால், மனசுக்குத் திருப்தி ஏற்படாது. பிழையே யில்லையென்றால், பள்ளி உபாத்தியாயரின் நிலைதானே அவருக்கும் ஏற்படும்!

அதுபோல, சினிமா, நாடக விமரிசகர்களுக்கும் கலையம்சங்கள் எதிலுமே குறைகாண முடியவில்லையென்றால் கொஞ்சம் சிரமமாகத்தான் இருக்கும்.

விமரிசனங்களைப் படிப்பவர்கள் கூட, நல்ல சினிமா, நாடகங்களைப் பற்றி உயர்வாக எழுதப்பட்ட விமரிசனங்களைவிட, தாக்கி எழுதும் விமரிசனங்களைத்தான் மிகவும் ரஸித்துப் படிக்கின்றனர்.

"அந்தப் படத்தை வெளுத்து வாங்கிவிட்டார்களே! படித்தேன். நன்றாயிருந்தது..." என்று ரஸித்துக் கூறும் நண்பர்கள், நல்ல விஷயங்களைப் பாராட்டி எழுதினால் வாயே திறப்பதில்லை.

ஆனால் நான் அதற்காக என் விமரிசனத்தில் காரம் புகுத்த முயலவில்லை. நல்ல அம்சத்தைக் கண்டால் அதைப் பாராட்டிக் கூறச் சிறிதும் தயங்குவதில்லை.

* * *

கமலாவின் அத்தைமகன் சேகர்; அவனுக்கும் அவளுக்கும் மணம் முடிக்கக் கமலாவின் பெற்றோர் முடிவு செய்து விட்டனர். சேகர் அநாதை; மாமா வீட்டிலே படித்து முன்னுக்கு வந்தவன். கமலாவின் தகப்பனாரிடம் பொறாமை கொண்டிருந்த உறவினர் ஒருவர் இந்தக் காதல் மணம் கமழ வொட்டாமற் செய்ய முயல்கிறார். ஒரு பெரிய பணக்காரரின் மகனை ஒரு பித்துக்கொள்ளிக்குக் கமலாவைக் கொடுக்கும்படி தூண்டுகிறார். பணம் காரணமாகக் கமலாவின் தகப்பனார் வரனைப் பார்க்காமலே அந்தச் சம்பந்தத்துக்கு இசைந்து சேகரை வெறுத்து உதறுகிறார்.

சேகர் தவிக்கிறான். அவன் நண்பன் பாலு சமய சஞ்சீவியாக இருந்து அவன் காதலை இனிது நிறைவேற்றி வைக்கிறான். இதுதான் ''நினைத்தது நடந்தது.''

நினைத்தது நடந்தது என்றால் அதில் என்ன அதிசயம்? நினைக்காதது நடந்தது என்றால் தான் அதிசயம் என்று நீங்கள் நினைக்கலாம்.

ஆனால் அமெச்சூர் நாடகங்களைப் பொறுத்த வரையில், இரண்டுமே அதிசயம்தான். இன்னும் குறிப்பாகக் கேட்கப் போனால் நாடகம் குறித்த தேதியில் நடந்தாலே அதிசயம்தான்.

நான் இதைப் பரிகாசமாகக் கூறவில்லை. ''வீட்டைக் கட்டிப் பார், கல்யாணம் பண்ணிப் பார்'' என்னும் முதுமொழியோடு 'நாடகம் நடத்திப் பார்' என்னும் ஒரு புது மொழியையும் சேர்த்துக் கொள்ளலாம்.

முதலில் அமெச்சூர் குழுவினருக்கு நாடகம் நடத்த ஆர்வம் ஏற்படுவது அரிது; அவர்களில் சிலருக்கு, அந்த நாடகத்தில் நடிக்க ஆர்வம் ஏற்படுவது அதைவிட அரிது; நடிகர்கள் எந்தப் பாத்திரத்தையும் தகராறு செய்யாமல் நடிக்க ஒப்புக் கொள்ளுவது மிகவும் அரிது; அவ்வாறு ஒப்புக் கொண்ட நடிகர்கள் நாடக ஒத்திகைக்கு ஒழுங்காக வருவது மிக மிக அரிது: ஒத்திகைக்கு ஒழுங்காக வந்த நடிகர்கள் நாடகமேடையில் நாடக தினத்தன்று ஒத்துழைப்பது எல்லாவற்றிலும் அரிது. இப்படி ஒரே அரிதாயிருக்கும் நாடகத்தை மக்கள் வந்து பார்ப்பதே பெரிது.




''நினைத்தது நடந்தது'' நாடகத்தில் நடித்தவர்கள் யாவரும் பொறுப்போடு நடித்தார்கள்; வசனங்களை இயல்பாகப் பேசினார்கள். தொழில் நடிகர்களைவிட நன்றாக நடித்தார்கள்.

கதாநாயகன் சேகராக நடித்த செட்டிபாபு நிரந்தரமாகக் கதாநாயகனாக வருவதற்கு ஏற்றவர். முன் பகுதியைவிட, கமலா தனக்கு இல்லை என்று தெரிந்ததும் அவர் நடிப்பு நன்றாயிருந்தது.

கமலாவாக நடித்த டி. கே. ராஜேஸ்வரிக்கு நல்ல முகவெட்டு இருக்கிறது. எப்பொழுதும் கதாநாயகியாக வருவதற்கு ஏற்ற முகபாவமும் தோற்றமும் இருக்கின்றன. அத்துடன் கவர்ச்சிகரமாக நடனம் புரியவும் தெரிந்திருக்கிறது. அவர் சற்று குரலை உயர்த்திப் பேசினால் அவருக்கும் நல்லது; நாடகம் பார்ப்பவர்களுக்கும் நல்லது.

கமலாவின் தந்தை தாதுலிங்கம் ஒரு முக்கியமான பாத்திரம். அவர் ஓய்வுபெற்ற ரயில்வே ஊழியர். அவர் இரண்டாந்தாரமாகக் கரம் பற்றிய பெண்மணி, ஆண்மணிகளும் கண்டு அஞ்சும் ஆற்றல் வாய்ந்தவள்; அவளோடு தாதுலிங்கம் நடத்தும் இல்லறம் மேடையில் கண்டு ரசிக்க வேண்டிய கட்டம்!

தாதுலிங்கமாகத் தோன்றியவர் ஆர். எஸ். லிங்கராஜ். அவர் தியாகராய கவின் கலை மன்றத்தின் கௌரவச் செயலாளர் என்பதுடன் இந்த நாடகத்தின் டைரக்டர் என்பதையும் அறிந்து மிகவும் மகிழ்ந்தேன். அவர் இயல்பாக நடித்து, பேசி, சக்கைப் போடு போட்டார். நாடகம் முழுவதையும் பார்த்ததும், அவர் டைரக்டர் பணியையும் திறமையுடன் ஆற்றியிருக்கிறார் என்பதை புரிந்து மனத்துக்குள் வியந்தேன்.

தாதுலிங்கத்தின் இரண்டாம் தாரமாக வந்த பி. சீதாலட்சுமியைப் பாராட்டாமல் இருக்க முடியாது. இந்த நாடகத்தின் உயிர் நாடியே அவர்தான். கணீரென்று தடங்கலில்லாமல் பேசி எல்லோரையும் பிரமிக்கச் செய்தார். அவரது மிடுக்கான நடிப்பும், துடுக்கான நடையும், எடுப்பான பேச்சும் கவின் கலை மன்றத்தினரின் நாடகத்தையே கவினுறச் செய்து விட்டன.

வியாபாரி சித்தலிங்கம் பிள்ளையாக நடித்த மாஸ்டர் பாக்ராஜ், சேகரின் ஆப்த நண்பன் பாலுவாக நடித்த எஸ். எம். ராமன் ஆகியவர்கள் தாங்கள் ஏற்ற பாத்திரங்களை உணர்ந்து நடித்தார்கள்!

இந்த நாடகத்தில் இன்னொரு முக்கியமான நடிகரைக் குறிப்பிடாமல் இருப்பதற்கில்லை. அவர்தான் பித்துக்கொள்ளி அழகு துரையாக நடித்த வரதராஜன். தொழில் நடிகர்கள் கூடத் திணறும் வண்ணம் நடித்து, ரயில் வண்டி ஓட்டி, சொந்தக் குரலில் பாடி அமர்க்களம் செய்து விட்டார்! நாடகத்தில் எல்லோரையும் சிரிக்கச் செய்தவரும் அவர்தான். அவர் ஏற்றுக்கொண்ட பாத்திரம் மிகவும் சிரமமானது. அதில் அவர் வெற்றி கண்டு விட்டார்.

இந்த நாடகத்தையும், அதற்கேற்ற வசனத்தையும் தயாரித்த கே. தனபாலன் மிகவும் சிறப்பாகத் தமது பங்கை நிறைவேற்றியிருக்கிறார். வசனம் யாரையும் தடுக்கி விழச் செய்யாமல் இருந்ததற்கு அவரைப் பாராட்டித்தானாக வேண்டும்.

தக்ஷிண ரயில்வே ஊழியர்கள் நடத்தும் தமிழ்க் கலை மன்றத்தின் நூல் நிலைய நிதிக்காக இந் நாடகம் நடத்தப்பட்டது. இந்த நற்பணிக்குத் தாராளமாக உதவி, கலைமன்றத்தையும், நூல் நிலையத்தையும் வளர்த்து வருவது தக்ஷிண ரயில்வே ஊழியர்களின் கடமையாகும்.

இந் நாடகம் கவிஞர் கண்ணதாசன் அவர்கள் முன்னிலையில் நடைபெற்றது. அவர் நகைச்சுவையுடன் இந் நாடகத்தையும் நடிகர்களையும் பாராட்டிப் பேசினார்.

# இந்தக் கவசம் உங்களைப் பாதுகாக்கிறது!







ஜாக்கிரதையாயிருங்கள்!

இன்றேல் கஷ்ட வியாபாரத்துடன் வீடு திரும்புவீர்கள். கவலை வேண்டாம். இந்தக் கவசம் உங்களைப் பாதுகாக்கும்.

எப்படியென்று நீங்கள் கேட்கலாம்? இதற்குப்பதில் மிகச்சுலபம். இந்தக் கவசம் உங்களுக்குப் பெரகான் புடவைகளைப் பரிச்சியம் செய்விக்கும். பெரகான் விரயச் சீட்டுடன் பெரகான் பெட்டியிலிருந்தே எடுத்தாலும், அது அசல் பெரகான் புடவையாய் இருக்கும் என்பது நிச்சியமில்லை. அது அசல் பெரகான் புடவை என்பதற்கு அடையாளம் தங்க நிறத்தில் PTM டிரேட் மார்க், புடவையின் இருதலைப்பிலும் இடப்பட்டிருக்கும். அந்தத் தங்க முத்திரை இருக்கிறதா என்று பார்த்து வாங்குங்கள்.

புதியதில் எல்லா நைலான்களும் ஒன்றுபோலதான் இருக்கும். ஆனால் சிறந்த நைலான் என்பது பலமுறை சுத்தம்செய்து அணிவதில் தெரிய வேண்டும். சிறந்த முறையில் சுத்தம் செய்யப்படுவதும், இஸ்திரியே தேவையில்லாததுமான மேன்மையான அசல் நைலான் புடவைகளை பெரகான் தயாரிக்கிறார்கள்.

உங்கள் சிநேகிதர்களையும், உறவினர்களையும், ஜாக்கிரதையாயிருக்கச் சொல்லுங்கள். அசல் பெரகானை அல்லாமல் இதர போலிகளை வாங்கி ஏமாறாமல் பார்த்துக்கொள்ளுங்கள்.

## பெரகான்

### நைலான் புடவைகள்

பெரகான் டெக்ஸ்டைல் மில்ஸ்,
வொர்லி–பம்பாய், 13.

# வித்வத் சபையின் விருது பெற்ற வித்வான்கள்



அனந்தகிருஷ்ணசர்மா



ராமலிங்க பாகவதர்





அங்கப்ப பிள்ளை



ரங்கு அய்யங்கார்

வீணை சண்முகவடிவு





# சென்னையில் இசை விழாக்கள்





சென்னை மியூஸிக் அகாடமியின் முப்பத்தோராவது இசை விழா டிஸம்பர் 21-ம் மாலை சென்னை பி. எஸ். ஹைஸ்கூல் பந்தலில் ஜாம் ஜாம் என்று ஆரம்பமாயிற்று. அன்று காலை சென்னைக்கு வந்த மைசூர் கவர்னர் ஸ்ரீ ஜெயசாமராஜ உடையார் அவர்களை அகாடமியின் உப தலைவர் ஸ்ரீ கே. சீனிவாசன் அவர்களும் மற்ற அகாடமி அங்கத்தினர்களும் சென்னை சென்ட்ரல் ஸ்டேஷனுக்குச் சென்று வரவேற்றனர். உபதலைவர் ஸ்ரீ கே. சீனிவாசன் அவர்கள் விழாவில் வரவேற்புரை நிகழ்த்தினார்.

மைசூர் கவர்னர் தமது துவக்க உரையில் "இந்திய சங்கீதத்தின் லட்சியம் ஆத்மீக அநுபவம் தான். கடவுளைக் காண்பதால் ஏற்படுவதைப் போன்ற ஆனந்தத்தை ஏற்படுத்துவதே சங்கீதத்தின் இறுதி லட்சியம்!" என்றார். ஸ்ரீ டி. சௌடய்யா தலைமையுரை நிகழ்த்திய பிறகு தாமே தமது சிஷ்யர்களுடன் கச்சேரி செய்தார். சென்னையிலுள்ள சங்கீத ரஸிகர்கள் ஆண்களும் பெண்களும் பெருந்திரளாக வந்திருந்து சிறப்பித்தனர்.





# ஆட்சி மொழி மகாநாடு



○●○

மத்திய சர்க்காரின் ஆட்சி மொழி இப்பொழுது இருப்பது போலவே, ஆங்கிலம் தொடர்ந்து இருக்கவேண்டும் என்பதைத் தென்னகத்தின் பெருந் தலைவர்கள் சென்னையில் கூடித் தீர்மானித்தார்கள். இந்த மகாநாட்டுக்கு வரவேற்புரை எம். ரத்னசுவாமி நிகழ்த்தினார். துவக்கவுரை மீர்சா இஸ்மாயில் நிகழ்த்தினார். டாக்டர் ஸி. பி. தலைமை தாங்கினார். ராஜாஜி முக்கிய தீர்மானத்தைப் பிரேரேபித்தார். திருவாளர்கள் பி. டி. ராஜன், பி. கோதண்டராமன், நெடுஞ்செழியன், பேராசிரியர் ஷண்முகம், செல்லசாமி, என். ஆர். வேங்கடராமன், ஆர். வி. கிருஷ்ணய்யர் முதலியவர்கள் மகாநாட்டுத் தீர்மானங்களை ஆதரித்தனர். மகாநாடு காலையில் சீனிவாச சாஸ்திரி ஹாலிலும் மாலை கோகலே மண்டபத்திலும் நடைபெற்றது. 1. டாக்டர் ஸி. பி. பேசுகிறார். 2. ராஜாஜி பேசுகிறார். 3. கோகலே மண்டபத்தில் கூடியிருந்த பெருமக்கள். 4. மயிலாப்பூர் சீனிவாச சாஸ்திரி ஹாலில் கூடியிருந்த பிரமுகர்கள்.





# விசித்திரச் சலங்கை

கதை....வாண்டுமாமா • படம்...பாபு

3













அரண்மனையைத் தவிர வேறு இடம் தெரியாதவள். அன்னை பராசக்தி தான் அவள் பக்கத்தில் இருக்க வேண்டும்.


இருட்டி விட்டது. கானகத்திலே வழியும் தெரியவில்லை. கால்கள் தள்ளாடுகின்றன.


இனி ஒரு அடியும் என்னால் நடக்க முடியாது விடியும் வரை இங்கேயே விழுந்து கிடக்கிறேன்.




காட்டை அடுத்த ஒரு ஊரில்........
அப்பா! நான் போய் வருகிறேன். காட்டில் யாராவது வழிதவறித் தவிக்கிறார்களா என்று பார்த்து வருகிறேன்.
விளக்கும், பானையில் நீரும் எடுத்துக் கொண்டாயா தேவதத்தா! சரி, போய் வா


ஒரு குரல்: "காலத்தினால் செய்த நன்றி சிறிதெனினும் ஞாலத்தின் மாணப் பெரிது."
3
தொடரும்.



## 40. பாட்டுப் போட்டி!

சிறையில் தனது சுய நினைவு வந்தவுடன் மால்கோஷ் வைத்தியக்காரனைப் போலவேதான் நடந்து கொண்டான். அவன் சிறையில் இருந்த ஒரு வாரமும் "கலா, கலா!" என்று கதறிக் கொண்டிருந்தான். பிறகு நடக்க முடியாமல் தள்ளாடிக் கொண்டு ஒரு சத்திரத்தில் வந்து தூங்கினான். பவுன் நாணயங்கள் நிரம்பி யிருந்த அவன் சட்டைப் பையில் ஒரு நாணயம் கூடக் கிடையாது. நிறையப் பவுன் காசுகள் இருந்த பொழுது அவன் மிகவும் சந்தோஷமாகவே இருந்தான். ஆனால் இப்பொழுது சாப்பாட்டிக்கு வழியே இல்லை. அன்று காலை சத்திரத்தில் அளித்த சாப்பாட்டை வயிறார உண்டான். களைப்பு மேலிட்டதினால் நன்றாகத் தூங்கினான். தூங்கி எழுந்த பிறகு அவனது பழைய நினைவுகள் யாவும் ஒன்றன் பின் ஒன்றாக ஞாபகத்தில் வந்தன.



மால்கோஷ் தங்கி இருந்தது ஒரு சத்திரம். ஆனதால் பல பிரயாணிகள் வந்து போய்க் கொண்டிருந்தார்கள். அவர்களை யெல்லாம் மால்கோஷ் தனது தங்கையின் அடையாளத்தைச் சொல்லி விசாரித்தான். ஒருவரும் பார்த்ததாகச் சொல்லவில்லை. ஒரு பிரயாணி மாத்திரம் "ஐயா! சமீபத்தில் மாஞ்சி நாட்டுத் தலைநகரிலே ஒரு சங்கீத மகாநாடு நடக்கப் போகிறதாம். சங்கீத வித்வான்கள் பலர் அங்கு நடக்கப் போகும் பாட்டுப் போட்டியில் கலந்து கொள்ளப் போகிறார்களாம். மாஞ்சி நாட்டில் முதல் தடவையாகச் சங்கீத மகாநாடு நடக்கப் போவதால் பெரிய கூட்டத்தை மாஞ்சிநாட்டு அரசன் எதிர்பார்க்கிறாராம். வேடிக்கை பார்ப்பதற்குக் கூட எல்லோரும் போகலாமாம். எல்லோருக்கும் சாப்பாட்டுவசதிகளும் உண்டாம்!" என்று சொல்லிக்கொண்டிருந்ததை மிகுந்த ஆவலுடன் கேட்டுக் கொண்டிருந்தான் மால்கோஷ்.

சங்கீதம் என்றாலே மால்கோஷுக்குச் சாப்பாடு கூட வேண்டியதில்லையே! அந்தப் பிரயாணியை, மால்கோஷ் "ஐயா! மாஞ்சி நாட்டுத் தலைநகர் எங்கிருக்கிறது? சங்கீத மகாநாடு எப்பொழுது கூடப் போகிறது?" என்று ஆவலுடன் கேட்டான். அதற்கு அந்தப் பிரயாணி "என்ன ஐயா இது! நீ கேட்பது வேடிக்கையாக இருக்கிறதே! மாஞ்சி நாட்டிலேயே இருந்து கொண்டு மாஞ்சி நாட்டுத் தலைநகரத்தைக் கேட்கிறாயே? இங்கிருந்து கிழக்கே ஆறு மைல் தூரத்தில் தான் இருக்கிறது. ஆனால் எப்பொழுது சங்கீத மகாநாடு நடக்கப் போகிறது என்பது எனக்குத் தெரியாது" என்றான்.

சங்கீத மகாநாடு என்று கேட்டவுடன் மால்கோஷ் அடைந்த சந்தோஷத்துக்கு அளவே இல்லை. அப்பொழுது அவனது இன்ப துன்பங்களை யெல்லாம் மறந்தான். உடனே புறப்பட்டு விட்டான்.

வழியில் இரண்டு மாஞ்சி நாட்டு அரண்மனைச் சிப்பந்திகள் தண்டோரா போடுவதைப் பார்த்தான் மால்கோஷ். அவன் கூட்டத்துக்கு அருகில் சென்றான்.

"இதனால் எல்லோருக்கும் தெரிவிப்பது என்னவென்றால் வருகிற பௌர்ணமி காலை பத்து மணிக்கு அரண்மனை வாசலில் அமைக்கப்பட்டிருக்கும் பெரிய பந்தலில் ஒரு சங்கீத மகாநாடு நடைபெறும். அப்பொழுது சங்கீதப் போட்டி ஏற்பாடு செய்யப் பட்டிருக்கிறது. போட்டியில் வெற்றி பெறுபவர்களுக்கு விலையுயர்ந்த தங்கப் பதக்கம் அளிக்கப்படும். போட்டியைப்பற்றிய விவரங்களை அரசாங்கக் காரியாலயத்துக்கு எழுதிப் பெற்றுக் கொள்ளலாம்" என்று கூறி, தண்டோராவை அடித்துக் கொண்டு அவ்விடத்தை விட்டுப் போனார்கள். மால்

# மாயப் பந்து

கோஷும் உற்சாகத்துடன் அவர்களைப் பின் தொடர்ந்து சிறிது வேகமாக நடக்கலானான்.

சங்கீத மகாநாட்டுக்கு மாஞ்சி நாட்டு அரசன் செய்திருந்த ஏற்பாடுகள் பிரமாதமாக இருந்தன. மகாநாட்டுக்குப் போடப்பட்டிருந்த மிகப் பெரிய பந்தலைப் பார்த்தவர்கள் அது வரையில் அவ்வளவு பெரிய பந்தலைப் பார்த்தது இல்லை என்றே சொன்னார்கள். ஒரே சமயத்தில் சுமார் பத்தாயிரம் பேர்களுக்கு மேல் உட்காருவதற்கு வசதியாகப் பந்தல் அமைக்கப் பட்டிருந்தது. பெண்கள் உட்காருவதற்குத் தனி இடம் அமைக்கப்பட்டிருந்தது. பாட்டுப் போட்டியில் கலந்து கொள்பவர்களுக்குப் பந்தலின் மத்தியில் அரசன் உட்காருவதற்கு எதிராக இடம் அமைக்கப் பட்டிருந்தது. எங்கு பார்த்தாலும் பிரகாசமான விளக்குகள் போடப்பட்டிருந்தன.

பல இடங்களிலிருந்து பல சங்கீத வித்வான்கள் பாட்டுப் போட்டியில்கலந்துகொள்ள வந்து பந்தலில் முன்பாகவே உட்கார்ந்திருந்தார்கள். வேடிக்கை பார்ப்பதற்காக ஜனங்கள் திரள் திரளாக வந்து பந்தலில் அமர்ந்திருந்தார்கள். மால்கோஷும் அவர்களுடன் அமர்ந்திருந்தான். அரண்மனை மாடியிலிருந்து மால்கோஷ் வருகிறானா என்று கலா பார்த்துக் கொண்டிருந்தாள். மால்கோஷின் மாறுபட்ட முகத் தோற்றத்தினாலும் அவன் உடுத்திக் கொண்டிருந்த அழுக்கு உடைகளினாலும் கலாவினால் மால்கோஷை அப்பொழுது அடையாளம் கண்டு கொள்ள முடியவில்லை.

ஆனால் மால்கோஷ் அங்கு வந்திருக்கிறானா என்பதைக் கண்டு பிடிக்கக் கலாவுக்கு ஒரு யோசனை தோன்றியது. அந்த யோசனையை உடனே அரசனிடம் போய்ச் சொன்னாள். அரசனும் அதற்கு இசைந்தான்.

அரண்மனைப் பந்தலில் உள்ள கடிகாரம் 'டாண் டாண்' என்று பத்து அடித்தது. மாஞ்சி



நாட்டு அரசன் மந்திரிகள் தன்னுடன் வரப் பந்தலுக்கு வந்தான். உடனே பந்தலில் இருந்தவர்கள் யாவரும் எழுந்து கரகோஷம் செய்தார்கள். தனக்கு என்று பிரத்தியேகமாக அமைக்கப் பட்டிருக்கும் ஆசனத்தில் அரசன் உட்கார்ந்தான்.

"இன்னும் சில நிமிஷங்களில் பாட்டுப் போட்டி ஆரம்பமாகும். எந்த ராகத்தைப் போட்டிக்கு எடுத்துக் கொள்ளப் படும் என்பதை அரசர் தீர்மானிப்பார். அவரே தம்முடைய தீர்மானத்தை உங்களுக்கு அறிவிப்பார். வரிசைக்கிரமமாகப் போட்டியில் கலந்து கொண்டிருக்கும் வித்வான்களின் பெயர்களைக் கூப்பிடுவோம். அவர்கள் மேடையில் உட்கார்ந்து கொண்டு அரசன் எந்த ராகத்தைச் சொன்னரோ, அந்த ராகத்தை ஆலாபனை செய்து விட்டு அதே ராகத்தில் ஒரு பாட்டு பாட வேண்டும். இந்தச் சங்கீதப்போட்டியைப்-பற்றியவரையிலும் அரண்மனை வித்வான்கள் மூவரின் தீர்ப்பே முடிவானது. சில நிமிஷத்தில் அரசர் ராகத்தை அறிவிப்பார்" என்று ஒரு தகரக் குழாய் மூலம் அறிவிக்கப்பட்டது. பந்தலில் உட்கார்ந்த அனைவரும் அரசனையே பார்த்துக் கொண்டிருந்தார்கள். அரசன் சிறிது யோசித்தான். பிறகு திடீரென்று எழுந்திருந்தான். தகரக் குழாயை வாயில் வைத்துக்கொண்டு, "மால்கோஷ்!" என்று உரக்கச் சப்தமிட்டான்.

கூட்டத்தில் உட்கார்ந்திருந்த மால்கோஷ் எதிர்பாராத விதமாகத் திடீரென்று அரசன், மால்கோஷ் என்று சொன்னவுடன் அதிர்ச்சி ஏற்பட்டது போல எழுந்து நின்ருன். தன்னை அறியாமல் 'ஏன் அரசே' என்று கேட்டான். அதைக் கேட்டவுடனே அரண்மனைச் சேவகன் ஓடோடி வந்து அவனை அரசனிடம் அழைத்துப் போனுன்.

அந்தச் சங்கீத மகாநாட்டை ஏற்படுத்தியதே மால்கோஷைக் கண்டு பிடிக்கவே என்பது அங்கு பந்தலில் இருந்த அரசனைத் தவிர முதல் மந்திரிக்குக்கூடத் தெரியாது. அரசன் மால்கோஷை அரண்மனைச் சேவகன்அழைத்துவருவதைப் பார்த்தான். உடனே தனது ஆசனத்திலிருந்து எழுந்திருந்து, "நான் உள்ளே சென்று வருகிறேன். பாட்டுப் போட்டி தொடர்ந்து நடக்கட்டும்" என்று உத்தரவிட்டான். பிறகு அரண்மனைக்குள் சென்று தன் அந்தரங்க அறையில் பிரவேசித்தான். சேவகன் மால்கோஷை உள்ளே அழைத்து வந்தான்.

அங்கே அரசனைப் பார்த்த மால்கோஷ் பயந்துகொண்டே கைகளைக் கூப்பி வணங்கினுன். பரட்டைத் தலையுடனும், அழுக்குப் படிந்த உடுப்புகளுடனும் இருந்த மால்கோஷைப் பார்த்தவுடன் அரசனுக்குத் தூக்கிவாரிப் போட்டது. 'இவனு கலாவின் சகோதரன்? பிரபல மந்திரவாதி மால்மாவின் பிள்ளையா இவன்? ஒருநாளும் இருக்காது. இதில் ஏதோ தவறு நடந்திருக்கிறது. சம்பந்தமில்லாத ஒருவனைக் கண்டு பிடிக்கவா இத்தனை செலவு செய்து இந்தச் சங்கீத மகாநாட்டுக்கு ஏற்பாடு செய்தேன்?' என்று தனக்குத் தானே வருத்தப்பட்டுக் கொண்டான் அரசன். மால்கோஷை ஒன்றும் கேள்விகள் கேட்காமல் தன் புதல்வன் ஜிலேந்திரனை வரவழைத்தான். அவன் வந்ததும் "ஜிலேந்திரா! இவனை உனக்குத் தெரியுமா? இதற்கு முன்பு எங்கேயாவது பார்த்திருக்கிறாயா? நன்ருகக் கவனித்துச் சொல்" என்ருன் அரசன்.

ஜிலேந்திரன் மால்கோஷின் முகத்தை உற்று நோக்கினுன். மறுநிமிஷம் ஒருவரை ஒருவர் கட்டிக் கொண்டார்கள்.

"அப்பா! இவர்தான் பிரபல மந்திரவாதியின் புதல்வன் மால்கோஷ். என்னை மகாராணு பட்டணத்திலுள்ள மந்திரவாதி வேறு உருவத்துக்கு மாற்றியிருந்த பொழுது மறுபடியும் என்னை மனிதனுக்கினவர் மால்கோஷ்தான். அவர் எனக்கு இந்த உதவி செய்திராவிட்டால், என்னை இந்த உருவத்தில் இந்த ஜன்மத்தில் நீங்கள் கண்டிருக்க முடியாது" என்ருன்.

(தொடரும்)

## நான்காம் அத்தியாயம்

# சிருஷ்டிகர்த்தாவும் பிரசுரகர்த்தாவும்

மூத்துப் புலவர் முகத்தில் தோன்றிய சந்தேகக் குறியைக் கண்டதும், ''சேச்சே! அப்படி நினைப்பேனா! பர்மாவுக்குப் போனால்தான் சொல்லிவிட்டுப் போவீங்களே! ...... உம்......இப்போ எங்கே வந்தீங்க? உங்க புஸ்தகத்திலே ஒண்ணுகூட விற்கல்லே!'' என்றார் பிரசுரகர்த்தர் பரோபகாரம் பிள்ளை.

''மெதுவாக விற்கட்டும். அதைப் பற்றிக் கவலையில்லை......''

''அட! உமக்குக் கவலையில்லை, ஐயா! அந்தச் சனியனைச் செல்லு பிடிக்காமல் கட்டிக் காப்பாத்துகிற கவலையெல்லாம் எனக்கல்ல இருக்குது!''

''போகட்டும், பிள்ளைவாள், இப்ப நான் வந்த காரியம் என்னவென்றால், அவசரமாக ஒரு இரண்டு ரூபாய் தேவைப்படுகிறது....''

''அதுக்கு?''

''கொஞ்சம் ஒத்தாசை பண்ணுவீர்களென்றால்... ...''



# கான்ஸ்டபிள் கந்தசாமி

ஏ.கே.பட்டுசாமி



''சரிதான், காலையிலே இருந்து போணியே ஆகல்லேன்னு சஞ்சலப்பட்டுக்கிட்டிருக்கிறேன்! நீங்க என்னடான்னு இரண்டு ரூபாய்க்கு வந்துட்டீங்க!''

''ரொம்ப அவசரமில்லாவிட்டால் நான் உங்களைத் தொந்தரவே பண்ண மாட்டேன். இந்தத் தடவை....''

''அட சரிதானய்யா, நீரும் உம் புஸ்தகமும்! அந்த எளவைத் தும்பு தட்டி இங்கே இத்தனை காலம் வச்சிருந்ததுக்கு நீங்களல்ல எனக்கு வாடகை தரணும்!''

''கையிலிருந்த பணம் காணாமல் போய்விட்டது, பிள்ளைவாள். கொஞ்சம் தயவுபண்ணுங்க'' என்று மேலும் கெஞ்சினார் புலவர். ''நீங்க என் கணக்கில் கொடுத்தாலும் சரி, கடனாகக் கொடுத்தாலும் சரி!''

கடைக்காரருக்குக் கோபம் வந்தது.

''ஓய், பொல்லாத புலவரையா நீர்! உம் புஸ்தகத்தை என் அலமாரியிலே வாங்கி வைத்ததற்கு அபராதமா கேட்கறே! கடன் கொடுக்க இது என்ன வட்டிக் கடைன்னு நெனைச்சுக்கிட்டியா? மரியாதையா இப்போழுதே உங்க புஸ்தகத்தையெல்லாம் தூக்கிட்டுப்போய்யா, இடமாவது காலியாகும்!'' என்று எரிந்து விழுந்தார் நெஞ்சில் ஈரமே இல்லாத 'பரோபகாரம்' பிள்ளை.

புலவருக்குத் துக்கமும் அவமானமும் சேர்ந்து தொண்டையில் உருண்டையாக அடைத்துக் கொண்டது போலிருந்தது. தாயானவள் தன்னை யாராவது திட்டி விட்டால் கூடப் பொறுத்துக் கொள்வாள். ஆனால் தான் பெற்றெடுத்த செல்வத்தை யாராவது பேச்சுவாக்கில் 'உதவாக்கரை', 'மண்டு' என்று சாதாரணமாகப் பழித்து விட்டால்கூட அவளால் அதைச் சகித்துக் கொள்ளவே முடியாது. தன் பேச்சு செல்லக்கூடிய இடமானால் சண்டை பிடித்துத் தீர்த்து விடுவாள். அப்படிச் செய்யக் கூடிய நிலையில் அவள் இல்லையென்றால் தனிமையில் உட்கார்ந்து ஒரு குரல் அழுதாவது தன் துயரத்தைக் குறைத்துக் கொள்வாள். எழுத்தாளர்கள், கவிஞர்கள் ஆகியோரது நிலையும் இதேபோன்றதுதான். எத்தனைதான் உலகவியல் தெரிந்தவர்களாக இருந்த போதிலும் தங்களது சிருஷ்டிகளை யாராவது துச்சமாகப் பேசி விட்டார்களென்றால் அவர்களது மனம் புண்பட்டுப் போகும். வெளிக்குக்



காண்பித்துக் கொள்ளாவிடினும் உள்ளுக்குள் வேதனை அவர்களது உள்ளத்தை அறுத்துக் கொண்டேதான் இருக்கும். பிறருக்குச் சர்வ சாதாரணமாகத் தோன்றும் இவ்விஷயம் அவர்களுக்கு இரவெல்லாம் தூக்கத்தைக் கெடுத்து மனத்தை உழற்றிக்கொண்டேயிருக்கும்.

பரோபகாரம் பிள்ளையின் கடுஞ்சொற்கள் முத்துப் புலவருக்கு அளவற்ற துயரத்தைக் கொடுத்தன. தம்மைத் திட்டியதைவிடத் தமது அருமை நூல்களைச் 'சனியன்' 'இழவு' என்றெல்லாம் திட்டியதுதான் அவரது மனத்தை அறுத்தது. எனினும் அவரைப் போன்ற அவலநிலையிலுள்ளவர்கள் மனம் புழுங்கித் தவிப்பதைத் தவிர வேறு என்ன செய்துவிட முடியும்?

அவரது இருதயம் கனத்தது. இன்று யார் முகத்தில் விழித்தோமோ என்று வருந்திய வண்ணம் வந்த வழியே திரும்பி விரக்தியோடு நடந்தார்.

பொழுது அஸ்தமித்து இருட்டி விட்டது. வீதிகளில் மின்சார விளக்குகள் பளிச்சிட்டன. எப்போதுமே விளக்கு வைத்தவுடன் பார்வை மங்கி விடும் அவரது கண்களுக்கு எதிரே வரும் ஆசாமிகள் கூடத் தெளிவாகத் தெரிய வில்லை. ஒரு புல்லுக்காரியின் மீது மோதித் திட்டு வாங்கிக் கட்டிக் கொண்டு, ஓசைப்படாமல் வழுக்கிக் கொண்டே ஓடி வந்த ஒரு புத்தம் புதிய மோட்டார்காரில் அரைபடுவதிலிருந்து மயிரிழை தப்பி, தட்டுத் தடுமாறி நடந்து கொண்டேயிருந்தார்.

புத்தகக் கடைவீதியை விட்டுக் குறுக்குச் சந்தில் திரும்பும்போது, அவர் யாரை நினைத்துப் பயந்து கொண்டிருந்தாரோ, அந்தத் தூர்த் தேவதையின் குரல் கணீரென்று கேட்டது. சடக்கென்று ஓரமாக ஒதுங்கி மூச்சை அடக்கிக் கொண்டு நின்றார்.

"அந்தக் கிழம் எங்கே போய்த் தொலைஞ்சுதுன்னு தெரியலையே!.. ஏதாவது வண்டியிலே மாட்டிக்கிட்டிருக்குமோ, மருதம்மா...?" என்றது கண்ணம்மாளின் உரத்த குரல்.

"நல்லாச் சொன்னே? அதுவா வண்டியிலே மாட்டும்! நம்மைப் போல் பத்துப் பேரை மாட்ட வைக்கும்! நான் சொல்கிறேன்னு கோவிக்காதே, கண்ணம்மா! அந்த மனுசனுக்கு உன் கிட்டத் துளிக்கூடப் பயமில்லே. நம்ம இரண்டு பேரையும் இப்படி நடுச் சந்தியிலே அலையவைச்சுட்டு, கையிலே பணம் கிடைச்ச தெம்பில் எந்த ஓட்டலிலே உட்கார்ந்து மொக்குதோ...!" என்று குத்திக் கொடுத்தாள் மருதம்மாள்.

"ஆகட்டும், வீட்டுக்கு வரட்டும், சொல்லுகிறேன். இதுங்களையெல்லாம் வைக்கிற இடத்திலே வைக்கணும்!"

அதற்கு மேல் அவர்கள் பேசியது அவரது காதில் விழவில்லை. குரலொலி சிறிது சிறிதாக மங்கிக்கொண்டே போய் ஓய்ந்து விட்டதிலிருந்து தோழிகள் இருவரும் அவரைத் தாண்டிக் கொண்டு சுமார் முப்பதுகஜ தூரமாவது போய் விட்டிருப்பார்கள் என்பதை அவர் உணர்ந்து கொண்டார். பின்னும் சிறிது நேரம் வரையிலும் கூட அவர் பதுங்கி யிருந்த இடத்தை விட்டு வெளியே வர வில்லை. அங்கேயே நின்று நிலைமையை அலசிப் பார்த்தார்.



சாதாரண நாட்களிலேயே அவருக்கு வீட்டில் 'மதிப்பு' அதிகம். இன்றுசினிமாவுக்குப் போக முடியாமல் போனதுமட்டுமின்றிச் சிநேகிதியும் அவளும் தியேட்டர் வாசலில் அவரைத் தேடி அலைந்திருக்கிறார்கள். 'மகிஷாசுர மர்த்தனிக்கு' மருதம்மாள் தூபம் வேறு போட்டிருக்கிறாள். இந்த நிலையில் 'பணத்தைத் தொலைத்து விட்டேன்' என்று சொல்லிக் கொண்டு அவள் எதிரில் போய் நிற்க வேண்டியதுதான் தாமதம், இரை தேடி அலைந்து கொண்டிருக்கும் புலியின் எதிரே ஆட்டுக் குட்டி, நியாயம் கேட்கப் போன கதையாகத் தான் முடியும்.... அப்படியே பிடுங்கித் தின்று விடுவாள்.

"வரட்டும், சொல்கிறேன்!" என்று அவன் கறுவியவண்ணம் போனதை எண்ணியதும் அவருக்கு எலும்பு வரையில் குளிர் எடுத்தது.

அன்றிரவு வீட்டுக்குப் போவது என்பது நடவாத காரியம். சாப்பாட்டையும் தூக்கத்தையும் பற்றிக் கனவுகாணமுடியாது. மேற்கொண்டு என்ன செய்வது? அவளுக்கு எப்படிப் பதில் சொல்லிச் சமாளிப்பது என்று நன்றாக யோசித்து முடிவு செய்து கொண்டுதான் வீட்டுப் பக்கம் போக வேண்டும் என்ற தீர்மானத்துடன் அவர் வீடு இருந்த திசைக்கு எதிர்த் திசையை நோக்கி நடக்கலானார். எங்குபோகிறோம் என்பது அவருக்கு நிச்சயமில்லை.



* * *

கடிகாரம் போனதில் கந்தசாமிக்கு மிகுந்த வருத்தம். அவனைப் பற்றிப் பெருமையாக எண்ணிக் கொண்டிருந்த முத்தம்மாளிடம் இந்த வெட்கக் கேட்டை எப்படிச் சொல்லுவது? கணவனுடைய ஞாபகச் சின்னமாக அவள் போற்றிப் பாதுகாத்து வந்த அந்தப் பொருள் போய் விட்டது என்று அறிந்தால் அவள் உயிரே போய்விட்டது போல அலறிவிடுவாள். அவன் தயக்கத்தோடுதான் அன்று வீடு திரும்பினான்.

உள்ளே நுழைந்ததும் நுழையாததுமாக முத்தம்மாள் முகமலர்ச்சியோடு அவனை வரவேற்றாள்.

"தம்பி! மாமன்கிட்டே இருந்து கடுதாசி வந்திருக்குது. அவரும் முனியம்மாவும் இங்கே வருகிறார்களாம்!" என்று கூறினாள்.

இச்செய்தியைக் கேட்டதும் அவனது முகம் சுருங்கியது. மாமனிடத்தில் அவனுக்கு விரோதமில்லை. ஆனால் முனியம்மாளைத்தான் அவனுக்குக் கட்டோடு பிடிக்கவில்லை. இளி மூக்கும் அசட்டுப் பேச்சும் அநாகரிகமுமாக இருந்த அவளை அவன் சாதாரண ஆசாமியாக இருந்த சமயத்தில் கட்டிக் கொள்ளத் துடித்தான். ஆனால் இப்போது போலீஸ் வீரனாகத் திகழும் அவனது அந்தஸ்துக்கு முனியம்மாள் ஏற்றவளாகப் படவில்லை.

உடையைக் கழற்றிக் கொண்டே, "எதற்கு வருகிறார்களாம்?" என்று கேட்டான்.

"என்னடா தம்பி இப்படிக்கேட்கிறாயே! நான்தான் கல்யாண விஷயமாகப் பேசி முடிவு பண்ணலாம்னு வரச்சொல்லி எழுதியிருந்தேன்!"

"யாரைக் கேட்டுக்கிட்டு எழுதினே!" என்று சற்றுக் கடுமையாகவே கேட்டான் கந்தசாமி.

முத்தம்மாளுக்குத் தம்பியின் அதிகார தோரணையான பேச்சைக் கேட்டதும் 'சொரேர்' என்றது.

"ஏண்டா! உன்னைக் கேட்டுக்கிட்டுத் தான் ஒவ்வொரு காரியமும் செய்யணுமோ! பெரிய கவர்னர்னு எண்ணம் போலே இருக்குது! உறவு விட்டுப் போகாமல் இருக்கணும்னு பெரியவங்க சொல்றபடி தான் கேட்கணும்!" என்று அழுத்தம் திருத்தமாகக் கூறினாள் அவள்.

"நம்ப அந்தஸ்துக்குப் போயும் போயும்..."

"அந்தஸ்து வேறே வைச்சிருக்குதா நமக்கு: அன்னைக்குச் சூரன் மாதிரி போய் என் ஜன்ம விரோதி காலிலே தடால்னு வழுக்கி விழுந்து வச்சியே! அப்பவே என் அந்தஸ்து மண்ணோடே மண்ணாப் போச்சே!"

கந்தசாமியினால் இந்தக் கடுசரத்தைத் தாங்கிக் கொள்ள முடியவில்லை. 'வீட்டிலுமா இந்த அவமானம்? அக்காளா இப்படிப் பேசுகிறாள்?' என்று மலைத்தான். வாய் திறவாமல் உத்தியோக உடுப்பைக் கழற்றி மடித்து வைத்தான்.

மௌனமாகப் பார்த்துக் கொண்டிருந்த முத்தம்மாள், "கடிகாரத்தை

அவ்வளவு சிக்கனம்! ஒரு முறை தேய்த்தால்

# கால்கேட் டெண்டல் கிரீம்

## 85% கிருமிகளை ஒழிக்கிறது

சொத்தையும் மற்றும் துர்நாற்றமும் ஏற்படுத்தும் கிருமிகள் வரை




மிகச் சிறந்த பலனுக்கு எப்பொழுதும் உபயோகியுங்கள்!

## கால்கேட் டூத் பிரஷ்

---



# நீண்ட, அடர்ந்த ஒளிக்கூந்தலுக்கு

இளமையின் ஒளியும் அற்புத ஜ்வலிப்பும் பெற கூந்தலுக்கு கால்கேட் பெர்பியூம்டு காஸ்டர் ஹேர் ஆயிலே தடவுங்கள். கூந்தலின் இயற்கை அழகை அது எடுத்துக் காட்டி எல்லோரையும் பிரமிக்கச் செய்யும்.



எக்கானமி சைஸை வாங்கி பணத்தை மிச்சப் படுத்துக.

# கால்கேட்

## பெர்பியூம்டு காஸ்டர் ஹேர் ஆயில்

எங்கேவைச்சே? சட்டையிலேயா வைச்சு மடிச்சுட்டே?'' என்று கேட்கவும் அவனுக்குப் பகீரென்றது. ஒரு சச்சரவுபோய் இன்னொன்று வந்துவிடப் போகிறதே என்று பயந்தான். பதில் பேசாமல் ஏதோ ஒரு தீர்மானத்துக்கு வந்தவன் போல் வேறு ஒரு சட்டையை எடுத்து மாட்டிக் கொண்டு கிளம்பினான்.

''எங்கேடா தம்பி சாப்பிடாமல்கூடப் புறப்பட்டுவிட்டே? நல்லதைச் சொன்னால் அதுக்குப் போய்...''

மேற்கொண்டு அவள் கூறியவற்றைக் கேட்க அவன் அங்கே இல்லை. வேகமாக நடந்து ஒரு ஹோட்டலில் வயிற்றை நிரப்பிக் கொண்டு நேராக ராவண கான சபாவை அடைந்தான்.

## ஐந்தாம் அத்தியாயம்

# சங்கீத கோவலன்

வெளியில் பாண்டு வாத்தியம் முழங்கிக் கொண்டிருந்தது. இரவு வீட்டுக்குப் போகாமலிருந்தால் ஒருகால் முத்தம்மாள் வழிக்கு வந்து விடலாம் என்று தோன்றியது. ஒரு பெஞ்சு டிக்கட்டை வாங்கிக் கொண்டு அவன் கொட்டகையினுள் நுழைவதற்கும் நாடகம் ஆரம்பிப்பதற்கும் சரியாக இருந்தது.

முதலில் கதையின்போக்கு அவனுக்குச் சுவாரஸ்யப் படவில்லை. ஆனால் கோவலனின் விவாகக் காட்சியிலிருந்து நாடகம் களை கட்டி விட்டதாக நினைத்தான்.

மாதவியின் அழகைக் கண்டு நாடக மேடையிலிருந்த கோவலன் மாத்திரம் மயங்கவில்லை. கந்தசாமிகூடச் சொக்கித்தான் போனான். கையில் மாலையொன்றைத் தாங்கி ஒய்யாரமாக அபிநயம் பிடித்து அவள் சுழன்று சுழன்று ஆடிய போது அவனுக்கு அந்தக் கொட்டகையே சுழல்வது போலிருந்தது. அவளது கண்களின் சுழற்சியோடு அவனது இருதயமும் சுழன்றது. மார்பில் கையை வைத்து அழுத்திக் கொண்டான்.

கையிலிருந்த மாலை யார் கழுத்தில் போய் விழுகிறதோ அந்த ஆசாமியைத் தனது மணவாளனாக வரிக்கப் போவதாக வாக்குறுதி செய்து விட்டு மாலையைச் சுழற்றிக் கொண்டே ஹார்மோனியத்தோடு சேர்ந்து பாடத் தொடங்கினாள் அவள்.

''மாலை யொன்றைக் கையில்
கொண்டு சுழற்றியே
மண்டபத்தில் நின்று வீசிடுவேன் - அது
வந்து கழுத்தில் விழுந்தவனை - மண
வாளனாகக் கொண்டு ஏகிடுவேன்!''

நாடகம் பார்க்கிறோமென்ற நினைவே மறந்து விட்டது அவனுக்கு. அந்த மாலை தன் கழுத்தில் வந்து விழுந்துவிடக் கூடாதா என்று கூடச் சபலம் தட்டியது. ஆனால் அந்தப் பொல்லாத மாலை சொல்லி வைத்தாற்போல் கோவலனின் கழுத்தில்தான் போய் விழுந்தது.

''பொம்பளை என்றால் இப்படியல்லவா இருக்கணும்!'' என்று தன்னை மறந்த நிலையில் அவன் கூறவும் அருகிலிருந்தவர்களெல்லோரும் அவனை ஒரு தினுசாகப் பார்த்தார்கள்.

''அந்த அம்மா யாருங்க?'' என்று தன் பக்கத்திலிருந்தவரைக் கேட்டான்.

''எல்லாம் 'அமெச்சூர்' நடிகருங்க, ஸார்!'' என்றார் அந்த மனிதர்.

கந்தசாமியின் பள்ளி வாழ்க்கையில் 'அமெச்சூர்' என்ற வார்த்தை கற்பிக்கப் படவில்லை. 'திருச்சூர்' 'திருப்பாச்சூர்' என்பதைப் போல் 'அமெச்சூர்' என்பதும் ஒரு ஊரின் பெயராகத்தான் இருக்கும் என்று எண்ணிக் கொண்டான்.

''எங்கே இருக்குதுங்க அமெச்சூரு?'' என்று அவன் மீண்டும்கேட்கவும் அருகில் இருந்த அத்தனைபேரும் கொல்லென்று சிரித்து விட்டனர்.

மேடையில் கோவலன் மாதவியின் வீட்டுக்கு வந்து சேர்ந்து விட்டான். அவளுக்குப் பொன்னும் மணியுமாக வாரி வழங்கினான். கோவலன் செட்டியார் கொடுத்த 'நெக்லேஸ்' உண்மையிலேயே வைரம்தான் என்றனர் சிலர். மற்றும் சிலர் வெறும் கண்ணாடிக் கற்கள் என்றனர். முதலில் பேசியவர் ''இல்லை ஸார், அமெச்சூர் நடிகர்களானதால் நிஜ வைரமாலையையே இரவல் வாங்கிக் கொண்டு வந்து விட்டனர்'' என்றார்.

எது எப்படியாயினும் ஒளி வீசிய அந்த ஆபரணம் மாதவியின் அழகைப் பன்மடங்கு அதிகரித்துக் காட்டியது.

சிறிது நேரம் கழித்து மாதவி வீட்டுக் காட்சி மாறியது. கண்ணகி இறந்து விட்டாளென்ற பொய்ச் செய்தியைக் கேள்வியுற்ற கோவலன் அதை உண்மை என்று நம்பி ஒப்பாரி வைக்கத் தொடங்கினான். கந்தசாமிக்கு அதைக் காணச் சகிக்கவில்லை. ஒரு 'சிங்கிள் சாயா' வாவது போட்டு விட்டு வரலாம் என்று நினைத்து வெளியே எழுந்து வந்தான்.

அப்போது சுமார் ஒருமணியிருக்கும். சுக்ல பக்ஷத்துச் சந்திரன் மறைந்து சிறிது நேரந்தானயிற்று. வானத்தில் இறைந்து

கிடந்த நட்சத்திரங்கள் மாதவியின் ஆபரணங்களிலிருந்த வைரங்களைப் போல் சுடர் விட்டுக் கொண்டிருந்தன. வீதியில் ஜன நடமாட்டமேயில்லை. அவனைத் தவிர கொட்டகையை விட்டு யாருமே வெளிவரவில்லை.

டீக் கடை கூட மூடப்பட்டு விட்டது. என்ன செய்வதென்று தோன்றாமல் கொட்டாவி விட்டுக் கொண்டு சுவரோரமாகக் கொஞ்ச தூரம் நடந்தான். அவன் நின்ற இடம் தியேட்டருக்குப் பின்புறமாக இருந்தது. அங்கே தன்னந்தனியாக ஒரு பழையமாடல் மோட்டார் கார் நிறுத்தப் பட்டிருப்பதைக் கவனித்தான். டிரைவரைக்கூடக் காணவில்லை. இதே சமயம் தியேட்டரின் பின்புறக் கதவு 'கிரீச்' என்ற சத்தத்துடன் வேகமாகத் திறந்தது.



கந்தசாமி பீடியைச் சடக்கென்று அணைத்து விட்டுச் சத்தம் வந்த திசையை நோக்கித் திரும்பினான். கொஞ்சமாகத் திறந்த கதவின் வழியே தலையில் கறுப்புத் துணியால் முக்காடிட்ட ஒரு உருவம் வெளியே வந்தது. அவன் உஷாராக நின்று கவனித்தான். வந்தது ஒரு பெண் பிள்ளை என்று நிச்சயமாகத் தெரிந்தது. பட்டுச் சேலை சலசலத்தது. அவளும் அவனைக் கவனித்து விட்டாள்.

''டிரைவர்!'' என்று சன்னமான குரலில் கூப்பிட்டாள் அந்தப் பெண்.

கந்தசாமிக்கு மயிர்க் கூச்செடுத்தது. சந்தேகமேயில்லை. அது அவன் மனத்தைக் கவர்ந்த மாதவியின் குரல் தான். அவனைத்தான் அவள் டிரைவர் என்று நினைத்துக் கொண்டாள் போலும்!

''மாதவி அம்மாவுங்களா! வாங்க, வண்டியிலே உட்காருங்க. நான் போய் டிரைவரைத் தேடிக்கிட்டு வருகிறேன்'' என்று கூறிக் கொண்டே ஓடிப் போய்க் காரின் கதவைத் திறந்தான். அவள் முன் புறத்து ஆசனத்தில் உட்கார்ந்து கொண்டு ''ரொம்ப தாங்க்ஸ், நீங்க டிரைவரைக் கூப்பிட வேண்டாம். கொஞ்சம் 'ஸ்டார்டிங் ஹாண்டிலை' மாத்திரம்..'' என்று இழுத்தாள். கந்தசாமிக்குத் தலை கால் புரியவில்லை.

''ஹாண்டில் போடணுமா, இதோ ரெடி!'' என்று கூறிக் கொண்டே முன் புறத்தில் தொங்கிக் கொண்டிருந்த இரும்புப் பிடியைச் சுழற்றினான். என்ஜின் அலறத் தொடங்கியது. அவன் பல்லைக் காட்டிக் கொண்டே ஒதுங்கி நின்றான். வண்டி 'விர்' ரென்று கிளம்பி விட்டது.

வண்டி போனபிறகு தான் அவனுக்குத் தோன்றியது. 'சே, என்ன முட்டாள் தனம்! விலாசத்தைக் கூடக் கேட்டு வைத்துக் கொள்ளாமல் போனேனே' என்று தன்னையே கடிந்து கொண்டான் அவன். மோட்டார் வண்டி புறப்பட்டுப் போய் ஐந்து நிமிஷங்கள் ஆகியிருக்கும். தியேட்டரே அல்லோல கல்லோலப் பட்டு விட்டது. நாடகம் திடீரென்று நின்றது. ஜனங்கள் வெளியே வந்து கும்பல் கும்பலாக நின்று பேசலாயினர். போலீஸ் லாரி ஒன்று 'பூம் பூம்' என்று ஊதிக்கொண்டு வந்து நின்றது. கந்தசாமிக்கு விஷயம் புரியவில்லை. கூட்டத்தோடு கூட்டமாக நின்று கொண்டு அவர்கள் பேசுவதைக் கவனித்தான்.

''மாதவி வேஷம் போட்ட ஆசாமி வைரமாலையோடு கம்பி நீட்டி விட்டான்'' என்றார் ஒருவர்.

கந்தசாமிக்குத் தூக்கி வாரிப் போட்டது. ''என்னங்க நம்ப மாதவி அம்மாளா?''

கும்பலில் இருந்த அத்தனை பேரும் அவனைப் பார்த்துச் சிரித்தனர்.

''மாதவி வேஷம் போட்டது ஆண் பிள்ளையாச்சே ஐயா!'' என்றார் ஒருவர்.

''ஆண் பிள்ளையா?''

''ஆமாம், யாரோ கடலூர் ஆசாமி!''

''கடலூரரா? அமெச்சூருன்னு யாரோ சொன்னாங்களே!''

அவன் கேள்விக்கு எவரும் பதில் கூறவில்லை. கடைசியில் வேஷம் போட்டது ஆண்பிள்ளை என்று அறிந்ததும், அவனுக்குக் கோபம் கோபமாக வந்தது.

போலீஸ் 'வானில்' இன்ஸ்பெக்டர் அளகிரிசாமியும் 'ஏட்டு'ப்பிள்ளையும் இருப்பதைக் கண்டான். அவர்கள் கண்ணில் படுவதற்கு முன் அங்கிருந்து நழுவினான் கந்தசாமி. (தொடரும்)

# தரத்திற்கும் உறுதிக்கும் நிகரற்றது

# ஹத்திபாயின்




## ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் பாத்திரங்கள்

எப்பொழுதும் பிரகாசத்துடன் நீடித்து உழைப்பவை

* *

## ஹத்திபாய் துளஸிதாஸ் & ஸன்ஸ்

122, கள்ஸரா சால், பம்பாய் 2.



# படித்துப் பாருங்கள்

## எரிமலை

பிரான்ஸ் தேசத்தில் முடியாட்சியை எதிர்த்துக் குடிகள் புரட்சி செய்தனர். இந்தப் புரட்சியின் எதிரொலி பிரிட்டனில் கேட்டது. "கார்லைல்" என்ற பேராசிரியர் "பிரஞ்சுப் புரட்சி" என்ற நூலை எழுதினார். அது பிரிட்டனில் பெரும் புரட்சியை உண்டாக்கி விட்டது; சிந்தனையைக் கிளறி விட்டது! பலத்த வாதப் பிரதிவாதங்கள் நிகழ்ந்தன. இதைப் பற்றி ஆசிரியர் கார்லைல் தமது புத்தகமே ஒரு மாதிரியான "பிரஞ்சுப் புரட்சி!" என்றார். இதன் பொருள் பலருக்குச் சரியாக விளங்காமலும் இருக்கலாம். வீர ஸாவர்க்கர் எழுதிய 1857 படித்தவர்கள் இதன் உண்மையைச் சரியாகப் புரிந்து கொள்வார்கள்.

பிரிட்டிஷாராலும், பிரிட்டிஷ் சரித்திர ஆசிரியர்களாலும் "சிப்பாய்க் கலகம்" என்று கருதப்பட்ட வரலாற்றை வீர ஸாவர்க்கர் எழுதினார். "அது சாதாரணப் புரட்சியல்ல; பிரிட்டிஷ் ஆதிக்கத்தை எதிர்த்து நடத்தப் பட்ட சுதந்திரப் புரட்சி" என்று எழுதினார்.

அதைப் படித்தவர்கள் வீர சுதந்திரம் பெற்று, வீராவேசம் கொண்டு எரிமலைபோல் துள்ளி எழுந்தனர். புத்தகம் முழுதுமே எரிமலையாகக் கனல் கக்குகிறது! அதனாலேயே இதை மொழிபெயர்த்த ஜெயமணி ஸா. சுப்பிரமணியம் அவர்கள் புத்தகத்துக்கே "எரிமலை" என்று பெயர் சூட்டினார். அன்றைய பிரிட்டிஷ் அரசாங்கத்தார், இந்தப் புத்தகத்தை வெளியில் விட்டு வைத்தால் பாரத தேசம் முழுதும் எரிமலையாகக் கொழுந்து விட்டுக் கனல் கக்க ஆரம்பித்து விடும் என்று பயந்து, அதை அப்படியே பகிஷ்கரித்து வைத்திருந்தார்கள். பாரத தேசம் சுதந்திரம் அடைந்த பின்னரே, இப்புத்தகத்துக்கும் விடுதலை கிடைத்தது!

தமிழ் நாட்டில் மிக நல்ல முறையில் விற்ற புத்தகங்களில் ஒன்று எரிமலை. ஆனால் அதை இதுவரை யாரும் நல்ல முறையில் அச்சிடவில்லை. இப்பொழுது கலைமகள் காரியாலயத்தார் நல்ல தாளில் நல்ல முறையில் எழுத்துப் பிழைகளின்றி அச்சிட்டு உதவியிருக்கிறார்கள். சுதந்திரப் போரின் நூற்றாண்டு வைபவத்தையொட்டி வெளியாகியிருக்கிறது இப்புத்தகம்.

இப் புத்தகம் சோர்ந்து கிடக்கும் பாரத நாட்டைத் தட்டி எழுப்புவதற்காக எழுதப் பட்ட நூல். பாரத மக்களிடையே சுதந்திரக் கனலை மூட்டிவிட எழுதப்பட்ட நூல்; ஆனால் பாரத நாடு, சுதந்திரம் பெற்றவுடன், இந்தப் புத்தகத்தின் லட்சியம் ஈடேறி விட்டது. இதன் பயன் கிடைத்து விட்டது. அதனால் இது அவசியமில்லை என்று சிலர் நினைக்கலாம். ஆனால் இப்பொழுது தான் இது முன்னைவிட மிக அவசியமான நூல் என்று கருத வேண்டும்;

இது வரை இது ஒரு பயன் கருதி எழுதப் பட்ட நூலாகக் கருதப்பட்டு, படிக்கப் பட்டு வந்தது; இப்பொழுது இது ஒரு கலைப் பொருளாகி விட்டது! சரித்திரத்தை அற்புத இலக்கியமாகக் கொடுக்கப்பட்டுள்ள நூல் ஆகி விட்டது!

பாரத நாட்டில் பெரும்பான்மையோருக்குச் சரித்திரம் என்றாலே வேப்பங்காய்தான்! வறட்டுத் தேதிகளையும் உணர்ச்சியற்ற நிகழ்ச்சிகளையும் சரித்திரம் என்று பள்ளியிலும் கல்லூரிகளிலும் படித்ததால் பலருக்கு, சரித்திரம் எப்படி இலக்கியமாகவும் கலைப் பொருளாகவும் முடியும் என்ற ஐயம் எழலாம்!

ஆனால் சரித்திரத்தை அற்புத இலக்கியங்களாக, கலைப் பொருளாக வடித்துத் தர மேனாட்டில் பலர் தங்கள் வாழ் நாளையே அர்ப்பணித்திருக்கிறார்கள். அப்படித் தமது வாழ்வின் ஒரே குறிக்கோளாகக் கொண்டு, கிப்பன் என்ற ஆசிரியர், "ரோமசாம்ராஜ்யத்தின் வீழ்ச்சியும், அதன் தேய்வும்" என்று அற்புதமான சரித்திர நூல் எழுதியிருக்கிறார். மெக்காலே பிரிட்டிஷ் சரித்திரத்தைப் பல புத்தகங்கள் கொண்ட நூலாக இயற்றியிருக்கிறார். அதே போல் இன்று உலக சரித்திரத்தை முப்பது புத்தகங்கள் கொண்ட நூலாக இன்று நம்மிடையிருக்கும் டோயன்பீ என்ற ஆசிரியர் எழுதியிருக்கிறார். அதை உலக அறிஞர்கள் எல்லாம் அரிய நூல் என்று பாராட்டிப் போற்றுகிறார்கள்.

ஆனால் நம் நாட்டில் சரியான சரித்திரமே கிடையாது. அசோகன், இராஜேந்திரன், ராஜராஜன், ஹர்ஷன் போன்ற பேர் அரசர்களைப் பற்றியும், அவர் காலத்திய மக்களைப் பற்றியும் சரியான சரித்திரச் சான்றுகளே கிடையாது. இவற்றை யெல்லாம் தேடித் தொகுத்து ரஸமாக, உணர்ச்சியும் வேகமும் ஊட்டக்கூடிய கலைப் பொக்கிஷமாகச் சரித்திர நூலைத் தருவதற்குப் பல ஆண்டுகள் பிடிக்கும். இத்துறையில் பாடுபடுபவர்களுக்கெல்லாம், எரிமலை நல்ல முன் மாதிரியாக அமைகிறது!

"எரிமலை" யுள்ளவரை 1857 ம் ஆண்டுப் புரட்சியில் ஈடுபட்டு மகத்தான தியாகம் புரிந்த ஜான்ஸி ராணியையும் தாதியா தோபேயையும் நானாசாஹிப்பையும் யாரும் மறந்துவிட முடியாது. இந்த வீர சரித்திரத்தை வீரத் தமிழில் மொழிபெயர்த்திருக்கிறார் ஜெயமணி ஸா. சுப்பிரமண்யம் அவர்கள். அவ்வப்போது உள்ளம் சோர்ந்து போகும் போது, இந்தப் புத்தகத்தை ஒரு முறை படித்தால் ஒரு புது வகை சுறுசுறுப்பும் வீரமும் ஏற்படும். பாரத நாட்டின் சுதந்திரத்துக்காக எத்தனை மகத்தான தியாகங்கள் புரிய வேண்டியிருந்தது என்பதைப் படிக்கும்போது, சுதந்திரத்தின் மாண்பை மீண்டும் உணர்கிறோம்.

[பிரசுரம்: கலைமகள் காரியாலயம், சென்னை—4. விலை: ரூ. 6] —எஸ். வி. எஸ்.

# எந்தப்பாவமோ!

**டி**ணி மாலே நான்கை நெருங்கிக் கொண்டிருந்தது. நகரின் பாங்க் கட்டடத்தில் அன்றையக் கணக்கை முடிக்கும் வேலை மும்முரமாக நடந்து கொண்டிருந்தது. அக்கௌண்டண்ட் வைத்தியநாதன் பாங்க் ஏஜண்ட் சீனிவாசனிடம் ஏதோ ரகசியமாகச் சொல்லிக் கொண்டிருந்தார். அக்கௌண்டெண்ட் சொல்லி முடித்ததும் அவர் தம் இடத்தை விட்டு எழுந்து மெதுவாகக் காசாளரின் இருப்பிடத்துக்கு வந்தார். காசாளர் கோபாலன் பணத்தை எண்ணும் மும்முரத்தில் அவரைக் கவனிக்கவில்லை.

''என்ன, கோபால்! அகப்பட்டதா? பணம் கொடுத்தவர்களிடம் எல்லாம் போன் செய்து கேட்டீரா? சும்மா இருக்கும் பணத்தையே எண்ணிக் கொண்டிருந்தால் அகப்படுமா?''

''இதோ! போகிறேன் சார். ஏதாவது கட்டில் இருக்குமா என்று பார்த்தேன். ஒரு நோட்டுத்தானே!...ம்...''

காசாளர் கோபாலன், யார் யாருக்கெல்லாமோ போன் செய்தார். இதற்குள் விஷயம் சிப்பந்திகளுக்குள் பரவிவிட்டது.

நீண்ட பெருமூச்சு ஒன்றை விட்டபடி ஏஜண்ட் சீனிவாசபிள்ளை கோபாலன் பக்கம் திரும்பினார். கோபாலனின் முகம் கலவரம் அடைந்திருந்தது. என்னென்னவோ சிந்தனை. வறுமை தாண்டவமாடும் அந்த வேளையில் ஒருபயங்கரச் சோதனை.' எந்தப்பாவியோ வாங்கிக் கொண்டு போய் விட்டான். அதனால் ஏற்படப் போகும் விளைவு! அப்பப்பா! எத்தனை பயங்கரம்! வரும் வரும்படியில் மண். கோபாலன் மனக் கண் முன் அவர் மனைவி கமலம் அவனுடைய கட்டிலோ காட்சியளித்தாள். கமலம் அவரிடம் எத்தனையோ முறை சொல்லுவாள். ''நீங்கள் எனக்காக ஏன் வீணுக் கவலைப்படுகிறீர்கள்? உங்கள் கொஞ்ச சம்பாத்தியத்தையும் ஏன் எனக்காகச் செலவு செய்கிறீர்கள்? வாழ்க்கையில் எல்லாப் பெண்களும் ஒரு துணைவரைத்தான் அடைவார்கள். ஆனால் எனக்கோ ஒரு துணைவரோடு ஒரு கட்டிலும் கிடைத்து விட்டது. நான் இப்படியே சீக்கிரம் போய்ச் சேர்ந்தால்தான் உங்களுக்கு நிம்மதி.' கோபாலன் செவிகளிலே அவை மீண்டும் ஒலித்தன. நூறு ரூபாய் நோட்டுக்களை வெறிச்சிட்டுப் பார்த்தவண்ணம் நின்று கொண்டிருந்தார்.

''என்ன கோபாலன்? நீங்கள் என்ன செய்யப் போகிறீர்கள்?''

கோபாலன் மௌனமாகவே நின்று கொண்டிருந்தார். திகில், பீதி, வியப்பு எல்லா உணர்ச்சிகளும் அவர் முகத்தில் தோன்றித் தோன்றி மறைந்தன. கோபாலனை ஏஜண்ட் தம் அறைக்கு அழைத்துக்கொண்டு சென்றார். சீனிவாச பிள்ளை தம் டிராயரைத் திறந்து ஒரு நூறு ரூபாய் நோட்டை எடுத்து மேஜையின் மேல் வைத்தார். கோபாலன் மௌனமாகவே இருந்தான். ''இந்தாருங்கள். இதைப் போட்டுக் கணக்கைச் சரி செய்யுங்கள். கொஞ்சம் ஜாக்கிரதையாக இருக்கவேண்டாமா! உம்முடைய சம்பளமே நூறு ரூபாய் இல்லையே! உம்மால் எவ்வளவு எவ்வளவு ரூபாயாகத் திருப்பித் தரமுடியுமோ அப்படித் தாரும். இனிமேலாவது ஜாக்கிரதையாக இரும்....ம்...போய்...''

''மிகுந்த நன்றி, ஸார்!'' கோபாலன் கண்களில் நீர் சுரக்கப் போய் விட்டார்.

அன்று பாங்கில் ஏகக் கூட்டம். பாங்க் அலுவல்கள் முடியப்போகும் நேரத்தில் வெகு அவசரமாக உள்ளே நுழைந்தான் ஒரு நாட்டுப்புற ஆசாமி.

''ஸார்...இதைமட்டும் வாங்கிக்க ஸார்...''

தலையை நிமிர்ந்த கோபாலன், ''அட வீராசாமியா? உனக்கில்லாததா, அப்பா!'' என்று பணத்தை எண்ண ஆரம்பித்தார். பணத்தை எண்ணும்போதே அவன் தந்த ரசீதில் எவ்வளவு ரூபாய் எழுதியிருக்கிறது என்று பார்த்தார். மூவாயிரத்து ஏழு ரூபாய் எனப் படித்தவர், ஏழு ரூபாய் போக முப்பத்தொரு நோட்டுக்கள் தம் விரலுக்கடியில் ஊசலாடுகின்றன என்பதை உணர வெகு நேரமாகவில்லை. ஒருதரம் எண்ணினார். இரண்டு தரம் எண்ணிக் கொண்டேயிருந்தார்.

வீராசாமி பொறுமையிழந்தவனும், ''சார்! குறையுதா...சரியா முப்பது நோட்டு இருக்குமுங்களே'' என்றான்.

தலையை நிமிர்ந்தால் தன் உணர்ச்சி வெளிப்பட்டு விடுமோ என்று கோபாலன் தலையைக் குனிந்தவண்ணமே சிந்தனையிலாழ்ந்தார். சட்டென்று தலையை நிமிர்த்து, ''இல்லை வீராசாமி! இரண்டு நாட்களுக்கு முன் எந்தப் பாவியோ நூறு ரூபாயை அடித்துக் கொண்டு போய் விட்டான். அதிலிருந்து...'' கோபாலனால் அதற்கு மேல் பேச முடியவில்லை. ரசீதிலே அடித்துச் சேவகனிடம் கொடுத்து அனுப்பினார். வீராசாமியும் அவனுக்குப் பின்னால் போய் விட்டான்.

வீராசாமியிடமிருந்து வாங்கிய பணத்தைக் கோபாலன் டிராயரில் போடாமல் மேஜையிலேயே வைத்திருந்தார். இப்போது அதை எடுத்து ஒரு முறை எண்ணினார். சந்தேகமேயில்லை. ஒரு நோட்டு கூட இருந்தது. அவர் மனம் குழம்ப ஆரம்பித்தது.

அன்று ஒரு நோட்டு போய்விட்டது. இன்று ஒரு நோட்டு வந்துள்ளது. விடுவானேன்?

நாம் பதி கொடுத்ததைத் தானே இப்பொழுதுதிரும்பவும் அடைகிறோம்?

"ஐயோ! வீராசாமியையா ஏமாற்றுவது? எவ்விடமோ பதி கொடுத்தோம் என்பதற்காக, ஏமாந்தோம் என்பதற்காக ஒன்றுமறியாத வீராசாமியின் பணத்தையா எடுத்துக் கொள்வது. சே! சே! கூடாது..." வீராசாமி போய்விட்டாரா என்று கோபாலன் ஒரு தரம் எழுந்து பார்த்தான். இல்லை. வீராசாமி போகாமல் லெட்ஜர் கிளார்க்குடன் பேசிக் கொண்டிருந்தான்.

வீராசாமி ஒரு மாட்டுப் பண்ணைக்கு முதலாளி. சிறுகச் சிறுக அவன் விருத்தியானவன். நாலு மாடுகளை வைத்து ஆரம்பித்து இன்று அவன் நூறு மாடுகளைக் கொண்ட பண்ணைக்கு முதலாளி. பாங்கில் அவனை அறிமுகப்படுத்தியதே கோபாலன் தான். அவன் வீட்டுக்கு எப்போதோ இருந்து பால் விடுகிறவன் அவன். அதனால் வீராசாமிக்கு, கோபாலன் மேல் தனி மதிப்பு. கோபாலன் மன உளைச்சல் இன்னும் அதிகமாயிற்று.

"கோபாலா... வேண்டாம். வேண்டாம். வீராசாமியைக் கூப்பிட்டுக் கொடுத்து விடு. அதில் கிடைக்கும் பெருந்தன்மை, மதிப்பு, கௌரவம், இந்த நூறு ரூபாயைவிடப் பன்மடங்கு உயர்ந்தவை. ரூபாய்நோட்டு கிடைக்கும். ஆனால், கௌரவம், மதிப்பு ஒரு தடவை இழந்து விட்டால் கிடைக்காது."

"எதற்காகக் கௌரவத்தை இழக்க வேண்டும்! ரூபாயிரம் கொடுத்ததாக ரசீது. ஏன்

# 100

ரா. சோமநாதன்

அவனே சொல்கிறானே! இந்த விஷயம் வெளியில் வரச் சாத்தியமேயில்லை. வந்தாலும் நான் சொல்லுவதைத்தான் எல்லோரும் நம்புவார்கள். "அவனே மூப்பது நோட்டு இருக்குங்க' என்று சொன்னதை இல்லை என்பானா? விஷயம் வெளியில் வந்தால்தானே கௌரவம், மதிப்பு இவற்றைப் பற்றிக் கவலைப்பட வேண்டும்? பேசாமல்நோட்டை எடுத்துக்கொள்..."

"வேண்டாம். மனச்சாட்சிக்கு விரோதமாக இந்தப் பணம் எதற்கு?"

'கோபாலன் தம் ஆசனத்தில் எழுந்து நின்று கொண்டார்.

"கோபாலா! உன் நிலைமை எண்ணிப் பார்: பெரிய மனச்சாட்சி தத்துவம் பேசுகிறாயே, உன்னிடம் ஏமாற்றிப் பணத்தை வாங்கிக் கொண்டுபோன அந்த மனிதனுக்கு இருந்ததா அந்த மனச்சாட்சி! தேவை வரும்போது சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொள்ளத்தான் வேண்டும். ஏழுண்டுக்கு நீ கொடுக்க வேண்டிய பணத்துக்கு எங்கே போவாய்? வீராசாமியாவது பணக்காரன். நீ எங்கே போவாய்? சம்பளத்துக்கும் மிஞ்சிய உன் கடன் நிலைமை எண்ணிப்பார். யோக்யமாய் உள்ளவர்கள் இந்தக் காலத்தில் பிழைக்க முடியாது. சமயம் போல் மாறுவதுதான் சாமர்த்தியம். இது ஆண்டவனின் கருணை தான். இல்லாவிடில் நீ பணத்தைக் கோட்டை விட்ட இரண்டாம் நாளே இப்படி ஒரு சந்தர்ப்பம் வருமா! ம்... யோசிக்காதே! இதில் தவறு ஒன்றுமில்லை..."



"கோபாலா! பணத்தை எடுத்துக் கொள்ளத்தான் போகிறாயா? வறுமை உன் கண்களை மறைக்கிறது. விஷயம் வெளியே வராது; வாஸ்தவம். உன் மனம் உன்னைச் சும்மா விடுமா? வீராசாமியைப் பார்க்கும் போது எல்லாம் குட்டிக் கொல்லாதா? அவனிடம் உன்னால் நிமிர்ந்து பேசமுடியுமா? வறுமைக்காக நேர்மையை விடுவதா? போ. வீராசாமியிடம் கொடுத்து விடு. அப்போது அவன் உன்னை எவ்வளவு மனதார வாழ்த்துவான். அதை எண்ணிப் பார். அந்த ஆனந்தம், செல்வம், பணத்தினால் கிடைக்கக் கூடியதல்ல. நீ நேர்மையுடையவன் என்ற எண்ணத்தினால் தான் இப் பாங்கியின் காசாளராக அமர்த்தப்பட்டிருக்கிறாய். எண்ணற்ற நோட்டுக்களை நம்பிக்கையின் பேரில் தான் உன்னிடம் புழங்க விட்டிருக்கிறார்கள். உன் சவலைக் குறையை வீராசாமியின் பணத்தைக் கொண்டுசரி செய்யாதே. அது ஈனச் செய்கை. நேர்மை என்றும் உனக்குப் பலனளிக்கும்."

"வீராசாமி!" என்று கோபாலன் ஒலி அந்த பாங்கி முழுவதும் அலறியது. "என்ன சார்?" என்று ஓடி வந்தான் வீராசாமி. கோபாலன் முகத்தில் முத்து முத்தாக வியர்வை அரும்பியிருந்தது: பாங்கின் மேல் நிலைமைப் பார்த்தவண்ணம் அவன் கௌண்டரில் ஒரு நூறு ரூபாய்த் தாளை வைத்தான்; வீராசாமி விழித்தான்.

"வீராசாமி! நீ கொடுத்த ரூபாயில் இது அதிகமாயிருக்கிறது. எடுத்துக் கொள்."

"இல்லை சார்! சரியாகத்தான் கொடுத்தேன். நன்றாக......" வீராசாமியின் கண்களும் கோபாலனின் கண்களும் ஒரு கணம் சந்தித்தன. சட்டென்று கண்களைத் திருப்பிக் கொண்டான் வீராசாமி.

"வீராசாமி! நன்று பார்த்து விட்டேன்; எடுத்துக் கொள்."

பணத்தைக் கையிலெடுத்த வீராசாமி ஒரு கணம் தயங்கித் தயங்கி நின்றான். பின் ஏதோ முடிவுக்கு வந்தவனாகப் பாங்கை விட்டுப் போய் விட்டான்.

அன்று மாலை கோபாலன் வீட்டு வாசலில் காலடி எடுத்து வைத்த போது, வீராசாமி அமர்ந்திருப்பதைக் கண்டு ஸ்தம்பித்துப் போனார். அவர் மறந்து போக வேண்டும் என எண்ணிய சம்பவம் அவர் மனத்துக்குள் ஊசலாடியது. காலடி ஓசை கேட்டுத் திரும்பிய வீராசாமி கோபாலனைக் கண்டதும், "சார்! என்னை மன்னித்து விடுங்கள். நான் மனிதப் பண்பற்ற அரக்கன். தீயகுணம் படைத்தவன். உங்கள் நேர்மை என்னைத் திருத்தியது சார்! சார், என்னை நீங்கள் மன்னிப்பீர்களா?" என்று கதறியபடியே காலில் விழ வந்தான். கோபாலன் திகைத்துப் போனார். அவனைத் தடுத்தவாறே, "வீராசாமி! வீராசாமி! உன்னிடமா நான்..." என்றார். அதற்கு மேல் தொடர்ந்து அவருக்குப் பேச வரவில்லை.

வீராசாமி கண்ணீர் சொட்டக் கூறினான்: "சார்! நான் தான் சார், அந்தக் கயவன். அய்யம் பேட்டையில் பத்து ஜோடிக் காளைகளை விலைக்குப் பேசி விட்டுப் பணம் எடுக்கப் பாங்குக்கு வந்தேன், ஞாபகமிருக்கலாம். நீங்கள்தான் மூவாயிரத்து முந்நூறுக்கு 'செக்' எழுதித் தந்தீர்கள். பாவம் 'செக்' உங்க கிட்டே வந்தபோது குப்புசாமி உங்களிடம் பேசிக்கிட்டு இருந்தாரு. நீங்க கூட செக் எழுதும் போது, 'வீராசாமி! கணக்கிலே காணுறு வைக்காமல் எடுத்துக் கொள்கிறாயே' என்று கேட்டீங்க. எனக்குக் காளைகளை விடவும் மனசில்லே. பணமுடையும் இருந்தது. குப்புசாமியிடம் பேசிக்கிட்டே பணம் கொடுத்தீங்க. நானும் அப்படியே போய் விட்டேன். வீட்டுக்குப் போய்ப் பணத்தை எண்ணிய போது நூறு ரூபாய் அதிகமாயிருந்தது. எங்கிருந்தோ ஒரு கெட்ட புத்தி என்னை அமுக்கிட்டுதுங்க. விலையும் அந்த ரூபாய்க்குக்

குதிர்ந்து போகவே பேசாமல் வாங்கிட்டு வந்துட்டேனுங்க. ஆனால் என் மனச்சங்கடம் மட்டும் தீரவேயில்லீங்க. அதற்கேற்றாற்போல் நேற்று வாங்கிட்டு வந்த காளைகளில் ஜோடிக் காளை ஒன்று திடீரென்று செத்துப் போச்சுங்க. இப்படி எத்தனையோ அபசகுனங்கள். இதெல்லாம் அநியாயமா வாங்கிட்டு வந்த பணத்தால்தானுன்னு என் மனசு குத்திக்கிட்டேயிருந்ததுங்க. பணத்தைத் திருப்பிக் கொடுக்கணும்னு எனக்கு ஆசைங்க. ஆனால் எப்படிக் கொடுக்கிறதுங்க? என்பேரிலே உள்ள நம்பிக்கை உங்களுக்குக் குறைஞ்சு போகும். நேரே கொடுக்க வெட்கமுங்க. எந்த மூஞ்சியை வைச்சுக்கிட்டுக் கொடுப்பேனுங்க? ஒரு நாள் வேறே ஆயிப்போச்சு. நேத்து குப்புசாமியைக் கண்டேனுங்க. அவர் நீங்க ரூபாய் கோட்டை விட்டதையும், மறும் சிரமத்தையும் சொன்னாருங்க. எனக்குப் பொறுக்கலீங்க! கூடவே எனக்கு ஒரு எண்ணம் தோணிச்சு. 'நாம் மட்டும்தான் இப்படித் தீய புத்தியுடன் ரூபாயை எடுத்துக்கொண்டு பிறரை ஏமாத்தினோமா? இல்லே, எல்லோருமே சந்தர்ப்பம் கிடைக்கும்போதெல்லாம் இப்படி நடக்கிறார்களா?' என்று தெரிந்து கொள்ளணுமென்று முடிவு செய்தேன். அதுபோலவே மூவாயிரத்து ஏழு ரூபாய் என்று அடித்துச் சொல்லி மூவாயிரத்து நூற்றி ஏழு ரூபாயைக் கொடுத்தேனுங்க. ஆனால்...என்னைப்போல் உங்களுக்குச் சின்ன புத்தியில்லே! தீய புத்தியில்லே! நான் உங்களைத் தவறுதலாக எண்ணிவிட்டேன். 'போன ரூபாய் திரும்பக் கிடைத்தது' என்று அதை நீங்கள் எடுத்துக் கொண்டு விடுவீர்கள் என்று எண்ணினேன். ஆனால் நீங்க...'' அதற்குமேல் வீராசாமியால் பேச முடியவில்லை. 'ஹோ!' என அழுதுவிட்டான்; சிலை போல் நின்ற கோபாலன் அவன் அழும் சத்தம் கேட்டுத்தான் இவ்வுலகுக்கு வந்தார்.

''வீராசாமி! வருத்தப்படாதே! தவறு செய்வது இயற்கை. அதை ஒப்புக்கொண்டு திருந்துவது மனிதப் பண்பு. நானும் அப்படித்தான் செய்ய எண்ணினேன். ஆனால் மனச்சாட்சி இடம் கொடுக்கவில்லை. உன் மனச்சாட்சி மட்டும் உன் செயலுக்கு இடம் கொடுத்ததா? இல்லை. அதன் தூண்டுதலால் தான் நீ இப்போது உன் பிழையை உணர்ந்து வருந்துகிறாய். மனிதன் எவனுக்குமே மனச்சாட்சி என்று ஒன்று உண்டு. அவன் தீய செய்கைகளையோ, கெட்ட புத்திகளையோ அது கண்டித்துக் கொண்டுதானிருக்கிறது. அதை லட்சியம் செய்யாமல் மனச்சாட்சியையும் மீறித் தீய செயல்கள் புரியும்போது மனிதன் மிருகமாகி விடுகிறான்.''

கோபாலன் தம்புத்தியைத் தமக்குச் சமயத்தில் தந்த ஆண்டவனைத் துதித்துக் கொண்டார். வீராசாமி மடியிலிருந்து நாலைந்து நூறு ரூபாய் நோட்டுக்களை எடுத்து, ''சார் தயவுசெய்து இவைகளை வைத்துக்கொள்ளுங்கள். எனக்கு நீங்கள் புகட்டிய நல்ல படிப்பினைக்குக் காணிக்கையாக இருக்கட்டும்; எடுத்துக் கொள்ளுங்கள் சார்......'' என்றான்.

கோபாலன் சிரித்தார். ''வீராசாமி! நானும் உழைப்பவன். நீயும் உழைப்பவன். உழைத்த பணம் வீணாகப் போய்விட்டதே என வருந்தினேன். அது எங்கும் போகவில்லை; உன்னிடம் போய் நல்ல படிப்பினையைக் கற்பித்திருக்கிறது. அதைக் கொடுத்துவிடு. வேறு எதுவும் எனக்கு வேண்டாம். அவ்வாறு நான் வாங்கவும் கூடாது'' என்று அவன் கையிலிருந்த நோட்டுக்களில் ஒன்றை மட்டும் உருவி எடுத்துக் கொண்டார்.

''சார், என்னை மன்னித்துவிடுங்கள் சார்; வெளியில் யாரிடமும் சொல்லிவிடாதீர்கள்; என் மானம், அந்தஸ்து, யோக்கியதை எல்லாம் இந்த ஈனச் செய்கையால் போய்விடும், சார். மனச்சாட்சியை மீறி ஒரு காரியமும் நான் செய்யமாட்டேன். என்னை மன்னித்து விடுங்கள், சார்!'' கண்களில் நீர் பொங்கக் கூறிவிட்டு வீராசாமி போய்விட்டான்.

கோபாலன் கையிலிருந்த நூறு ரூபாய் நோட்டைப் பார்த்தார். நோட்டிலிருந்து அவர் மனச்சாட்சி பேசியது: ''கோபாலா! பார்...நீ இந்த நோட்டை அப்போதே சுருட்டிக் கொண்டிருந்தால் வீராசாமி உன்னைப் பற்றி எவ்வளவு தாழ்வாக எண்ணியிருப்பான்! உன்னை வைத்து 'மனித சமுதாயமே சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொள்பவர்கள்' என எண்ணியிருப்பான் அல்லவா? உன் நேர்மையால் அவனுக்கு எவ்வளவு பாடத்தைக் கற்பித்து விட்டாய்? உன் நேர்மைதான் அவன் சிந்திய கண்ணீர். மனச்சாட்சியை மீறுபவன் மனிதனல்ல. நேர்மையைக் கடைப் பிடிப்பவன் மனிதன். மனச்சாட்சியை மீறி நடப்பவன், நேர்மையைப் புறக்கணிப்பவன் மிருகம், அரக்கன்......''

கோபாலன் வறுமை நிரம்பிய தம் வீட்டுத் தாழ்வாரத்தில் நுழைந்தார். மனைவியின் கட்டிலருகே, ஒரு டஜன் ஆரஞ்சுப் பழங்களும், சில மருந்துப் புட்டிகளும், ஆப்பிள் பழங்களும் இருந்தன. பத்து நாட்களாக அவன் வாங்க ஏங்கும் விலையுயர்ந்த மருந்துகள் அவை. 'இன்று எப்படி வந்தன?' கோபாலன் கையிலிருந்த தாளைப் பார்த்தார்.

''கோபாலா, என்னிடம் நீ நடந்துகொண்ட நேர்மையான முறைக்குப் பரிசு அவை. ஏற்றுக்கொள்......''

கோபாலன் இதழ்க் கடையில் ஒரு வறட்டுப் புன்னகை தெளிந்தோடியது!

ஈடில்லா
எழிலுக்கு
ரெமி அழகு சாதனங்கள்



இலங்கையில் கிடைக்குமிடம்: AVRA Ltd., Colombo

ரேடியோ சிலோன் :—41·72 மீட்டரில் "இசை விருந்து"
வெள்ளிக்கிழமைதோறும் மாலை 6-30 லிருந்து 6-45 வரை

# நாட்டு வைத்தியம்

ஸ்ரீஹரி

## 43. ஆமவாதம்-உஷ்ண-ஸ்பரிசத்தம்

ஆமவாதத்தின் லக்ஷணங்களைக் கண்டு ரத்தவாதமல்லவென்று தெளிந்து கொள்ளுதல் அவசியம்.

இதில் உஷ்ணமானதும், உட்கொண்டால் வெப்பத்தை அதிகரிப்பதும்-தொட்டாலும் சூடுள்ளதும், காரம், புளிப்பு-உப்பு இச்சுவையுள்ள, நெய்மையுள்ளதுமான திரவியங்களையும்-காப்பணம் பூச்சு மருந்துகள் ஆகியவற்றையும் உபயோகித்தல் அவசியம்.

ஆமவாதத்தின் சிகிச்சை ரத்தவாதத்தின் சிகிச்சைக்கு அடிப்படை தத்துவத்தில் நேர் எதிரானதென்று இதனால் விளங்கும்.

ஒருகால் தப்பித்தவறி ரத்தவாதத்தின் மருந்துகளை ஆம வாதத்தில் ஒன்றிரண்டு வேளை உபயோகிப்போமாயினும் பெருத்த கெடுதலேதும் விளையாது. ஆனால் ஆமவாதத்துக்குச் சொல்லும் மருந்துகளை ரத்தவாதத்தில் உபயோகித்தல் ஒருகாலும் நல்லதல்ல.

ஆமவாதத்தில் மிகவும் பயனளிப்பவை எனத் தமிழ்ச் சித்தர்கள் தெளிந்து தெரிவித்த சில மருந்துகளைச் சொல்ல விரும்புகிறேன்.

1. அகத்திக்கீரை என்பதை யாவரும் அறிவர். இதில் செவ்வகத்தி என்று ஒரு வகையுண்டு. இச் செவ்வகத்தியின் வேர்ப்பட்டை, ஊமத்தன் வேர் இரண்டையும் ஓரளவெடுத்து வெந்நீர் விட்டு அரைத்துக் கீல் வாயுக்களுக்குப் பற்றிடலாம். செவ்வகத்தி கிடைக்காவிடில் சாதாரண அகத்தியையாவது உபயோகிக்கலாம்.

2. அழவான இலையைப் புளித்த காடியேனும் எலுமிச்சஞ் சாறேனும் விட்டு அரைத்துப் பூச, வீக்கம் வலி ஆகியவை குறையும்.

3. "கீல்வாதம் மிக்க கடுமை செய்யும் வேளையில்" அழிஞ்சில் வேர்ப் பட்டையின் குழித் தைலத்தை மேலுக்குப் பூசுவதால் உடனடியாகச் சமனமேற்படும்.

4. ஆகாச கருடன் கிழங்கு, வெங்காயம், சீரகம் ஆகியவற்றைச் சமஎடையில் எடுத்து ஆமணக்கு எண்ணெய் விட்டு அரைத்துப் பற்றிடுவதும் நல்லது.

5. ஆடாதோடையின் இலை ஒரு பங்கு, தண்ணீர் எட்டு பங்கு சேர்த்து-எட்டிலொன்றாகக் குறுக்கி வடிகட்டிய குடிநீரைச் (சூடுள்ளபோது) சீலையில் தோய்த்து ஒற்றடம் கொடுத்தால் வீக்கம், சூலை, கீல் பிடிப்பு முதலியன தணியும்.

6. ஆமணக்கின் (செவ்வாமணக்கானால் மிகவும் நல்லது) இலையைச் "சிறுக நறுக்கி, சிற்றாமணக்கு நெய் விட்டு வதக்கிச் சூட்டுடன், வலியுடன் கூடிய கீல் வாயுக்களுக்கும், வீக்கங்களுக்கும் ஒற்றடமிடலாம்."

7. இலந்தை மரத்தின் வேர்ப் பட்டையை அரைத்து மேல் பூச்சிட்டால் கீல் வாயு போகும்.

8. உத்தாமணி என்று ஒரு வகைக் கொடி. இதில் பால் உண்டு. தென்னிந்தியாவில் எங்கும் கிடைப்பது. இதை வேலிப் பருத்தி என்றும் சொல்லுவர்.

இதன் இலையை இடித்துப் பிழிந்த சாற்றையும் கற் சுண்ணாம்பையும் குழைத்துக் கால் வீக்கங்களுக்குப் பற்றிடலாமென்று அகத்தியர் தெரிவிக்கிறார்.

இதை ஆமவாதத்தின் வீக்கங்களுக்கு உபயோகிக்கலாம். யானைக்கால் வீக்கங்களுக்கும் உபயோகிக்கலாம். யானைக்கால் வீக்கங்களில் இதன் பலனை நான் அனுபவத்தில் கண்டதில்லை. நேயர்கள் உபயோகித்துக் காணும் குணாகுணங்களைத் தெரிவித்தால் நலம்.

9. இதன் இலைச்சாறு சேரும் எண்ணெயை உள்ளுக்குக் கொடுப்பது கீல் வாதங்களில் பயன் தருவதாகும்.

ஊமத்தையின் "இலையை வதக்கி ஒற்றடமிட, கீல்வாயு...களில் உண்டாகும் வலி வீக்கம் ஆகியவை தணியும்."

10. கருஊமத்தன் இலை ரசம் 12, தேங்காயெண்ணெய் பலம் 24. இவ்விரண்டும் சேர்த்துக் காய்ச்சி, ரசம் சுண்டும் தருவாயில் ஓமப்பொடி பலம் ஒன்று கூட்டிக் கிளறி மெழுகு பதத்தில் வடிகட்டி, அதில் கருப்பூரம் பலம் ஒன்று பொடித்துக் கரைத்து வைத்துக்கொள்ளவும். இத் தைலத்தை மேலுக்குத் தடவி வெந்நீர் விட்டு உருவ-குத்தல் குடைச்சல், வலி, வீக்கம் ஆகியவை போகும்.

11. எட்டி இலையை ஒன்றிரண்டாக இடித்து நீரில் இட்டுக் காய்ச்சிக் குறிப்பிட்ட இடங்களில் ஒற்றடமிடலாம்—வலி நோயினருக்கு நீராட்டலாம்.

12. எட்டிப் பழங்களை வரகு வைக்கோலில் வதக்கி, ஓட்டையும் கொட்டைகளையும் நீக்கி, உட்சதையை மாத்திரம் ஒரு துல்லிய சீலையில் இட்டுப் பிழிந்து எடுத்த ரசத்துடன் சமபாகம் எண்ணெய் கலந்து காய்ச்சி வடிகட்டிக் கீல் வீக்கங்களுக்குப் போடலாம்.



அம்மா :—என்டா, உன்னே வாழைப் பழம் மட்டும்தானே வாங்கி வரச் சொன்னேன்! எதற்காகச் சீப்பு வேறே வாங்கிவந்திருக்கே?
மகன் :—நீதானே வாழைப்பழம், ஒரு சீப்பு வாங்கிவரச் சொன்னே? அதனுல் வாழைப் பழமும் ஒரு சீப்பும் வாங்கி வந்தேன்!

---

13. எலுமிச்சன் தளலிலை அரைத்துப் பூசினுலும் கீல் வாயுவில் வீக்கம் வலி முதலியவை குறையும். "அங்கு தங்கியுள்ள கெட்ட நீர்களை யெல்லாம் உறிஞ்சிக் கொள்ளும்."

14. கண்டங் கத்திரியின் இலைச்சாறு-அல்லது அதன் குடி நீரில் எண்ணெயுங் கூட்டிக் காய்ச்சி மேலுக்குத் தடவி வருவதும் நல்லது.

15. கழுகுவின் இளங்குருத்தை எண்ணெயில் இட்டு வதக்கி வாதவலி வீக்கங்களுக்கு மேலே வைத்துக் கட்டலாம்.

16. கர்ப்பூரப் புல் என்ரொரு புல்லுண்டு. இதை வாசனைப் புல், சுக்கு நாறிப் புல், சம்பாராப் புல் என்னும் பெயர்களாலும் அழைப்பதுண்டு.

இதன் பச்சைப் புல்லை வாலையிலிட்டு வடித்தெடுக்கும்போது ஒருவகை எண்ணெய் இறங்கும். இந்த எண்ணெய் மிகத் தெளிவாயும் மஞ்சள் கலந்த சிவப்பு நிறமுள்ளதாயும் காரமுடைய தாயும் எலுமிச்சம் பழத்தின் மணத்தைப் பெற்றதாயுமிருக்கும்.

இந்த எண்ணெயைச் சரி பங்கு தேங்காயெண்ணெயுடன் கலந்து வாதப் பிடிப்பு, கீல்வாதம், நரம்புக் குடைச்சல் முதலிய நோய்களுக்குத் தேய்த்து வரக் குணம் தெரியும்.

17. கலியாணமுருக்கு என்னும் முள் முருக்கையை அறியாதவர் இல்லை.

இதன் இலையை ஒன்றிரண்டாய் நறுக்கிச் சுடு தண்ணீரில் இட்டு, நல்ல சூட்டுடனே கீல் வாதத்துக்கு வைத்துக் கட்டினுல் வலி நீங்கும் ; வீக்கமும் குறையும்.

18. காட்டாமணக்கின் வேர்ப் பட்டையை அரைத்துக் கீல் பிடிப்புக்குப் பற்றிடலாம்.

19. காட்டு எலுமிச்சம் பழத் தோலிலிருந்து எடுக்கும் எண்ணெயையும் கர்ப்பூரப் புல்லெண்ணெயைப் போல் உபயோகிக்கலாம்.

20. குங்கிலியத்தைச் சாராயத்தில் கரைத்து, அதன் அளவு முட்டை வெண் கருவைச் சேர்த்துக் கலந்து மேலுக்குப் பூச, வாதவலி வீக்கம் சாந்தமாகும்.

21. குன்றி என்னும் குண்டுமணி-குன்றிமணியின் விதையைத் தனியாகவோ மற்ற மருந்துகளுடனே சேர்த்து அரைத்து வீக்கம், வலி, கீல் வாயு முதலியவற்றில் மேலுக்குப் பற்றிடலாம்.

22. சரக்கொன்றைப் புளியை நீரில் அரைத்துக் கொதிக்க வைத்து மேலுக்குப் பூசினுல் கீல் பிடிப்பு வீக்கம் முதலியவைகளும் தீரும்.

23. சதகுப்பையின் இலைதையை அரைத்து, வெந்நீராவியில் வேகவைத்து, இதன் வேருடன் கூட்டிக் கீல் வாயுவுக்குப் பற்றிடலாம்.

24. சந்திச்சாரணை-அல்லது சாட்டரணை-அல்லது வெள்ளைச் சாட்டரணையின் இலை, ஆமணக்கின் இலை, சுரைக் கொடியின் இலை ஆகியவற்றை ஓரெடையாக எடுத்துக் கிநீர் வடித்துக் கொடுக்க, ஐந்தினுலுண்டாகும் வீக்கம் விலகும்.

இதன் இலைச்சாறும் எண்ணெயும் நேர் நேர் கூட்டிக் காய்ச்சிப் பூசி வர, கீல் வாயுக்கள் நீங்கும்.

25. கக்கையரைத்து மூட்டு வீக்கங்களுக்குப் பூச வீக்கம் நாளுக்கு நாள் குறையும்.

26. சுக்கு, நவாச்சாரம், தேவதாரு ஆகியவற்றைச் சம இடையில் பொடித்துச் சூரணத்தை ஜலம் விட்டோ-கழு நீர் விட்டோ குழைத்துப் பூசினுலும் மேற் சொன்னபடி வீக்கங்கள் குறையும்.

இதுவரையில் தமிழ்ச் சித்தர்கள் எழுதிய நூல்களிலிருந்து பொறுக்கி எடுத்தவை. ஏதோ ஒரு சில தவிர மற்றவைகளை யாவரும் எளிதில் செய்து கொள்ளக் கூடும்.

இந்நோயில் உள்ளுக்குச் சாப்பிட மருந்துகள் எதுவுஞ் சொல்லவில்லையே என்கிறீர்களா? அடுத்த வாரம்......



எந்த வேலைக்கானாலும் சரி



அதற்கென்று, குறிப்பிட்ட ஒரு



ஷாலிமார் பெயிண்ட் இருக்கிறது.



be BRIGHT – specify




விவேகத்துடன் ஷாலிமார் பெயிண்டையே
குறிப்பிட்டு வாங்குங்கள்.

**ஷாலிமார்** பெயிண்ட்கள்

ஷாலிமாரின் எல்லாவித பெயிண்ட்களின் முழு விவரங்களுக்கு "ஷாலிமார் [illegible]" [illegible], தபால் பெட்டி, 68, கல்கத்தா-1 க்கு கேட்டு எழுதவும்.

SHALIMAR PAINT, COLOUR & VARNISH CO. PRIVATE LTD.

SPW 359

# அலை ஓயாதோ!

பரந்து விரிந்து கிடக்கும் நீலக் கடலைப் பார்த்துக் கொண்டிருந்தேன். ஒன்றன் பின் ஒன்றாக அலைகள் உருண்டு வந்து கொண்டிருந்தன. 'இந்த அலைகள் ஒரு கணம் ஓயாதா?' என்று நினைத்தேன். அந்தச் சமயத்தில் சொல்லி வைத்தாற் போல்,

"திரைகடல் தூங்காதோ, — அம்மா !
அலை ஓயாதோ !"

என்று இனிய குரலில் கம்பீரமாக யாரோ பாடுவது கேட்டது. இந்தப் பாட்டை முன்பு ஒரு தரம் கேட்டிருக்கிறேன். அதனால் சட்டென்று திரும்பிப் பாட்டின் குரல் வந்த திசையை நோக்கினேன்.

அங்கு யாரையும் காணவில்லை. ஆனால் ஒரு டாக்ஸியில் ஒரு இளம் பெண் மட்டும் அமர்ந்திருந்தாள். நான் அவளைப் பார்த்தேன். உடனே டாக்ஸி புறப்பட்டு விட்டது. எனக்கு முன்பு ஒரு சமயம் டாக்ஸி டிரைவர் ஆனந்தன் சொன்ன அந்தத் திடுக்கிடும் சம்பவம் நினைவுக்கு வந்தது...




ஆனந்தன் சொல்லுகிறார் :

அன்று வழக்கம் போல்தான் டாக்ஸியை எடுத்துக் கொண்டு கிளம்பினேன். கிளம்பும்போது உற்சாகமாகத்தான் இருந்தது. ஆனால் அன்றைய தினம் என்னவெல்லாம் எதிர்பாராத சம்பவங்கள் நிகழ்ந்து விட்டன? அப்படியெல்லாம் நடக்கும் என்று தெரிந்திருந்தால் அன்று காரில் ஏறியிருக்கவே மாட்டேன். ஆனால் அதைப்பற்றி இப்போது நினைத்து என்ன பயன்?

மனிதனுக்கு வருங்கால நிகழ்ச்சிகளைப் பற்றி அறிந்து கொள்ளும் சக்தி மட்டும் இருந்துவிட்டால் பின்னர் அலுப்பு ஏற்பட்டு வாழ்க்கையே கசந்துவிடும் அல்லவா? எதிர்பாராத விதத்தில் திடீர் திடீரென்று சம்பவங்கள் நடைபெறுவதிலேதான் வாழ்க்கையும் வாழத் தகுந்ததாக இருக்கிறது. அது போகட்டும்; அன்று நடந்த சம்பவங்களைப் பற்றிச் சொல்கிறேன். மாலை சுமார் மூன்று மணி இருக்கும். அபிராமபுரத்தில் ஒருவரைக் கொண்டு போய் இறக்கி விட்டேன்.

"ஸார்! இங்கிருந்து திரும்பிப் போகச் சவாரி கிடைக்காது, ஸார்!" என்றேன்.

அவர் கூட ஒரு நாணயத்தைத் திணித்தார். வண்டியைத் திருப்பிக்கொண்டு மெல்ல ஓட்டி வந்தேன். வெங்கடேசபுரம் காலனிக்கு அருகில் வரும்போது ஒரு வீட்டின் வாசலில் இளம் பெண் ஒருத்தி என்னை நிறுத்துமாறு சைகை காட்டியதைக் கவனித்தேன். உடனே வண்டியின் வேகத்தைக் குறைத்து அவள் இருந்த பக்கமாகச் செலுத்தினேன். அவள் பின்னால் ஏறி உட்கார்ந்து கொண்டு கதவை மூடினாள். "காந்தி நகருக்குப் போக வேண்டும். அவசரம்!" என்றாள்.

தன்னந்தனியாக ஒரு பெண் இப்படி டாக்ஸியில் ஏறிக்கொண்டது எனக்குச் சிறிது வியப்பாகவே இருந்தது. சாதாரணமாக ஆண் துணை இல்லாமல் டாக்ஸியில் பெண்கள் ஏறுவது வழக்கமில்லை. அதிலும் அந்தப் பெண் கையில் ஒரு சிறு பெட்டி வைத்திருந்ததைக் கவனித்தேன்.



அதைப் பார்த்தவுட னேயே எனக்கு அது ஒரு நகைப் பெட்டி என்று தெரிந்து போய் விட்டது. வைர மாலை யைத்தான் அது போன்ற பெட்டியில் வைப்பார்கள். 'நகைப் பெட்டியை வைத்துக் கொண்டு தனியாகச் செல்கிறாளோ?' என்று நினைத்தேன். கூட வேயே 'அதைபெல்லாம் பற்றி உனக்கு என்ன கவலை? உன் கடமையை நீ செய்' என்று உள் மனம் கூறியது. அந்தப் பெண் ணுக்கு வயது அதிகமாயிராது. சுமார் இருபது அல்லது இருபத்து ஒன்று இருக்க லாம். அவ்வளவுதான். நல்ல அழகு. ஆனால் எக்காரணத்தினாலோ அவள் முகத்தில் உற் சாகமோ, சந்தோஷமோ காணோம். அதற்கு மாறாக ஏதோ சோகக் கடலில் ஆழ்ந்திருப் பவளைப் போலவே காணப்பட்டாள்.

காந்தி நகர் வந்தடைந்ததும் அவள் குறிப்பிட்ட வீட்டின் அருகில் வண்டியை நிறுத்தினேன். வாசலில் டாக்டர் சியாம சுந்தர் எம். பி. பி. எஸ்., எப். ஆர். சி.எஸ். என்று போர்டு போட்டிருந்தது.

அவள் "இங்கேயே இருங்கள்" என்று சொல்லி விட்டுச் சட் டென்று இறங்கி வாசல் கேட்டைத் திறந்து கொண்டு வீட்டின் உள்ளே சென்று விட்டாள்.

நகைப்பெட்டியைக் கையில் எடுத்துக் கொண்டு போனாள். நான் நோட்டுப் புத்த கத்தை எடுத்து அன் றைய சவாரிகளை எழுதஆரம்பித்தேன். எழுதி முடிப்பதற்கும் அந்தப் பெண் திரும்பி வருவதற்கும் சரியாக இருந்தது. என்னையறி யாமலே அவளது கைகளைக் கூர்ந்து கவ னித்தேன். அவற்றில் இப்போது நகைப் பெட்டி இல்லை.

ஆனால் ஒரு கை மட்டும் அவ ளது புடவைத் தலைப்புக்குள் மறைந் திருந் தது! 'ஒரு வேளை நகைப் பெட்டியும் புடவைத் தலைப்பில் மறைந்திருக்குமோ?' என்ற எண்ணம் எனக்கு ஏற்பட்டது.

அந்தப் பெண் காரில் ஏறிக்கொண்டாள். "திரும்ப வீட்டுக்கு விடு" என்றாள்.

கமலம் கூட ரொம்ப நாட்களாக 'எனக்கு ஒரு சங்கிலி வாங்கிப் போடுங்கள், அத்தான்!' என்று சொல்லிக் கொண்டிருந்தது என் ஞாப கத்துக்கு வந்தது. 'ஹும்! அது எப்படி இப் போதைக்குச் சாத்தியமாகப் போகிறது? சாப் பாட்டுச் செலவு போக இப்படி அப்படி மிச்சம் செய்யும் பணத்தில் ஒரு சொந்தக் கார் வாங்கி டாக்ஸி ஓட்ட வேண்டும்' என்பது என்னு டைய 'ப்ளான்'. அதற்கு அப்புறம் நிச்சய மாகக் கமலத்துக்கு ஒரு சங்கிலி.

அந்தப் பெண்ணின் வீட்டு வாசலில் வண் டியை நிறுத்தினேன். அவள் தான் உட்கார்ந்

இருந்த பக்கமாகத்தான் இறங்கினாள். இறங்கும்போது கொஞ்சம் அஜாக்கிரதையாக இருந்து விட்டாள். அவள் புடவைத் தலைப்பில் மறைந்திருந்த நகைப் பெட்டி 'டக்' என்ற சத்தத்துடன் கீழே விழுந்தது. ஏதோ அடக்க முடியாத ஆர்வம் என்னைக் கீழே விழுந்த அந்த நகையை எட்டிப் பார்க்கச் செய்தது. அடுத்த கணம் ஆயிரம் தேள்கள் என்னை ஒரே சமயத்தில் கொட்டியது போல் தாக்கி வாரிப் போட்டது!

கீழே விழுந்திருந்தது நகைப் பெட்டியல்ல! ஒரு கைத் துப்பாக்கி!

அந்தப் பெண் சட்டென்று குனிந்து அதை எடுத்து மறுபடியும் மறைத்துக் கொண்டாள். 'அப்படிச் செய்யும்போதே அதை நான் கவனித்தேனா என்று கடைக் கண்ணால் பார்த்தாள். நான் கவனித்ததாகக் காட்டிக் கொள்ளவேயில்லை. மற்றொரு கையினால் ஒரு பத்து ரூபாய் நோட்டை என்பக்கமாக நீட்டினாள். அதை வாங்கிக் கொண்டு சில்லறை எடுப்பதற்காகச் சட்டைப் பையைத் துழாவினேன். ஆனால் அதற்குக் காத்திருக்காமல் அந்தப் பெண் விடுவிடுவென்று நடந்து வீட்டினுள் சென்று விட்டாள். சில்லறையை வேண்டுமென்றே வாங்கிக் கொள்ளாமல் போகும் பெரிய மனிதர்களிடம் நான் கூப்பிட்டுக் கொடுக்கும் பழக்கம் இல்லை. அப்படிக் கொடுத்துக் கொண்டிருந்தால் நான் எப்போது சொந்தமாகக் கார் வாங்கி டாக்ஸி ஓட்ட முடியும்?

காரைக் கிளப்பிக் கொண்டு அங்கிருந்து நகர்ந்தேன். அந்தப் பெண்ணின் நடவடிக்கைகளும், நான் பார்த்த துப்பாக்கியும் என் மனத்தை உறுத்திக் கொண்டே இருந்தன. கடைசியில் போலீசுக்கு டெலிபோன் செய்து சொல்லி விடுவது என்று தீர்மானித்தேன். அதன் பிரகாரம் டெலிபோனில் '93'ஐக் கூப்பிட்டு நடந்ததைச் சொன்னேன்.

ஆனால் அந்தப் பெண் ஒரு நகைப் பெட்டியை டாக்டர் சோமசுந்தரிடம் எடுத்துச் சென்றதையும், டாக்டர் வீட்டுக்கு நான் இரண்டாவது முறையாகப் போனதையும் மட்டும் அவர்களிடம் சொல்லவில்லை. ஏன் சொல்ல வேண்டும்? சொல்வதினால் எனக்கு எந்த விதமான லாபமும் இல்லை. சொல்லாததினால் நிச்சயமாக லாபம் உண்டு. அவர்களாகக் கேட்டார்களோ என்றால், அதுவும் இல்லை. அவர்கள் கேட்காத போது நானாகத் தெரியப்படுத்துவானேன்?

மாதவன் சொல்லுகிறார்:

டாக்ஸி டிரைவர் ஆனந்தனிடமிருந்து அந்தப் பெண்ணின் கையிலிருந்து ஒரு துப்பாக்கி கீழே விழுந்தது என்பதைத் தவிர வேறு ஒன்றும் தெரிந்துகொள்ள முடியவில்லை. அவனுடைய விலாசத்தைக் குறித்துக் கொண்டு அவனை அனுப்பி விட்டேன்.

இளம் பெண் ஒரு துப்பாக்கியை வைத்திருந்தாள். ஒரு டாக்டர் வீட்டுக்குப் போய்த் திரும்பினாள். இதுதான் விஷயம். இதை

வைத்துக்கொண்டு யார் மேல் எதற்காகச் சந்தேகப்படுவது? மேற்கொண்டு நடவடிக்கை எடுப்பது அனாவசியம் என்றே முடிவில் தோன்றியது. இருந்தாலும் 'போலீசுக்குக் கிடைத்த ஒரு தகவலைக் கடைசி வரையில் ஆராய்ந்து பார்த்துவிடுவதே மேல் என்றும் தோன்றியது. பின்னர் என்மீது குற்றம் குறை சொல்ல இடம் வைக்கக் கூடாதல்லவா?

இப்படி நினைத்துக் கொண்டிருக்கையிலேயே மறுபடியும் டெலிபோன் மணி அடித்தது. '341' டெலிபோனை எடுத்தான். ஒரு கணத்தில் அவனுடைய முக பாவம் சட்டென்று மாறியது. ஏதோ முக்கியமான விஷயம் என்று தெரிந்து கொண்டேன்.

"கொலையா? எங்கே? யார்? சரியாகச் சொல்லு?" என்று 341 கேட்டான்.

நான் டெலிபோனை அவனிடமிருந்து வாங்கிக் கொண்டேன். "நான் இன்ஸ்பெக்டர்



மாதவன் பேசுகிறேன்! என்ன விஷயம் தெளிவாகச் சொல்லுங்கள்!" என்றேன்.

"கொலை ஸார்!"

"யார் கொலை செய்தது?"

"ஐய்யோ! நான் இல்லை ஸார்! எனக்கு ஒன்றுமே தெரியாது ஸார்!"

எனக்குச் சிரிப்பே வந்து விட்டது.

"ஐயா, பதட்டப்படாமல் நிதானமாகச் சொல்லுங்கள். யார் இறந்து போனார்கள்?"

"ஐயோ, இறந்து போனால் பரவாயில்லை ஸார்! கொலை ஸார், கொலை! ஒரே ரத்தம்! பயமா யிருக்கிறது ஸார்!"

ரொம்பச் சிரமப்பட்டு அவன் டாக்டர் சியாமசுந்தருடைய சமையல்காரன் என்றும், சியாமசுந்தர் இறந்து போய்விட்டார் என்றும் தெரிந்து கொண்டேன். டாக்சி டிரைவர் ஆனந்தன் குறிப்பிட்டதும் இதே டாக்டர்தான் என்று ஞாபகம் வந்தது.

ஆனந்தனிடமிருந்து அவருடைய விலாசத்தையும் பெற்றுக் கொண்டிருந்தேன். ஆகவே நேரத்தை வீணாக்காமல் டெலிபோனை வைத்து விட்டு நேராக டாக்டர் வீட்டுக்குச் சென்றேன். வாசலிலேயே சமையல்காரன் ஏகாம்பரம் நின்று கொண்டிருந்தான்.

அவனுடன் பேசியதிலிருந்து டாக்டர் அந்த வீட்டில் தனியாகத்தான் வசிக்கிறார் என்று தெரிந்து கொண்டேன். உதவிக்குச் சமையல் ஆள் மட்டும் இருந்தான். தாய் தந்தையர் தங்கள் பெண்ணுடன் ஸ்ரீரங்கத்தில் இருந்தார்கள். ஏகாம்பரம் டாக்டரிடம் விடை பெற்றுக் கொண்டு அன்று ஒரு சினிமாவுக்குப் பகல் காட்சிக்குச் சென்று திரும்பினான். வீட்டினுள் நுழைந்ததும் டாக்டர் படுக்கையில் இறந்து கிடப்பதைக் கண்டான். உடனே போலீஸுக்கு டெலிபோன் செய்தான்.

என்னுடன் வந்த துப்பறியும் நிபுணர்கள் புகைப்படங்கள் எடுப்பதிலும் கைரேகைகள் தேடுவதிலும் ஈடுபட்டார்கள்.

அங்கு நான் மேலே செய்யக் கூடியது ஒன்றுமில்லை என்று தெரிந்து போயிற்று.

சியாமசுந்தரைப் பார்க்க ஒரு பெண் வந்ததாகவும் அவள் கையில் துப்பாக்கி இருந்ததாகவும் ஆனந்தன் சொன்னானல்லவா? அவளுடைய விலாசமும் கொடுத்திருந்தான். அவள்தான் இந்தக் காரியத்தைச் செய்திருக்கலாமோ என்ற எண்ணம் தோன்றியது.

குறிப்பிட்ட வீட்டுக்குச் சென்றேன். கதவு திறந்துதான் இருந்தது. ஆனாலும் மரியாதைக்குத் தட்டினேன். "யாரது?" என்ற இனிமையான பெண் குரல் கேட்டது. அக்குரலில் அதிகார தோரணை இல்லை. ஒருவித நடுக்கம்தான் இருந்தது! ஏனோ அப்போது "ஐயோ பாவம்!" என்று என் மனம் நினைத்தது. பதில் சொல்லாமல் உள்ளே சென்றேன். நாற்காலியில் உட்கார்ந்திருந்த ஒரு பெண் சட்டென்று எழுந்து நின்றாள். அவள் கையில் ஒரு துப்பாக்கி இருந்தது.

என்னுடன் வந்த '341' சட்டென்று என் கையைப் பிடித்தான். "ஜாக்ரதை ஸார்! கையில் துப்பாக்கி இருக்கிறது!" என்று மெதுவாகச் சொன்னான். நானும் ஒரு கணம் தயங்கி நின்றேன். ஒரு கணம்தான். அடுத்த கணம் என்னுடைய பயத்தை எண்ணி நானே சிரித்துக் கொண்டேன். ஏனெனில் துப்பாக்கியைப் பிடித்திருந்த அப் பெண்ணின் கரம் நடுங்கிக் கொண்டிருந்தது. யாரையும் சுடுவதற்கு வேண்டிய தைரியம் அந்தப் பெண்ணுக்கு ஒருகாலும் வராது. மெல்ல மெல்ல அப் பெண்ணின் அருகே சென்றேன். நான் அவளை நெருங்க நெருங்க அவளுடைய நடுக்கம் அதிகமாகிக் கொண்டே வந்தது. கடைசியில் அவள் உடல் முழுவதுமே ஒரேயடியாக நடுங்க ஆரம்பித்து விட்டது.

"பயப்படாதீர்கள்! நான் உங்களை ஒன்றுமே செய்ய மாட்டேன். எங்கே அந்தத் துப்பாக்கியை இப்படிக் கொடுங்கள்" என்று சொல்லிக் கொண்டே என் கையை நீட்டினேன். மிக மிக மெதுவாக அவளுடைய கையும் நீண்டது. துப்பாக்கியைப் பெற்றுக் கொள்ளும்போது அவளுடைய கையை

# எச்சரிக்கை!

## உங்கள் ஜலதோஷம் அபாயகரமாகக் கூடும்!

கடும் வியாதி ஆரம்பிக்கு முன்னரே, இந்த நல்ல, சக்தி மிகுந்த ஆயின்மென்ட்டால், சளி உபாதைகளை ஒழியுங்கள்!

2 விதங்களில் ஜலதோஷத்திலிருந்து நிம்மதி தருகிறது.



1

மூக்கின் வழியாக வேலை செய்கிறது.

நீங்கள் சுவாசிக்கும் பொழுதெல்லாம், விக்ஸ் வேபோரப்பின் தீவிர ஔஷத ஆவிகள் மூக்கிலும், தொண்டையிலும் உள்ள சளி உபாதைகளை சமனப்படுத்துகிறது.



2

சருமத்தின் வழியாக வேலை செய்கிறது.

விக்ஸ் வேபோரப்பின் சுகம் தரும் உஷ்ணம் சருமத்தினூடே சென்று உங்கள் மார்க்கபத்தை உடைத்தெறிகிறது!







**விக்ஸ் வேபோரப்**

மார்பிலும், முதுகிலும், தொண்டையிலும் தேய்த்தாலே போதும்!

327 A TH

---

Worth any price

"And yet priced low"

Nutrine SWEETS

தி நியூட்ரின் கன்பெக்ஷனரி கம்பெனி, லிட்., சித்தூர் (ஆந்திரா)

எனது விரல்கள் ஸ்பரிசித்தன. அவள் துணுக்குற்றுப் பின்னோக்கி நகர்ந்தாள். உடல் நடுக்கம் ஓயவில்லை. அவளை அணைத்துக் கொண்டு ஆறுதல் சொல்ல வேண்டும் என்று என் உள்ளம் துடித்தது. ஆனால் அது எப்படி முடியும்? எப்படியோ நல்ல வார்த்தைகள் பேசி அவளை அமைதியாக உட்காரச் செய்தேன்.

டாக்டரை இவள் கொலை செய்திருக்கலாம் என்று முன்னம் தோன்றிய எண்ணம் இப்போது இருந்த இடம் தெரியாமல் போய்விட்டது. இந்தப் பெண் யாருக்கும் கெடுதல் நினைக்க மாட்டாள். அப்படியே அவள் மனம் எண்ணி விட்டாலும் அவளது உடல் அக்காரியத்தைச் செய்யாது, செய்ய முடியாது என்று உறுதியாக நம்பினேன்.

''உன்னுடைய பெயர் என்னவென்று தயவு செய்து சொல்!'' என்று கேட்டேன்.

''சந்திரா'' என்று அவளுடைய வாய் மெல்ல முணுமுணுத்தது.

''சந்திரா! நான் சொல்லப் போவது உனக்கு மனக் கஷ்டத்தை உண்டு பண்ணலாம். ஆனால் அதை நான் சொல்லியே ஆக வேண்டும். தயவு செய்து தைரியமாக இரு!''

சந்திரா மெள்ளத் தலையை அசைத்தாள். நான் மேலே தொடர்ந்தேன்.

''டாக்டர் சியாமசுந்தர் இறந்து போய் விட்டார். நீ அவர் வீட்டுக்குச் சென்று திரும்பியதாக டாக்ஸி டிரைவர் ஆனந்தன் கூறியிருக்கிறான். நீ காரிலிருந்து இறங்கும் போது துப்பாக்கி கீழே விழுந்ததைப் பார்த்திருக்கிறான். ஆகவே டாக்டர் இறந்துபோனதற்குக் காரணம் நீதான் என்று சந்தேகிக்க இடம் இருக்கிறது. அதைப் பற்றி நீ ஏதாவது சொல்ல விரும்புகிறாயா?'' என்று கேட்டேன்.

சந்திரா பதில் பேசவில்லை. தலையைக் குனிந்து கொண்டு ஏதோ யோசிப்பவள் போல் காணப்பட்டாள். திடீரென்று அவள் எழுந்து நின்றாள்.

''டாக்டரை நான்தான் கொலை செய்தேன். என்னைக் கைது செய்து தூக்குத் தண்டனை அளியுங்கள்'' என்றாள். இப்போது அவள் குரலில் நடுக்கமோ தயக்கமோ இல்லை. கம்பீரமாக எழுந்து நின்று சொன்னாள்.

எனக்குத் தூக்கி வாரிப்போட்டது. நான் இதை எதிர்பார்க்கவேயில்லை. அவள் இப்படிச் செய்திருக்கமாட்டாள் என்ற எண்ணம் என் உள்ளத்தில் வேரூன்றி இருந்தது. ஆனால் அவளே குற்றத்தை ஒப்புக் கொண்டபின் நான் என்ன செய்வது? வேறு வழியில்லாமல் அவளைக் கைது செய்தேன். அவளுடைய வாக்குமூலத்தைப் பெற்றுக் கொள்ள விரும்புவதாகக் கூறினேன்.

சந்திரா சொன்னாள் :

சென்னையிலிருந்து சுமார் இருபது மைல் தூரத்தில் இருக்கும் காட்டுப்பாக்கம் என்ற கிராமத்தில் நான் பிறந்து வளர்ந்தேன். காட்டுப்பாக்கம் என்ற பெயர் அந்தக் கிராமத்துக்கு மிகவும் பொருத்தம். கிராமத்துக்குப் பக்கத்தில் நிஜமாகவே ஒரு காடு இருந்தது. ஆனால் அந்தக் காடு எனக்கு முட்புதர்களும், விஷ ஜந்துக்களும் நிறைந்த காடாகத் தோன்றவில்லை. நான் துள்ளித் திரிந்து விளையாடும் சோலையாக விளங்கியது. அதன் நடுவே ஒரு தாமரைத் தடாகம் ஒருவர் கண்ணிலும் படாமல் ஒளிந்து கொண்டிருந்தது. எனக்கு மட்டும் அது தன் இயற்கை அழகை வெளிப்படுத்தியது.

இளம் வயதிலேயே நான் என் தகப்பனாரை இழந்து விட்டேன். அதற்காக அழ வேண்டும் என்று கூடத் தெரியாத வயது. என் தாயார் அழுவதைப் பார்த்து நானும் அழுதேன். எதற்கு அழுகிறோம் என்று தெரியாமலே விம்மி விம்மி, கண் சிவக்க அழுதேன்.

ஏழை மக்களுக்கு இலவச வைத்திய உதவி அளிப்பதற்காகச் சென்னை மருத்துவக் கல்லூரியிலிருந்து காட்டுப்பாக்கத்துக்கு ஒரு மாணவர் கூட்டம் வந்தது. என்னுடைய வயதான தாயாரைப் பரிசோதிப்பதற்காக அழைத்துச் சென்ற நான் சியாமசுந்தரின் மனத்தைக் கவர்ந்தேன்.

ஒவ்வொரு வாரமும் வைத்திய உதவி அளித்து முடிந்ததும் அவர் தாமரைத் தடாகத்துக்கு வருவார். அவர் வரவை ஆவலுடன் எதிர்பார்த்துக் காத்திருப்பேன். இனந் தெரியாத ஒரு சக்தி என்னை அவரிடம் கவர்ந்து இழுத்தது. அவருடைய அழகிய உடையணிந்த, ஆஜானுபாகுவான தோற்றமும், அகன்ற கண்களும், நெற்றியில் சுருள் சுருளாக விழுந்த கேசமும் என் நினைவில் எப்போதும் இருந்து வந்தன.

சியாமசுந்தரின் படிப்பு முடிந்தது. மேல் படிப்புக்காக அவர் அயல் நாட்டுக்குப் பயணமானார். அவர் விடைபெற்றுக் கொண்ட போது நான் கதறி அழுதேன். ஆனால் அழுது என்ன பயன்? அவர் போய் விட்டார். என்னை மறக்கமாட்டார், அடிக்கடி கடிதம் எழுதுவார் என்று எண்ணி ஏமாந்தேன். எக்காரணத்தினாலோ அவர் எனக்குக் கடிதம் எழுதவே யில்லை. நாட்கள் செல்லச் செல்ல அவர் என்னை அடியோடு மறந்து விட்டார் என்பது ஊர்ஜிதமாகி விட்டது.

## 2

தாமரைத் தடாகத்தில் அன்றலர்ந்த ஒரு தாமரையைச் சுற்றி ஒரு வண்டு வட்டமிட்டுக் கொண்டிருந்தது. கரையில் உட்கார்ந்து நான் அதைப் பார்த்துக் கொண்டிருந்தேன். 'சியாமசுந்தருக்கு என்னிடம் ஏற்பட்ட உணர்ச்சி இத்தகையதுதானோ?' என்ற எண்ணம் என் மனத்தில் உண்டாயிற்று. சிறிது நேரம் 'ஙொய்' என்ற சத்தத்துடன் அந்த வண்டு தாமரையை வட்டமிட்டது பின்னர் பறந்து போயிற்று. அதுபறந்து சென்ற திசையை நோக்கித் திரும்பினேன். திடுக்கிட்டுப் போனேன். இது வரையில் நான் பார்த்தறியாத வேற்று மனிதர் என்னைக் கூர்ந்து கவனித்துக் கொண்டிருந்தார்.

''சற்று நேரம் முன்னம் இருந்ததுபோலவே இருங்கள். இந்தப் படத்தை எழுதி முடித்து விடுகிறேன்'' என்று அந்த மனிதர் பணிவாகக் கேட்டுக் கொண்டார்.

சற்று நேரம் பொறுத்து அருகே சென்று பார்த்தேன். படம் முற்றுப் பெறவில்லை. ஆனால் அந்தச் சூழ்நிலையைத் தத்ரூபமாக அவர் வரைந்திருந்தார்.



கலைவளர் நாடக மன்றத்தார் பல சமூக நாடகங்களை நடத்தி நாடகக் கலைக்கும் மக்களுக்கும் நல்ல முறையில் தொண்டாற்றி வருகிறார்கள். அவர்களுடைய நான்காவது தயாரிப்பான 'மலர்ந்த வாழ்வு' என்னும் நாடகம் திரு ஆர். சபேசன் எம். ஏ. அவர்கள் முன்னிலையில் சென்னை சௌந்தர்ய மஹாலில் சென்ற வாரம் சிறப்பாக நடைபெற்றது. மேற்படி நாடகத்தில் கலந்து கொண்டு நடித்த நடிகர்களையும், நாடகக் கதை எழுதிய திரு சே. வேலன் அவர்களையும் இதர நாடக மன்ற நிர்வாகிகளையும் படத்தில் காணலாம்.

---

''ஓவியப் போட்டி ஒன்று நடைபெற இருக்கிறது. அதில் நான் கலந்து கொள்ளப் போகிறேன். இந்தப் படத்தை அனுப்பி வைக்கத் தங்கள் அனுமதி தேவை'' என்றார் ஓவியர் குமாரசாமி.

''தாராளமாக அனுப்புங்கள். தாங்கள் எழுதிய படத்துக்கு என்னிடம் அனுமதி கேட்க வேண்டிய அவசியம் இல்லையே?''

குமாரசாமி எழுந்தார். இரண்டு அடி எடுத்து வைத்ததும் தடுமாற ஆரம்பித்தார். நான் சட்டென்று அவரைத் தாங்கிப் பிடித்துக் கொண்டேன். அவரது கால்களில் ஒன்று ஊனமடைந்திருக்கிறது என்பதை அப்போதுதான் உணர்ந்தேன். படம் வரையும் உபகரணங்களை நான் பெற்றுக் கொண்டு அவரைப் பிடித்து மெல்ல அந்தக் கரடுமுரடான காட்டுப் பாதை வழியே கிராமத்துக்கு அழைத்துச் சென்றேன்.

கிராமத்தை அடைந்ததும் ''போய் வருகிறேன்'' என்றார் குமாரசாமி.

''வீட்டுக்கு வந்து விட்டுப் போங்கள். படத்தை அம்மா பார்த்தால் சந்தோஷப்படுவாள்'' என்றேன்.

அவர் சம்மதித்தார்.

படத்தைப் பார்த்து விட்டு என் தாயார் ''சந்திரா எவ்வளவு அழகாயிருக்கிறாள் என்பது இப்போதுதான் தெரிகிறது'' என்றாள்.

இரண்டு நாட்கள் குமாரசாமி அக்கிராமத்தில் தங்கியிருந்தார். ஓவியம் பூர்த்தியாயிற்று. அவர் விடைபெற்றுச் சென்றபோது என்னுடைய மனத்தையும் பின்னோடு எடுத்துச் சென்று விட்டார். அவரிடம் எனக்கு முதலில் ஏற்பட்டிருந்த இரக்க உணர்ச்சி விரைவில் அன்பாக மாறிப் பின்னர் காதலாகப் பரிணமித்தது.

சுமார் ஒரு மாத காலத்துக்குப் பிறகு மீண்டும் குமாரசாமியைத் தாமரைத் தடாகத்துக்கு அருகே சந்தித்தபோது என் கண்களிலிருந்து கண்ணீர் ஆறாகப் பெருகியது.

அவரும் என்னை மறந்துவிட்டாரோ என்று எண்ணினேன். என் மனத்தை அவருக்குத் திறந்து காட்டாததற்காக என்னை நானே நொந்து கொண்டிருந்தேன்.

இப்போது திடீரென்று அவர் என்னை மறக்கவில்லை என்றும் என்னைக் காண மீண்டும் வந்துள்ளார் என்றும் அறிந்தபோது உணர்ச்சி வெள்ளம் கண்ணீராகப் பெருக்கெடுத்தது.

''ஓவியப் போட்டியில் எனக்கு முதல் பரிசு கிடைத்தது என்ற செய்தியைக் கூறி நீ கலகலவென்று சிரிப்பதைக் காண வந்தேன்'' என்றார் அவர்.

அவர் எதிர்பார்த்ததற்கு மாறாக என்னுடைய விம்மலும் அழுகையும் அதிகமாயிற்றே ஒழியக் குறையவில்லை.

குமாரசாமி என் கையை அன்போடு பிடித்துக் கொண்டு, ''இனி நான் உன்னை விட்டுப் பிரியவே மாட்டேன்'' என்று கூறிய பின்னர்தான் என் அழுகை ஓய்ந்தது.

## 3

என்னைத் திருமணம் செய்து கொண்ட பின் குமாரசாமி பொறுப்புள்ள மனிதராக மாறினார். இதுவரை யார் கீழும் வேலை செய்து அறியாத அவர் இப்போது ஒரு பிரபல பத்திரிகையில் ஓவியராக வேலைக்கு அமர்ந்தார். தன் மகள் கவலையற்று இன்பமாக வாழ்க்கை நடத்துவதைப் பார்த்து விட்டு என் தாயார் நிம்மதியாகக் கண்ணை மூடினாள்.



என் கணவரது அரவணைப்பிலே நான் ஆறுதல் அடைய முயற்சி செய்தேன்.

இரண்டு வருஷங்கள் சென்றன. ஒரு நாள் குமாரசாமி காரியாலயத்துக்குச் சென்றிருந்த சமயம் வாசல் கதவை யாரோ தட்டும் சத்தம் கேட்டது. 'யாராக இருக்கும்' என்று யோசித்துக் கொண்டே நான் கதவைத் திறந்தேன். எனக்குத் தூக்கிவாரிப் போட்டது. டாக்டர் சியாமசுந்தர் அங்கு நின்று கொண்டிருந்தார். என்னுடைய வரவேற்புக்குக் காத்திராமல் அவர் வேகமாக உள்ளே நுழைந்தார்:

அவர் பேச ஆரம்பித்து ஏதேதோ இடைவிடாமல் பேசிக் கொண்டே இருந்தார். அவர் கூறியது ஒன்றும் எனக்குப் புரியவில்லை. அவரைப் பார்த்ததிலிருந்தே பிரமை தட்டியது போல் உட்கார்ந்திருந்தேன். ஆனால் ஒரே ஒரு விஷயம் மட்டும் தெளிவாகத் தெரிந்தது. அது சியாமசுந்தர் என்னை இன்னமும் நேசிக்கிறார் என்பதுதான்.

அவர் போய் விட்டார். அவரை மீண்டும் நான் சந்தித்தது என் கணவருடன் சேர்ந்துதான். என் கணவரே அவரை ஒரு நாள் அழைத்து வந்தார்.

"இவர்தான் டாக்டர் சியாமசுந்தர். மருத்துவக் கல்லூரியில் இவர் சேருவதற்கு முன்னால் நாங்கள் இருவரும் ஒன்றாகப் படித்தோம்" என்று என் கணவர் அவரை எனக்கு அறிமுகம் செய்து வைத்தார்.

நான் முகமன் கூறிவிட்டு உள்ளே சென்று விட்டேன். அவர் போன பிறகு என் கணவரிடம் சகல விவரங்களையும் தெரியப்படுத்தி விட வேண்டும் என்று நிச்சயித்தேன். ஆனால் அதற்குத் தைரியம் வரவில்லை. அப்படிச் சொன்னால், என் மீது அவர் கொண்டிருக்கும் அன்பு குறைந்து விடுமோ என்று அஞ்சினேன்.

நான்கு நாட்களுக்குப் பிறகு என் கணவர் வேலை பார்த்து வந்த காரியாலயத்திலிருந்து ஒரு பையன் வந்தான். தன் அலுவல்களைக் கவனித்துக் கொண்டிருக்கையிலேயே என் கணவருக்குத் திடீரென்று தாங்க முடியாத வயிற்றுவலி கண்டதாம். டாக்டர் சியாமசுந்தருக்கு உடனே டெலிபோன் செய்தாராம். சியாமசுந்தர் ஆஸ்பத்திரியில்தான் இருந்தார். 'உடனே புறப்பட்டு வாருங்கள். உங்களுக்காக இங்கு காத்திருந்து சிகிச்சை செய்கிறேன்' என்றார். உடனே என் கணவர் ஆஸ்பத்திரிக்கு அழைத்துச் செல்லப்பட்டார்.

இந்த விவரங்களைத் தெரிந்து கொண்டதும் ஒரு கணமும் தாமதியாமல் புறப்பட்டு விட்டேன். ஆஸ்பத்திரியில் நான் என் கணவரைப் பார்க்க முடியவில்லை. உடனே சஸ்திர சிகிச்சை செய்ய வேண்டும் என்று சியாமசுந்தர் தீர்மானித்ததால் ஆப்பரேஷன் தியேட்டருக்கு அவர் அழைத்துச் செல்லப்பட்டார். ஆபரேஷன் நடந்து கொண்டிருந்தது.

ஆப்பரேஷன் தியேட்டர் வாசலில் உட்கார்ந்து என் இஷ்ட தெய்வங்களை யெல்லாம் பிரார்த்தித்துக் கொண்டிருந்தேன்:

இப்படிப் பல யுகங்கள் காத்திருந்த பிறகு ஆபரேஷன் தியேட்டர் கதவு திறந்தது. ஒரு வண்டியைத் தள்ளிக் கொண்டு வந்தார்கள். வண்டியில் ஒரு உருவம் படுக்க வைக்கப்பட்டிருந்தது. ஆனால் அதனைப் பார்க்க முடியவில்லை. தலையிலிருந்து கால் வரை வெண்மையான துணியினால் போர்த்தப்பட்டிருந்தது.

வண்டியின் பின்னால் மெல்ல நடந்து வந்த நர்ஸ், என்னைப் பரிதாபமாகப் பார்த்து விட்டுத் தலையை அசைத்தாள். "டாக்டர் சியாமசுந்தர் தன்னால் இயன்றவரை முயற்சி செய்து பார்த்தார், அம்மா!" என்று கூறி விட்டு மேலே நடந்தாள்.

## 4

என் கணவர் இறந்துபோய் ஒரு மாத காலம் ஆகிவிட்டது. நான் இந்தச் சென்னை மாநகரில் தன்னந் தனியாக விடப்பட்டேன். இந்த ஒரு மாத காலமும் டாக்டர் சியாமசுந்தருக்கும் எனக்குமிடையே இருந்த தொடர்பைப் பற்றி என் கணவரிடம் சொல்லாமல் இருந்ததற்காக என்னை நானே நொந்து கொண்டேன்.

அதை அவருக்குத் தெரிவித்திருந்தால் பரிசோதனைக்குச் சியாமசுந்தரிடம் சென்றிருக்க மாட்டார். சியாமசுந்தரைத் தவிர வேறு யாரிடமாவது பரிசோதனைக்குச் சென்றிருந்தால் அவர் நிச்சயம் குணம் அடைந்திருப்பார். இந்த விசித்திர எண்ணம் என் மனத்தில் தோன்றி உறுதிப்பட்டது.

இப்படி என் மனம் வேதனைப்படுகையில் டாக்டர் சியாமசுந்தர் என்னைக் காண வந்தார். வரும்போது ஒரு பெட்டியையும் எடுத்துக் கொண்டு வந்தார். அதைத் திறந்ததும் அதனுள் இருந்த ஒரு வைரமாலை ஜன்னல் வழியே வந்த சூரிய ஒளிபட்டுப் பளிச் சென்று மின்னியது.

டாக்டர் விதவா விவாகத்தில் தமக்குள்ள நம்பிக்கையைத் தெரிவித்து விட்டு என்னை

மணந்து கொள்ளத் தயாராக இருப்பதாகவும் தெரியப்படுத்தினார்.

நான் கண்களில் நீர் மல்க, ''தயவுசெய்து என்னைத் துன்புறுத்தாதீர்கள். போய் விடுங்கள்'' என்றேன்.

'' சந்திரா! உன்னை நான் துன்புறுத்த வரவில்லை. இருளடைந்து போன உன் வாழ்வுக்கு நானும் ஒரு வகையில் பொறுப்பாளிதான். அந்த இருளை நீக்கி மீண்டும் உன் வாழ்வில் ஒளி வீசச் செய்வதும் என் பொறுப்பாக இருக்கட்டும். கண்ணைத் துடைத்துக்கொள்.''

''உண்மைதான். முதலில் உங்களை நம்பி வாழ்ந்த ஒரு அபலைப் பெண்ணைக் கைவிட்டுச் சென்றீர்கள். அவளை அடியோடு மறந்து போனீர்கள். அப்போதே ஒரு முறை அவள் வாழ்வு இருண்டு போய் விட்டது. மீண்டும் அதில் ஒளிவீசச் செய்ய ஒரு உத்தமர் அவளுக்குக் கிடைத்தார். அவரையும் ஈவிரக்கம் இல்லாமல் கொன்று விட்டீர்கள். இப்போது அவள் வாழ்வில் ஒரே இருள். ஒரே சூன்யம். இனி அதில் ஒளிக்கு இடமேயில்லை.''

நான் கூறியதின் பொருளை உணரச் சியாமசுந்தருக்குச் சிறிது நேரம் ஆகி இருக்கவேண்டும். அந்தச் சில விநாடிகள் அங்கு ஒரே நிசப்தம் நிலவியது. அடுத்த கணம் சியாமசுந்தர் ரௌத்திராகாரம் அடைந்து விட்டார். ''என்ன சொன்னாய்? புனிதமான வைத்தியத் தொழிலுக்கு மாசு கற்பிக்கிறாயா?'' என்று கேட்டபடியே ஓங்கி என் கன்னத்தில் அறைந்து விட்டார். என் தலை சுழன்றது!

எனக்கு மீண்டும் நினைவு வந்தபோது டாக்டர் அங்கு இல்லை. அவர் கொண்டு வந்திருந்த வைரமாலை மட்டும் இருந்தது. அதைப் பார்த்ததும் எனக்கு ஆத்திரம் அதிகமாயிற்று. என் எண்ணம் ஊர்ஜிதமாயிற்று.

வைரமாலையைச் சியாமசுந்தர் முகத்திலே வீசி எறிந்து விட்டு வந்து விடுவது என்றும் பின்னர் போலீஸாருக்குத் தகவல் கொடுப்பது என்றும் நான் தீர்மானித்தேன்.

நகைப் பெட்டியைக் கையில் எடுத்துக் கொண்டு வீட்டை விட்டு வெளியேறினேன். ஒரு டாக்ஸியை அமர்த்திக்கொண்டு டாக்டர் வீட்டை அடைந்தேன். உள்ளே சென்றதும் டாக்டர் படுக்கையில் படுத்துத் தூங்குவதையும் படுக்கையின் அருகில் ஒரு துப்பாக்கி இருப்பதையும் பார்த்தேன்.

அதை எடுத்து அவர் நெற்றியில் சுட்டேன். துப்பாக்கி இருந்த இடத்தில் வைரமாலையை வைத்துவிட்டு வெளியேறினேன்.

உணர்ச்சி வசப்பட்டு நான் செய்த பாதகச் செயலுக்காக என்னை நானே தண்டித்துக் கொள்ள எண்ணித் துப்பாக்கியையும் கையில் எடுத்துக்கொண்டு, காத்திருந்த டாக்ஸியில் ஏறி வீடு வந்து சேர்ந்தேன்.

இங்கு வந்த பிறகு என்னை நானே சுட்டுக் கொள்ளத் தைரியம் வரவில்லை. இதற்குள்ளாக நீங்கள் என்னைக் காண வந்தீர்கள்.

மாதவன் சொல்கிறார்:

சந்திரா வாக்குமூலத்தைக் கூறி முடித்து விட்டாள். அதைக் கேட்டுக் கொண்டே வந்த நான் அதற்குள்ளாக என் மனத்தை அவளுக்குப் பறி கொடுத்து விட்டேன்.



அவள்தான் தன் வாழ்க்கையில் எப்படிப்பட்ட துன்பங்களை அனுபவித்திருக்கிறாள்? எப்படியாவது அவளுக்கு விடுதலை தேடித் தந்து அவள் வாழ்வை மலரச் செய்ய வேண்டும் என்று உறுதி செய்து கொண்டேன்.

ஆனால் 'நான் செய்யக் கூடியது என்ன?' என்று யோசித்துப் பார்த்தபோது 'ஒன்றும் செய்வதற்கில்லை' என்ற பதில்தான் கிடைத்தது. தான் கொலை செய்ததாகச் சந்திராவே ஒப்புக் கொண்டு விட்டாள். அப்படியிருக்கும் போது அவள் விடுதலை அடைவதற்கு போலீஸ் அதிகாரியாகிய நான் என்ன செய்ய முடியும்? வேண்டுமானால், 'அளவற்ற மனவேதனையின் காரணமாக அவள் இக்காரியத்தைச் செய்தாள்' என்று சொல்லியும், அவள் பெண்ணாக இருப்பதைக் காரணம் காட்டியும் அவள் மீது பச்சாத்தாபம் ஏற்படும்படி செய்யலாம். அதன் மூலம் தண்டனையைக் குறைக்க முடியும். அவ்வளவுதான்.

இதை அவளிடம் தெரியப்படுத்தியபோது சந்திரா பதறிப் போனாள். அவள் கூறிய பதில் என்னைத் திகைக்கச் செய்தது. ''அப்படியேதும் செய்து விடாதீர்கள். உங்களுக்கு உண்மையில் எனக்கு உதவி செய்ய வேண்டும் என்ற விருப்பம் இருக்குமானால் அனைவருக்கும் என்மீது வெறுப்பு ஏற்படும்படி செய்யுங்கள். நிச்சயம் மரண தண்டனை கிடைக்க வேண்டும் என்ற முறையில் நடந்து கொள்ளுங்கள். நான் இறந்து போவதையே விரும்புகிறேன்'' என்றாள்.

திகைப்பு ஒருவாறு நீங்கியதும் யோசித்துப் பார்த்ததில் ஒரு விஷயம் எனக்குத் தெளிவாகத் தெரிந்தது. சந்திராவின் மனம் அளவற்ற வேதனை அடைந்திருக்கிறது. வாழ்க்கையில் அவளுக்கு வெறுப்பு ஏற்பட்டு விட்டது. அவள் இறந்து போவதையே விரும்பினாள். அதனால் மரண தண்டனை கிடைக்கும் என்ற எண்ணத்துடனே வாக்குமூலத்தை அமைத்திருக்

கிறான். ஆகவே அந்த வாக்குமூலம் முழுவதும் உண்மை அல்ல என்பது மட்டும் நிச்சயம். அவனுடைய வாக்குமூலத்தை மீண்டும் ஒரு முறை படித்தேன். அப்போது மிக முக்கியமான ஒரு விஷயம் பளிச்சென்று தெரிந்தது.

'341'க் கூப்பிட்டு, ''வைரமாலை என்ன ஆயிற்று?'' என்று கேட்டேன்.

341 திரு திருவென்று விழித்தான். ''வைர மாலையா? எந்த வைரமாலை ஸார்?'' என்றான்.

நான் சடார் என்று எழுந்தேன். எழுந்த வேகத்தில் நான் உட்கார்ந்திருந்த நாற்காலி பின்னுக்கு நகர்ந்து கீழே உருண்டது. என் நெற்றியில் வியர்வைத் துளிகள் அரும்பின. நெஞ்சு படபடவென்று அடித்துக் கொள்ள, ''என்ன வைரமாலை என்று கேட்கிறாய், முட்டாள்! சியாமசுந்தர் சந்திராவுக்குப் பரிசளித்த மாலை. டாக்டர் முகத்திலே வீசி எறிவதற்காக, சந்திரா திருப்பி எடுத்துச் சென்ற மாலை'' என்றேன்.

''இல்லை ஸார்! அது டாக்டர் வீட்டில் இல்லை ஸார்! துப்பறியும் நிபுணர்கள் வீடு முழுவதும் சோதனை போட்டு விட்டார்களே ஸார்! எனக்கு நிச்சயம் தெரியும் ஸார்!''

உடனே அவனையும் அழைத்துக் கொண்டு ஆனந்தன் வீட்டுக்கு விரைந்தேன்.

## 2

வைரமாலை எங்கே என்று கேட்டதுமே ஆனந்தன் முகம் வெளிறிப் போய்விட்டது. அவன் பதில் கூறும் முன்னமே அவன் மனைவி ஓடிவந்து நகைப் பெட்டியை நீட்டினாள். ''நான் நீண்ட நாட்களாகச் சேர்த்து வைத்திருந்த பணத்திலிருந்து வாங்கினேன் என்று கூறினார். நான் அப்போதே நம்பவில்லை. தயவு செய்து இதைத் திருப்பி எடுத்துக் கொள்ளுங்கள். அவரை ஒன்றும் செய்யாமல் விட்டு விடுங்கள்'' என்று கதறி விட்டாள்.

ஆனந்தனை மிரட்டியதில் அவன் உண்மையைச் சொல்லி விட்டான்.

''சந்திராவை அவள் வீட்டில் விட்டுவிட்டுத் திரும்பவும் நான் டாக்டர் வீட்டுக்குச் சென்றேன். அவர் படுக்கையில் இறந்து கிடந்தார். மேஜைமீது வைரமாலையும் ஒரு கடிதமும் இருந்தன. கடிதத்தைப் படித்துப் பார்த்தேன். டாக்டர் மனமுடைந்து போய்த் தற்கொலை செய்து கொள்வதற்கு முன்னால் எழுதிய கடிதம் அது. கடிதத்தையும் வைரமாலையையும் எடுத்துக் கொண்டு வந்து விட்டேன்'' என்றான்.

''வைரமாலையைத்தான் எடுத்துக் கொண்டு வந்தாயே, கடிதத்தையும் ஏன் கொண்டு வந்தாய்?'' என்று கேட்டேன்.

''நான் திருடியதை மறைக்க அப்படிச் செய்து விட்டேன், ஸார்! அக் கடிதம் இல்லாது போனால் கொலை நடந்ததாகப் போலீஸார் எண்ணுவார்கள். கொலைக் குற்றத்தை நிரூபிப்பதில் தங்கள் கவனத்தைச் செலுத்துவார்கள். அப்போது திருட்டுப் போனதைக் கவனிக்க மாட்டார்கள் என்று எண்ணி விட்டேன், ஸார்!''

''உங்கள் நம்பிக்கை வீண் போகவில்லை, ஆனந்தன்! போலீஸார் முதலில் ஏமாந்து தான் போனார்கள்'' என்றேன் நான்.

நல்ல வேளையாக டாக்டரின் கடிதத்தை ஆனந்தன் அழிக்காமல் வைத்திருந்தான். அதையும் பெற்றுக் கொண்டு திரும்பினோம்:

''எனக்கு ஒரே குழப்பமாயிருக்கிறது ஸார்! உண்மையில் என்னதான் நடந்தது?'' என்று 341 கேட்டான்.

''அதைப் புரிந்து கொள்வதில் சிரமமே இல்லை. சந்திரா கூறிய வாக்குமூலத்தில் அவள் மூர்ச்சித்து விழுந்ததுபற்றிக் கூறினாள் அல்லவா? அதுவரை உண்மை. அதன் பிறகு அவள் கற்பனை செய்து சொல்லியிருக்கிறாள். மூர்ச்சை தெளிந்ததும் சந்திரா தன் தவற்றை உணர்ந்து கொண்டு சியாமசுந்தரிடம் மன்னிப்பு கேட்கத்தான் போனாள். அங்கு அவர் இறந்து கிடப்பதையும், அவர் கடிதத்தையும் அவர் கரத்தில் சிக்கியிருந்த துப்பாக்கியையும் பார்த்தாள். நகைப் பெட்டியைக் கடிதத்தின் பக்கத்தில் வைத்துவிட்டுத் துப்பாக்கியை எடுத்துக் கொண்டாள். ஆனால் அங்கேயே தன் உயிரை மாய்த்துக்கொள்ள விரும்பவில்லை. தன் வீட்டுக்குச் சென்று தற்கொலை செய்து கொண்டால், டாக்டர் இறந்தது பற்றியும் இவள் இறந்தது பற்றியும் ஒன்று சேர்த்துப் பேச மாட்டார்கள். அவதூறுக்கு இடமில்லை. வீடு சென்ற பிறகு தன்னைத்தானே மாய்த்துக் கொள்ள அவளுக்குத் தைரியம் வரவில்லை. இதற்குள் நாம் போய் அவளை விசாரித்தோம். சியாமசுந்தரின் கடிதத்தைப் பற்றியோ வைரமாலையைப் பற்றியோ நாம் கேட்கவில்லை. நமக்கே அது பற்றித் தெரியாதல்லவா? அதற்கு மாறாக அவள் கொலை செய்தாள் என்று குற்றம் சாட்டினோம். மரண தண்டனை பெற்று இறந்து போக அவளுக்கு ஒரு சந்தர்ப்பம் கிடைத்தது. குற்றத்தை ஒப்புக் கொண்டாள்.''

341 ஒரு பெருமூச்சு விட்டான். ''கதை சுபமாக முடிந்து விட்டது சார்! கல்யாணம் ஒன்றுதான் பாக்கி'' என்றான்.

''அதுவும் விரைவில் நடந்து விடும். கவலைப் படாதே'' என்றேன் நான் உற்சாகத்தோடு.

## 3

கடற்கரை மணலில் அமர்ந்து கொண்டிருந்தேன். கடல் அலைகள் பொங்கி எழுந்து வந்து என் கால்களை நனைத்தன. சந்திராவின் உள்ளமும் என் உள்ளமும் கூட முன்பு இப்படித்தான் கொந்தளித்துக் கொண்டிருந்தன. ஆனால் அவள் ஒரு சேவா சதனத்தில் சேர்ந்து விட்டாள் என்று அறிந்தேன். இறந்து போவதிலே அவள் அடைய எண்ணிய மன அமைதியை ஆதரவற்ற பெண்களுக்குத் தொண்டாற்றுவதிலே அடைந்தாள். இதையெல்லாம் தெரிந்து கொண்டதும் முன்பு இருந்த நிலை மாறி விட்டது. கொந்தளிப்பு அடங்கி விட்டது. எங்கள் இருவரது மனத்திலும் இப்போது தெய்விகமான அமைதி குடி கொண்டிருந்தது. ஆனாலும் அந்தப் பழைய நினைவுகள் எப்போதாவது மனத்தில் ஒன்றன் பின் ஒன்றாக அலைபோல எழத்தான் செய்தன.

''திரைகடல் தூங்காதோ,—அம்மா!
அலை ஓயாதோ!''

என்ற பாட்டு காற்றிலே மிதந்து வந்தது.

Printed and Published by T. Sadasivam at the Kalki Press, Kilpauk, Madras-10
for the Proprietors Messrs Bharathan Publications Private Limited
Managing Editor: T. Sadasivam.



# டாக்டரின் குறிப்புக்கு ஒப்பான நான்கு மருந்துகள் சேர்ந்துள்ள

# அனஸின்

## நான் உபயோகிக்கிறேன்

- க்வினைன் ஸல்பேட்
- பினஸிடின்
- காபின்
- அஸிடில்ஸாலிஸிலிக் ஆஸிட்

தலைவலி, ஜலதோஷம், ஜுரம், பல்வலி, அல்லது தசைவலி இவைகளின், முதல் அறிகுறிகள் தென்பட்டவுடனேயே நான் 2 'அனஸின்' வில்லைகளை உட்கொள்ளுகிறேன். அனஸினைக்காட்டிலும் வேறு ஒன்றும் விரைவில் வலியை நிறுத்துவதில்லையென்றும், வேறு எதைக்காட்டிலும் 'அனஸின்' அபாயமற்றதென்றும் கண்கூடாகப் பார்த்துள்ளேன். எவ்வித வலியையும், துரிதமாயும், அபாயமின்றியும், நிச்சயமாயும் அகற்றும். ஒரு டாக்டரின் குறிப்பு போல், நான்கு மருந்துகள் விஞ்ஞான முறையில் அனஸினில் சேர்க்கப்பட்டுள்ளன. நீங்களும் உங்கள் வீட்டில் எப்பொழுதும் 'அனஸின்' வைத்திருங்கள்.



# அனஸின்

## நான்கு மருந்துகளின் கலவை

ஒரு பாக்கட் விலை 12 நயாபைசா

Registered User:

GEOFFREY MANNERS & COMPANY PRIVATE LTD.

WILL NOT UPSET THE STOMACH



DOES NOT HARM THE HEART

**ANACIN**

TABLETS

Made in India by

GEOFFREY MANNERS & COMPANY PRIVATE LIMITED

MAGNET HOUSE, DOUGALL ROAD, BOMBAY

WHITEHALL PHARMACAL COMPANY, NEW YORK, U.S.A.

